# சுலபா

நா. பார்த்தசாரதி



தமிழ்ப் புத்தகாலயம்

# சுலபா

நா. பார்த்தசாரதி





தமிழ்ப் புத்தகாலயம்
58, டி.பி.கோயில் தெரு, N.K.T.பெண்கள் பள்ளி எதிரில்
திருவல்லிக்கேணி, சென்னை-600 005

சுலபா (சமூக நாவல்கள்)
முதற்பதிப்பு : ஏப்ரல் 1988
விலை ரூ. 20-00

SULABA
tamil social novellets
By NAA. PARTHASARATHY

First Edition : April 1988
256 Pages
18X12.5.Cms
10 Point Letters
10. 7. kg. White Printing Paper
Box Board Binding
Pooncholai achagam
Madras—600 005
TAMIL PUTHAKALAYAM
58, T. P. KOIL STREET
Triplicane, Madras-600 005
Price : Rs. 20-00

அச்சிட்டோர் :

பூஞ்சோலை அச்சகம், 58, டி. பி. கோயில் தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை-5,

# இந்தப் புத்தகம்

நாவலாசிரியர் நா. பார்த்தசாரதி அவர்கள் 13-12-1987ல் அமரரான பிறகு வெளிவரும் முதல் நூல் இது. அவரது புத்தகங்களைத் தொடர்ந்து வெளியிடும் வேளையில், அவர் எழுதி இன்னும் நூல் வடிவம் பெருத படைப்புகளனைத்தையும் தொகுத்து தனித்தனி நூலாக வெளியிட முனைகிறேம்.

குறுநாவல்களே நாவல்களாகி வருகிற இந்த யந்திர உலகில் நா. பா. வின் இரு (குறு) நாவல்கள் அடங்கிய தொகுப்பாக இந்நூல் வெளிவருகிறது. நா. பா. வின் நடையிலும் மாற்றம் கொண்ட நாவல்களிவை.

தனது படைப்புக்கள் மூலம் தமிழ் உலகில் நா. பா. என்றும் நின்று வாழ்கிருர் எனும் உணர்வுடன் இந்நூலை வெளியிடுகிறேம்.

அ. கண்ணன்

# நா. பா. வின் நாவல்கள்

| | | |
|---|---|---|
| குறிஞ்சி மலர் | 35 | 00 |
| பொன் விலங்கு | 42 | 00 |
| சமுதாய வீதி (சாகித்ய அகாதமி பரிசு பெற்றது) | 20 | 00 |
| துளசி மாடம் (ராஜா சர் அண்ணாமலை இலக்கியப் பரிசு பெற்றது) | 26 | 00 |
| சாயங்கால மேகங்கள் (தமிழ்நாடு அரசின் முதற்பரிசு பெற்றது) | 20 | 00 |
| பாண்டிமா தேவி | 39 | 00 |
| மணிபல்லவம் | 55 | 00 |
| முள்வேலிகள் | 16 | 00 |
| புதுமுகம் | 10 | 00 |
| மூலக்கனல் | 13 | 50 |
| நிசப்த சங்கீதம் | 12 | 00 |
| ராணி மங்கம்மாள் | 11 | 00 |
| பொய்ம் முகங்கள் | 10 | 00 |
| பிறந்த மண் | 10 | 50 |
| நெற்றிக் கண் | 13 | 50 |
| நெஞ்சக் கனல் | 10 | 00 |
| மலைச்சிகரம் | 4 | 50 |
| ஆத்மாவின் ராகங்கள் | | |

# சுலபா

## 1

சுலபாவுக்குக் காரணமே புரியாமல், சலிப்பாகவும், எரிச்சலாகவும் இருந்தது. எல்லாப் புகழுரைகளும் வர்ணனைகளுமே பொய்யாகவும், புளுகுகளாகவும் தோன்றின.

தன்னுடைய காரியதரிசி கொண்டுவந்து கொட்டிய கடிதக் குவியல்களில் ஒன்றிரண்டை எடுத்துப் படித்ததுமே திகட்டியது. அலுப்பூட்டியது. குமட்டிக் கொண்டு வந்தது. 'அழகுப் பெட்டகமே! ஆரணங்கே! பழகுதமிழே! பைங்கிளியே...உன்னை மணந்து கொள்ளத் துடிக்கிறேன்'—என்று புலம்பியது முதற் கடிதம்.

'வாழ்ந்தால் வசந்தம், படத்தில் கதாநாயகியாக வந்து கல்லூரி வகுப்பறையில் நீங்கள் நடித்திருக்கும் காட்சி 'சுபர்ப்' அந்தக் கல்லூரியில் நான் ஒரு மாணவனாக இல்லையே என்று ஏங்குகிறேன்'

—என்று எழுதியிருந்தான். அடுத்த இரசிகன். ஏங்கவும், உருகவும், செய்யாத இயல்பான கடிதங்கள் மிக மிகக் குறைவாகவே இருந்தன. எல்லாக் கடிதங்களும் ஏங்கின அல்லது அவளுக்காக உருகின.

சினிமாவில் நடிக்க ஆரம்பித்த புதிதில் இப்படி நாலைந்து கடிதங்கள் தபாலில் கிடைத்தால் கூடப் போதை—புகழ்

மயக்கம்—தலை சுற்றியது. இன்னும் எழுதமாட்டார்களா என்று எதிர்பார்க்கத் தோன்றியது அன்று. இன்றோ மரத்துப் போய்விட்டது, படிக்கப் படிக்க வெறுப்பூட்டியது.

முதலில் பிடித்தவனையே தொடர்ந்து பிடிப்பதாலோ என்னவோ புகழும் ஒரு தொற்று நோயாகவே இருப்பது புரிந்தது. 'எபிடமிக்' என்று ஆங்கிலத்தில் சொல்லுவார்களே அப்படி ஒரே சமயத்தில் பல்லாயிரக் கணக்கான மக்களைப் பிடிக்கும் கொள்ளை நோய் வகைகளில் முதன்மையானது 'புகழ்' என்று அவள் எண்ணினாள். ஒருத்தரைப் பிடித்துப் போய்ப் புகழ ஆரம்பித்தால் கும்பல் கும்பலாகச் சேர்ந்து கொண்டு வந்து புகழ்ந்து தீர்க்கிறார்கள். உதாசீனம் செய்யத் தொடங்கினாலும் அப்படித்தான். வெகுஜனங்களின் உடல் நிலையைப் பாதிக்காமலே அவர்களையும், அவர்களால் புகழப் படுகிறவர்களையும் அவ்வப்போது, பாதிக்கும் நோய்களில் புகழும் பழியும் முக்கியமானவையாயிருந்தன. ஓர் ஆடு போகிற திசையில் கண்களை மூடிக் கொண்டு பின்னால் போகும் ஆட்டு மந்தையைப் போல முதல் நபர் புகழ ஆரம்பித்த ஆளை மூச்சு முட்டும்படி புகழ்ந்துகொண்டே இருக்கிறார்கள். அடுத்த ஆள் கிடைத்தவுடன் முந்திய ஆளை விட்டுவிடுகிறார்கள், புதிய ஆளைப் பிடித்துக் கொள்கிறார்கள். அப்புறம் அந்தப் புதிய ஆள் மாட்டிக் கொள்கிறான்.

அதிகப் பணமும், வசதிகளும், மரியாதையும் வருகிறவரை ஒவ்வொரு படியாகக் கால் ஊன்றி நடந்து நிதானமாக மேலே ஏற வேண்டியிருக்கிறது. பணம், வசதி, மரியாதை எல்லாம் வந்தபின், விநாடியில் ஐந்து மாடிகளுக்குத் தூக்கிக் கொண்டு போக முடிந்த அசுர வேகமுள்ள லிஃப்ட் கிடைத்து விடுகிறது. லிஃப்ட்டில் ஏறியபின் மேலே போகச் சிரமப்பட வேண்டிய அவசியமே இல்லை. ஏறி நிற்க இடம் கிடைத்தால் போக விரும்பிய உயரத்திற்குப் போய்க்கொண்டே இருக்கிறது, லிஃப்ட். நாமாக நிறுத்த முயன்றாலொழிய அது தானாக நிற்பதில்லை; நிறுத்தப்படுவதுமில்லை.

வாழ்வில் கடந்த ஒருடஜன் வருஷங்களாகப் 'பிரேக்டவுன்' ஆகாத ஒரு லிஃப்ட்டில் 'சுலபா' இருக்கிருள். அதுபாட்டுக்கு மேலே மேலே போய்க் கொண்டே இருக்கிறது. நிற்கவில்லை, மேலே போவது சலிப்பூட்டி வெறுப்பூட்டி எங்காவது அந்தரத்தில் 'நின்று தொலைத்தால் கூடத் தேவலையே, என்று அவளே நினைக்கிற அளவுக்குப் போரடிக்கிற வேகத்தில் அது மேலே மேலே போய்க்கொண்டிருந்தது. நின்ருலும் பிடிப்பதில்லை, நிற்காமலே போய்க்கொண்டிருப்பதும் பிடிப்பதில்லை; வாழ்க்கையே வேடிக்கைதான். ஓடினுல் நிற்க ஆசையாயிருக்கிறது. நின்ருல் ஓட ஆசையாயிருக்கிறது. ஓடிக்கொண்டே நிற்க முடிவதில்லை. நின்று கொண்டே ஓட முடிவதில்லை. ஏதாவது ஒன்றைத்தான் செய்ய முடிகிறது. இரண்டும் செய்ய இயல்வதில்லை;

தலைதெறிக்கிற வேகத்தில் ஓடிக்கொண்டிருக்கிறபோது திடுதிப்பென்று நிற்க முயல்வது கூட ஆபத்தானது. வேகத்துக்கு ரோஷம் அதிகம். தன்னிலிருந்து விலகி ஐந்தாம் படையாகிறவனைத் தடுமாறிக் கீழே வீழ்த்திவிட்டுத்தான் அது மேலே நகரும்?

வேகத்திலிருந்து விலகி நின்றுவிட முயனும் போதெல்லாம் குமாரி சுலபா தடுமாறியிருக்கிருள், தாகத்தால் தவித்து வந்தவருக்கு முதல் நாலைந்து மடக்குத் தண்ணீரைப் பருகுவதுபோல் தொடக்கத்தில் சிலஆண்டுகள் இந்தப் பணம், வசதிகள், புகழ் எல்லாமே பிடித்திருந்தன அவளுக்கு.

''தென்றலே! தேனே! என் கனவுகளில் எல்லாம் நீயே வருகிருய்! உன்னைக் கனவுகளில் காணும் போதெல்லாம் அப்படியே வாரியணைத்துக் கண்ணுடிக் கன்னத்தில் ஓர் 'இச்' பதித்து...''...என்று விடலைத்தனமாக எழுதும் நமைச்சல் எடுத்த ஓர் இளம் இரசிகனின் 'ஏ' ரகக் கடிதங்கள் கூட அவளுள் கிளுகிளுப்பை ஊட்டிக் கிளரச் செய்த காலங்கள் உண்டு. அந்த வேளைகளில் எல்லாம் லிஃப்ட்டில், காரில், விமானத்தில் படுவேகமாகப் போகிற ஓர் உல்லாச உணர்வை

அவள் அடைந்திருக்கிருள். மேலே போகிற வேகம் மகிழ்ச்சியை அளித்திருக்கிறது.

தன் அழகைப் புகழ்ந்து இப்படி எழுதியிருக்கிற அமெச்சூர் இரசிகர்களுக்குக் கையெழுத்துடன் தன் புகைப் படம் கூட அனுப்பியிருக்கிருள். அது ஒரு காலம். இப்போது அப்படிப் படங்கள் அனுப்புவதற்கு அவசியமே இல்லை. எந்தப் பத்திரிகையைப் புரட்டினுலும் அவள் படங்கள் இருந்தன. அவள் படம் பிரசுரமாகாத இதழ் அபூர்வம்தான்.

தற்காலத் தமிழ்ப் பத்திரிகைகளில் மட்டுமில்லை. மலையாள, தெலுங்கு, கன்னடப் பத்திரிகைகளிலும் இந்திப் பத்திரிகைகளிலும் கூட அவள் படங்கள் வெளி வந்தன.

தெலுங்கு அவள் தாய்மொழி. தமிழ்நாடு அவள் பிழைக்க வந்து முன்னேறிய இடம். மலையாளத்திலும், கன்னடத் திலும் பேசி நடிக்கக் கற்றுக் கொண்டாள். இந்தியில் அவள் வாயசைத்தாள். அவளுக்காக வேறு யாரோ பேசினர்கள். அவளோடு ஹீரோவாக நடித்திருந்த சில நடிகர்கள் மார்க்கெட் இழந்து உட்கார்ந்து விட்டார்கள். அவளோ நித்ய கன்னியாக நிலைத்து நின்ருள், அவளுடைய 'ரேட்' உயர்ந்து கொண்டே போயிற்று. தன்னோடு ஹீரோவாக நடித்தவர்களின் மகன்களோடும், சிலரைப் பொறுத்தவரை பேரன்களோடும் கூட அவள் கதாநாயகியாக நடித்திருந் தாள். ஓடியாடிக் காதல் செய்திருந்தாள்.

படங்களில் எத்தனையோ பல நடிகர்களோடு அவள் கதா நாயகியாக நடித்துக் கொண்டிருந்த சமயங்களில் அவளைப் பற்றியும் அந்தக் கதா நாயக நடிகர்களைப் பற்றியும் இணைத் துக் கிசுகிசுக்கள் வெளிவந்துள்ளன. ஆனல் கிசுகிசுக்களாகவே பிசு பிசுத்துப் போயினவே ஒழியச் செய்தியாகவோ, உண்மை யாகவோ ஆனதே இல்லை.

'அவர் இவளைக் காதலிக்கிருர்—விரைவில் திருமணத்தில் முடியலாம். இவள் அவரைக் காதலிப்பதாக நம்பத் தகுந்த

வட்டாரங்களிலிருந்து தகவல்—' என்றெல்லாம் கிசுகிசுக்கள் பிரசுரமாகி அவளுடைய கவர்ச்சியையும் மார்க்கெட்டையும் அதிகமாக்கின. வம்புகள்கூட விளம்பரம் ஆயின.

ஓர் உண்மை அவளுக்கு நன்றாகத் தெரியும். ஓர் இளம் நடிகைக்கு இலட்சக்கணக்கான இரசிகர்களும் பிரபலமும், கவர்ச்சியும் எல்லாம் திருமணமாகி ஓர் ஆண் பிள்ளையின் தாலிக் கயிற்ருல் தொழுவத்தில் கட்டப்படும் வரைதான்.

ஒருத்தனது தாலிக் கயிற்ருல் கட்டப்பட்டபின் அவள் பல ருடைய கனவுலகக் கன்னியாக இருக்க முடியாது. தாலி அவளை மாட்டுத் தொழுவத்தில் கட்டப்படுகின்ற மாட்டைப் போல வீட்டுத் தொழுவத்திலே கட்டிப் போட்டு விடவே பயன் படுகிறது. இவை எல்லாம் அவளது கருத்துக்களாக இருந் தன. ஆனல் நாளாக ஆக இக் கருத்துக்களில் சில முற்றிக் காம்பின் பிடி தளர்ந்து உதிர்ந்து விட்டன. சுற்றி யுள்ள மனிதர்களின் பொய்கள், புனைவுகள், நடிப்புக்கள் எல்லாவற்றையும் பார்த்துப் பார்த்துச் சுலபாவுக்குள்ளும் சில மாற்றங்கள் உண்டாயின. சிலவற்றில் பிடிவாதங்கள் தானே தளர்ந்தன. வேறு சிலவற்றில் பிடிப்புக்கள் ஏற்பட்டன. தொங்குகிறவன் ஒரு பிடியை விடுவதற்கு முன் வேருென்றைப் பற்றிக் கொள்ளாமல் முந்திய பிடியை விட முடியாது. அப்படி விட்டால் கீழே விழுவது தவிர்க்க முடியாததாகி விடும்.

சுலபாவுக்கும் பழைய பிடிகளை விட நினைக்கும் போதே புதிய பிடிப்புக்களை யோசித்துத் தேட வேண்டியதாயிருந்தது. அப்படிப் புதியதைத் தேடாமல் பழையதை விடமுடியவில்லை.

கோடீசுவரர்களாகிய சில தயாரிப்பாளர்கள் அவளை மணந்து கொள்ள ஆசை தெரிவித்தனர். அவர்களுக்கு ஏற் கெனவே மணமாகி இருந்தும் கூட முதல் மனைவியை விரோ தித்துக் கொண்டு கூட இவளோடு இணையத் துடித்தனர். இவளது சொத்து—எதிர் கால வருமானம் எல்லாவற்றையும் கணக்கிட்டு ஒரு தங்கப் பறவையை அதன் பெறுமானத்தை

யும், விலைமதிப்பையும் கணித்து விட்டு அவர்கள் சிறைப்பிடிக்க ஆசைப்படுவது அவளுக்குப் புரிந்தது. வேறு சில நடிகர்கள், வருகிற பத்து ஆண்டுகளுக்குத் தங்களோடு நடிக்க வகையாக ஒரு கதாநாயகி அகப்பட்டாள் என்கிற நைப்பாசையில் அவள் கழுத்தில் ஒரு தாலியைக் கட்டுவதன் மூலம் அல்லது கட்டா மலே அவளை மனைவியாக்கிக் கொள்ள முயன்று அவளிடம் தோற்றது தான் கண்ட பலன். எல்லாருடைய நைப்பாசை யும் தந்திரமும் அவளுக்குப் புரிந்தன. சுற்றிலும் ஒரே பொய்யும் புனை சுருட்டுமாக இருந்ததே ஒழிய நிஜம் கண்ணுக் கெட்டிய தூரம் வரையில் தென்படவே இல்லை. வீடு வாசல் கள், தியேட்டர், என்றும் ரொக்கம் என்றும் அவளிடம் பயங்கர மான சொத்துச் சேர்ந்திருந்தது. தன்னை நெருங்குகிறவர்கள் அழகுக்காக நெருங்குகிறார்களா, சொத்துக்காக நெருங்கு கிறார்களா என்ற பயம் சுலபாவுக்கு இருந்தது. சந்தேகங் களும் ஏற்பட்டன. எச்சரிக்கையும் ஏற்பட்டது.

அது பயமா, தற்காப்பா, என்று அவளுக்கே சமயா சமயங் களில் குழப்பமாக இருந்தது. புகழுரைகளாக வரும் கடிதங் களிலிருந்து நேரில் பேசுகிறவர்கள் வரை யாரையும், எதை யும் நம்பி விட முடியாமல் இருந்தது. எதுவரை நிஜம், எதற்கு மேல் பொய் என்று தெரிவது சிரமமாயிருந்தது.

எதிர்ப்படும் ஒவ்வொரு புகழ்ச்சியிலும் ஓர் உள்நோக்கம் இருந்தது. அவளுக்கு அநுபவமும், பொறுப்பும் ஏறஏறப் புகழுரைகளை வேர்வையையும் அழுக்கையும் துடைத்தெறிவது போல் மேலாகத் துடைத்தெறியக் கற்றுக் கொள்ளத் தொடங்கியிருந்தாள். அது தவிர்க்க முடியாததாகிப் போயி ருந்தது.

இளமை அநுபவங்கள் அவளுக்கு அதைக் கற்றுக்கொடுத் திருந்தன. புகழ்ந்து புகழ்ந்தே அவளைச் சீரழித்திருந்தார் கள் பலர். இன்று அது அவளுக்குப் புரிந்தது.

சிறுவயதில் அரும்பாக இருந்த போதே அவளைச் சினிமா வில் சேர்த்து விடுவதாகச் சென்னைக்கு அழைத்து வந்து அவளி

டம் சொல்லாமலும், அவள் சம்மதத்தைப் பெருமலும் அவளுக்குத் தெரியாமலுமே அவளை ஒரு விபசார விடுதியில் இருநூற்றைம்பது ரூபாய்க்கு விற்று விட்டுப் போனான் அவள் நம்பிய முதல் மனிதன். குண்டூரிலிருந்து அவள் பட்டினம் கிளம்பியபோது அவள் பெயர் சுப்பம்மா. அவளை ஆசைகாட்டி அழைத்துவந்து சந்தையில் மாடுவிற்பது போல் விற்று விட்டுப் போன குப்பைய ரெட்டியை அதன்பின் அவள் சந்திக்கவே முடியவில்லை.

## 2

எந்த விடுதிக்கு அவளுக்குத் தெரியாமலேஅவள் விற்கப்பட்டிருந்தாளோ அந்த விடுதியின் அழுக்கடைந்த நாள்பட்ட நாற்றமெடுத்த படுக்கையிலிருந்து அதிர்ஷ்டம் அவளைக் காப்பாற்றியது.

ஏதோ ஒரு பலவீனமான நிலையில் அங்கே அவளிடம் வந்த ஒரு தயாரிப்பாளர் சினிமாவுக்கான முகக்கட்டு அவளிடம் இருப்பதாகக் கண்டு பிடித்து அவளை அந்த நரகத் திலிருந்து விடுவித்துத் தமக்கு மட்டுமே உரிமையாக்கித் தனியாக ஒரு சிறிய வீட்டில் குடியமர்த்தினர். அவளை அவர் மட்டுமே அநுபவிக்க முடிந்தது.

முன்பு தசை வியாபார விடுதியில் இருந்தவரை எதுவும் அவளுக்கு என்று தனியாகவோ, சொந்தமாகவோ இருந்த தில்லை. அவளுடைய உடல் உட்படத்தான். அதுதான் அந்த விடுதி நடைமுறை.

அங்கே புடைவை, சோப்பு, சீப்பு, அலங்காரத்துக்கான கவரிங் அணிகலன்கள் எல்லாமே விடுதிக்குச் சொந்தம். மாலை வேளைகளில் தொழிலுக்கு அணிவகுத்து நிற்பதற்கு முன் அவற்றை அவரவர்கள் உபயோகிக்கலாம். கிராக்கிக்குத்

தகுந்த மாதிரி எதிர்பார்க்கிற வாடிக்கையாளர்களுக்கு ஏற்றமாதிரி யார் வேண்டுமானுல் அவற்றை அணிந்து கொள்ளலாம். மற்ற நேரங்களில் அழுக்கடைந்த கிழிந்த-கவர்ச்சியற்ற அவரவர்களுடைய சொந்த உடைகளைத்தான் அவர்கள் அணிந்து கொள்ள வேண்டும். இதுதான் அந்த விடுதியின் நடைமுறையாயிருந்தது. எல்லார்க்கும் எல்லாம் சொந்தம்-யாரும் எதையும், எவரையும் தனியாக உரிமை கொண்டாட முடியாது என்பது போல ஒருவகைப் பொது நிலைமைதான் அங்கே நிலவியது. அங்கிருந்து அவளைப் பிரித்துத் தமது தனியுடைமை ஆக்கிக் கொண்ட கிழட்டுத் தயாரிப்பாளர் ஒரு நாள் பின் மாலைவேளையில் யாரும் எதிர் பாராத விதமாக மாரடைப்பால் காலமானபோது சுப்பம்மா என்கிற 'சுலபா'வின் பொற்காலம் தொடங்கியது.

அவளை விடுதியிலிருந்து விடுவித்த போதே 'சுப்பம்மா' என்கிற பழைய தேய்ந்து போன-வேலைக்காரிகளுக்கும், எடுபிடிகளுக்கும், பாத்திரம் தேய்ப்பவர்களுக்குமே உரியது போல ஒலிக்கும் பெயரை நீக்கிச் 'சுலபா' என்று சினிமா வுக்கே உரிய முறையில் புதுப் பெயரிட்டு ஞானஸ்நானம் செய்திருந்தார் தயாரிப்பாளர். 'சுலபா'வைத் தயாரிப்பாளர் களும், டைரக்டர்களும், சினிமாத் தொழிலுக்கு நிதியுதவி செய்பவர்களும் 'சுலபமாக' அணுக முடிந்தது. இது அவள் வெற்றிகளின் இரகசியம். இந்த ரிஷிமூலம், நதி மூலங்களை இப்போது யாரும் கேட்கத் தயாராயில்லை. ஆனுல் அவள் வரலாற்றின் முதல் நுனியில் இப்படிச் சில 'மூலக்காரணங்கள்' இருந்தன என்பது மட்டும் உண்மை. இந்த மூலகாரணங் களால் அவள் வளர்ந்திருந்தாள்.

இவற்ருல் அவள் எச்சரித்து வைக்கப்பட்டிருந்தாள் என்பதும், போதுமான அளவு விழிப்புடன் இருந்தாள் என்பதும் உண்மை. மனிதர்களைப் பற்றிய அவளது பால பாடங்களாக இவை உள்ளே நிரம்பியிருந்தன. புகழ், பழி, பர், பெருமை, எல்லாமே பணவசதியைப் பொறுத்து

அமையக் கூடிய சினிமா உலகில் அவள் பெற்றிருந்த அநுபவங்கள் அவளை எதையும் சமாளிக்கிற தயார் நிலையில் வைத்திருந்தன. அநுபவங்களே அவளுடைய பலமா யிருந்தன.

வாழ்க்கையில் அநுபவங்களை விடப் பெரிய ஆசிரியன் யாரும் இருக்க முடியாது. பள்ளிக் கூடங்களில் மழைக்கும் ஒதுங்கியிராத அவள் கற்றதெல்லாம் வாழ்க்கை அநுபவங் களிலிருந்துதான். வாழ்வின் அநுபவங்கள் உடனிருந்தே கற்றுக் கொடுப்பவை என்பதை அவள் நன்றாகப் புரிந்து கொண்டிருந்தாள். அநுபவங்களின் மூலம் பாடங்கள் பதி வதைப் போல வேறு எவற்றின் மூலமும் அத்தனை அழுத்த மாகப் பதிவதில்லை என்பதைச் சுலபா உணர்ந் திருந்தாள். தடுமாறி விழுந்த அநுபவங்கள்தான் மேற்கொண்டு தடுமாறி விழாமல் அவளைக் காப்பாற்றின என்று சொல்ல வேண்டும். விழுந்தவற்றிலேயிருந்து எழுவதற் கும் எழுந்தவற்றிலே இருந்து இனி விழாமல் இருப்பதற்கும் அவள் தெரிந்துகொண்டிருந்தாள்.

பரந்து விரிந்த இந்த உலகில் இப்போது அவளுக்கு உண்மையான உறவினர் என்று யாருமில்லை. தொழில் வசதி களுக்காக வீட்டோடு நீண்ட நாட்களாக உடனிருக்கும் ஆயாக் கிழவி நரசம்மாவைத் தன் தாய் போல் படப்பிடிப்புக் களுக்கும், அவுட்டோர்களுக்கும் அழைத்துச் செல்லுவதுண்டு. நரசம்மாவைத் தவிரக் கூடிதப் போக்குவரத்து—வரவு செலவு—கால்ஷீட்—ஷெட்யூல் விவரங்கள் குறித்த டைரி வைத்துக் கொள்ள ஒரு காரியதரிசிப் பெண்ணும் இருந்தாள். 'கவிதா' என்று அழகான பெயர் அவளுக்கு. பி. ஏ. பட்டதாரி. தன்னு டைய நம்பர் ஒன், நம்பர் டு ஆகிய இரண்டு கணக்கு வழக்கு களையும் கூட இவளை நம்பிவிட்டிருந்தாள் சுலபா.

ஆனால் அதற்கும் காரணம் இருந்தது. கவிதாவின் தாய் மாமன்தான் சுலபாவின் ஆடிட்டர், அவளுடைய வரவு செலவு

இன்கம்டாக்ஸ்—வெல்த்டாக்ஸ் விவகாரங்களை அவர்தான் பார்த்துக் கொண்டார்.

"வெளி ஆட்கள் யாரையும் வேலைக்கு வைத்துக் கொள்ளாதே! காலம் கெட்டுக் கிடக்கிறது! எதை எங்கே உளறி வைப்பான்கள் என்று தெரியாது! என் மருமகள், தங்கமான பெண். எந்தத் தகவலையும் மூச்சுவிடமாட்டாள், எனக்கும் நம்பிக்கையானவள். உனக்கும் நம்பிக்கையானவள். வேலையில்லாமல் இருக்கிருள், பிரியப்பட்டதைக் கொடு! வாங்கிக் கொள்வாள்"—என்று ஆடிட்டரே கவிதாவைக் கொண்டுவந்து விட்டிருந்தார். அவளைப் பற்றி அவர் சொன்னவை நூற்றுக்கு நூறு உண்மையாயிருந்தன. கவிதா மிகமிக அடக்கமாகவும் நம்பிக்கையாகவும் நடந்து கொண்டாள். நேரம் காலம் கணக்குப் பார்க்காமல் வேலை செய்தாள். வீட்டுக்குப் போவதிலேயே குறியாயில்லை. "கொஞ்சம் வேலை இருக்கிறது. உன் உதவி தேவைப்படுகிறது. இன்னிக்கு மட்டும் இங்கேயே சாப்பிட்டுவிட்டு என்னோடு தங்கிவிடேன்" என்று சுலபா சொல்லி வேண்டிக் கொள்கிற தினங்களில் பிகு பண்ணிக் கொள்ளாமல் அவளுடனேயே தங்கினாள். சம்பளத் துக்கு வேலை பார்ப்பவளைப் போலப் பழகாமல் குடும்பத்தில் ஒருத்தியைப் போலப் பழகிய காரணத்தினால் கவிதாவைச் சுலபாவுக்கு மிக மிகப் பிடித்திருந்தது. ஆனாலும் நரசம்மா வைக் கூப்பிட்டுக் கொண்டு போகவேண்டிய இடங்களுக்குக் கவிதாவையும், கவிதாவைக் கூப்பிட்டுக் கொண்டு போக வேண்டிய இடங்களுக்கு நரசம்மாவையும் கூப்பிட்டுக்கொண்டு போக அவள் முயலுவதே இல்லை. அதில் கவனமாயிருந்தாள்.

மிகச்சில சமயங்களில் மட்டுமே இரண்டு பேரையும் ஒரே இடத்திற்குக் கூப்பிட்டுக் கொண்டுபோக நேரிடும். ஆனால் அப்படி இடங்களும், சந்தர்ப்பங்களும் மிகமிகக் குறைவுதான். மிக மிக அபூர்வம்தான்.

காரியதரிசி கவிதாவையும் நரசம்மாவையும் தவிர ஒரு சமையற்காரி, ஒரு தோட்டக்காரன், ஒரு வீட்டு வேலைக்காரி,

ஒரு டிரைவர், ஒரு கூர்க்கா, ஆகியவர்கள் அந்த பங்களாவில் உண்டு. இரண்டு பசுமாடுகள், ஓர் அல்சேஷியன், நாலு பூனைகள், இவை அங்கிருந்த பிராணிகள்.

பங்களாத் தோட்டத்தின் ஒரு கோடியிலுள்ள சின்ன அவுட்ஹவுஸில் தோட்டக்காரனும் அவன் குடும்பமும் குடி இருந்தன. காலையில் பால் கறப்பதும், பசுமாடு களைப் பராமரிப்பதும் கூட அவனிடமும் அவன் மனைவியிடமுமே விடப்பட்டிருந்தன. கூர்க்காவுக்கு வாசலில் கேட் அருகிலேயே ஒரு சிறிய அறை வசிப் பிடமாக அமைந்தது. தோட்டத்துக் குழாய், அவன் குளிக்கக் கொள்ளப் பயன்பட்டது. இருபத்தைந்து முப்பது மனை விஸ்தீரணமுள்ள பெரிய காம்பவுண்டில் கட்டிடம் இருந்த இடம் உள்ளடங்கிய இரண்டு மனை அளவு மட்டுமே. மற்றப் பகுதிகளில் எல்லாம் புல்வெளி, பூஞ்செடி கொடிகள், வாழை, மா, பலா முதலிய மரங்கள் என்று கிளி கொஞ்சும் சோலையா யிருந்தது, அந்தப் பங்களா. வெயிலே உள் நுழைய முடியாது,

தோட்டத்து 'லானில்' எப்போதாவது வருஷப் பிறப்பு பொங்கல் என்று அவள் பத்திரிகைக்காரர்களை விருந்துக்கு அழைப்பதுண்டு. இப்போது அம்மாதிரிப் பத்திரிகைக்காரர் களை அழைத்து விருந்து வைத்துப் பரிசுப் பொருள்களைக் கொடுத்துப் பப்ளிஸிடி தேடும் ஆசை கூடக் கழன்று போய் விட்டது. புகழ் பெறுகிற வரை ஆதரித்து எழுதுவதற்காகப் பத்திரிகைக்காரர்களுக்கு விருந்து. புகழ் பெற்று உச்சிக்கு வந்ததும் வம்புகள் பண்ணுமலிருக்க, எதிர்த்து எழுதாமலிருக்க தொழிலையும் பெயரையும் பாதிக்கிற கிசுகிசுக்களை எழுதாம லிருக்க என்று எதிர் மறையாக ஒரு பாதுகாப்பு முயற்சி என்ப தாகப் பத்திரிகைகளிடம் ஒரு கலைஞனுக்கு இருவகை ஈடுபாடு கள் இருப்பதுண்டு. அதுதான் வழக்கம்.

ஆனல் வரவர இப்போது கொஞ்ச நாளாக இருவகை ஈடு பாடுகளுமே அவளுக்கு இல்லை, ஏதோ ஓர் இழப்பில், ஏக்கத்

தில் அடைய முடியாத எதையோ எண்ணித் தன் எஜமானி தவிப்பது போல் கவிதாவுக்குத் தோன்றியது.

அதைச் சுலபாவிடம் எப்படி விசாரிப்பது என்று தயங்கினாள். விசாரிப்பது நாசூக்காக இராததோடு அதிகப் பிரசங்கித்தனமாகி விடுமோ என்றும் பயமாக இருந்தது. விரக்தியும், சலிப்பும் கலையின் எதிரிகள் என்பது கவிதாவுக்குப் புரிந்திருந்தது. அதனால்தான் அவள் தன் எஜமானியைப் பற்றிக் கவலைப் பட்டாள்.

சுலபாவின் ஆடிட்டரும் தன் தாய் மாமனுமான ஆடிட்டர் கனகசபாபதியிடம் போய் இந்த நிலைமையைத் தெரிவித்து யோசனை கேட்டாள் கவிதா. "ஒரே இடம் ஒரே தொழில், ஒரே மாதிரி மூஞ்சிகளைப் பார்த்துப் 'போர்டம்' ஆகியிருக்கும். எங்கேயாவது ஃபாரின் டிரிப் அடிச்சிட்டு வரச் சொல்லி யோசனை சொல்லிப் பாரேன்"—என்றார் அவர்.

"நான் சொல்லப் போய் ஒரு வேளை எனக்கு ஃபாரின் டிரிப் போகணும்னு ஆசையோன்னு அவங்க தப்பாப் புரிஞ்சுக்கிட்டாங்கன்னா என்ன செய்யிறதுன்னுதான் பயமா இருக்கு மாமா"—என்றாள் கவிதா.

"அப்போ நீ பேசாமே இரு! நானே ஒரு நாள் நானாத் தேடி வர்ர மாதிரி அவளைத் தேடி வரேன். அப்ப என் யோசனையாக நானே சொல்ற மாதிரி இதைச் சொல்றேன். நீயும் கூட இரு"—என்றார் கனகசபாபதி.

அவர் யோசனை கவிதாவுக்குப் பிடித்திருந்தது. 'ஒரு மாசம் பிரிட்டன், அமெரிக்கா, கனடா, ஜப்பான் எல்லாம் சுத்திட்டு வான்னு' யோசனை சொல்றேன் பாரு! உடனே சரின்னுடுவா'—என்றார் அவர்.

சொன்னபடி அவர் சுலபாவைத் தேடி வந்தார். பேச்சு வாக்கில் தம்முடைய யோசனையைச் சொன்னார். உற்சாகமாக விவரமாக வெளிநாட்டுப் பயணத்தை வர்ணித்தார்.

# 3

கனகசபாபதி சொல்லிய யோசனையைக் கேட்டுச் சுலபா சிரித்தாள். உடன் இருந்து அடக்கமாக நடப்பதை எல்லாம் கவனித்துக் கொண்டிருந்த காரியதரிசி கவிதாவுக்கு அந்தச் சிரிப்பைக் கண்டு அவநம்பிக்கை தான் ஏற்பட்டது. தன் எஜமானி அம்மாளின் ஒவ்வொரு சலனத்தையும் பதவுரை பொழிப்புரை எழுதி அர்த்தப்படுத்தி விட அவளால் முடியும். உதடு அசையாமல்-இதழ்கள் பிரியாமல் புன்னகை புரிந்தால் இன்ன அர்த்தம், வாய்விட்டுச் சிரித்தால் இன்ன அர்த்தம், முகத்தைச் சீரியஸ்ஸாக வைத்துக் கொண்டு பதில் சொல்லா மலே யோசித்தால் இன்ன அர்த்தம், 'பார்க்கலாம்' என்று ஒரு வார்த்தை மட்டும் சொன்னால் இன்ன அர்த்தம், 'அவசி யம் செஞ்சுட வேண்டியதுதான்'—என்று கூறி விட்டு அழுத்த லாக இருந்தால் இன்ன அர்த்தம் என்பதை எல்லாம் கூடவே இருந்து நன்றாக ஸ்டடி பண்ணியிருந்தாள் கவிதா.

'இவள் படங்களில் நடிப்பதை உணர்ச்சிக் குவியல், நடிப் பின் சிகரம் என்றெல்லாம் கொண்டாடுகிறார்களே, அதை விடப் பிரமாதமாக வாழ்வில் அல்லவா நடிக்கிறாள்? நடிக்கிற போது நடிப்பதை விட அதிகமாகவும் ஆழமாகவும் இவள் நடிப்பது நடிக்காத வேளைகளில்தான்' —என்று கவிதாவுக்குள் ஓர் உணர்வு ஏற்பட்டிருந்தது. அதுதான் உண்மை என்ப தும் அவளுக்குள் உறுதிப்பட்டிருந்தது.

'இவள் மனம் இந்த வயசிலேயே ஆழம் காண முடியாத ஒரு சமுத்திரம் மாதிரி இருக்கே? அந்தச் சமுத்திரத்திலே எங்கே நல்முத்துச் சிப்பிகளும் வலம் புரிச் சங்கும் பவழமும், இருக்கின்றன. எங்கே ஆபத்தான சுறாமீன்களும். திமிங்கிலங் களும், கடற் சிலந்தியும் இருக்கின்றன என்பதை எல்லாம் பிரித்துக் கண்டு பிடிக்க முடியாமலிருந்தது. எப்போது எது கிடைக்கும் என்பதும் புதிராகவே இருந்தது.

அதனால்தான் சுலபா சிரித்ததுமே கவிதா யோசித்தாள். சிரித்ததோடு நின்றுவிடாமல் சுலபாவே பதிலும் சொன்னாள்:

"வெளி நாட்டுக்குப் போயிட்டுவான்னு நீங்க சுலபமாச் சொல்லிட்டீங்க ஆடிட்டர் சார்! கையிலே இருக்கிற 'ஷெட்யூலை' எல்லாம் முடிச்சுக் குடுக்காமல் நான் கிளம்பினால் இந்தப் புரொட்யூஸர்ஸ் என்னைப் போக விட்டுருவாங்கன்னு நெனைக்கிறீங்க...?"

"அவங்க விடுருங்களா, இல்லியாங்கிறது முக்கியமில்லேம்மா! நாம போகணும்னு நினைக்கிறமா இல்லியாங்கிறதுதான் முக்கியம். புரொடக்ஷன் வேலை நடந்துக்கிட்டிருக்கிறப்பவே நடுவிலே உன் உடம்புக்குச்சுகமில்லாமப் போனா என்ன பண்ணுவே?"

"உடம்புக்குச் சுகமில்லாமே ஓய்வு எடுத்துக்கிறேன்னு சொல்றதும் உல்லாசப் பயணம் போறேன்னு சொல்றதும் ஒண்ணாயிடுமா?"

"நீ சொல்றது நியாயந்தான் சுலபா! உடம்புக்குச் சுகமில்லேன்னா அவங்களே மேற்கொண்டு எதுவும் கேட்காமே விட்டுடுவாங்க... ஃபாரின் ட்ரிப் போறேன்னா அப்பிடி விடமாட்டாங்க..."

"அவனவன் கோடிக் கணக்கிலே இன்வெஸ்ட் பண்ணிட்டுக் காத்திருக்கான். என்னிக்கிடா புரொடக்ஷனை முடிச்சு, ரிலீஸ் டேட்போட்டு விளம்பரம் பண்ணலாம்னு காத்துக்கிட்டிருக்கிறப்ப நீங்க திடுதிப்னு ஃபாரின் போறேன்னா எப்பிடி இருக்கும்? முன்பணம் குடுத்திட்டு வெயிட் பண்ற டிஸ்ட்ரிபியூட்டர்ஸ் வேற பிடுங்கித் தின்னுடுவாங்க...இதெல்லாம் நாமே கொஞ்சம் யோசனை பண்ண முடியுமே?"

"நீ சொல்றதெல்லாம் நூத்துக்குநூறு சரிதான்! அலை ஓய்ந்து நீராட முடியாது. இத்தனைக்கும் நடுவிலே என்னவாவது சாக்குப் போக்குச் சொல்லிப் பிரயாணம் போயிட்டு

வர வேண்டியதுதான். ஏதாவது மெடிகல் ட்ரீட்மெண்ட் அதுஇதுன்னு புளுக வேண்டியதுதான்.''

''ஒரு நடிகனோ நடிகையோ எக்காரணத்தை முன்னிட்டும் பொய்யாகக் கூடத் தனக்கு நோய் வரும், தான் மருத்துவச் சிகிச்சை செய்து கொள்ள வேண்டியிருக்கும் என்பது மாதிரிச் செய்திகளைப் பரப்பவே கூடாது. அது 'ஆண்டி செண்டிமெண்ட்ஸ்' விவகாரம். கவர்ச்சியை உடனே பாதிக்கும். தன்னுடைய அபிமான ஹீரோ அல்லது ஹீரோயின் உடல் நலம் கெட்டு மருந்து சாப்பிட நேரிடும் அல்லது சிகிச்சைக்குப் போக நேரிடும் என்பது போன்ற கற்பனையின் சாயல்கூட விசிறியின் மனத்தில் விழக் கூடாது.''

''உன்னுடைய லௌகீக ஞானம் பிரமாதம் சுலபா! நீ சொல்றது தான் சரியான ஸைகாலஜி. உடல் நலக் குறைவுன்னு சொல்லி வெளிநாடு போக முடியாது. கூடாது''

''ஒரே ஒரு வழிதான் இருக்கு! இப்போ நான் நடிச்சிட்டிருக்கிற புரொடக்ஷன்ஸிலேயே ஏதாவதுரெண்டொண்ணுலே ஃபாரின் லொக்கேஷனை வர்ர மாதிரிப் பண்ணுங்கன்னு யோசனை சொல்லி நமக்கும் ஒரு பைசாச் செலவு இல்லாமே அவங்க காசிலேயே ஊர்சுத்திப் பார்க்கலாம்''

''திடீர்னு கதையை அப்பிடி மாத்த முடியுமா சுலபா?''

''நம்ப சினிமாவில் எப்பிடி வேணும்னாலும் எப்பவேணும்னாலும் மாத்த முடிஞ்ச ஒரே விஷயம் கதைதான் சார்! நம்ம இஷ்டத்துக்குப் பண்ணிக்கலாம்''

''அப்படீன்னா ஒரு சினிமாக் கதைங்கிறது குடுகுடுப்பைக் காரன் சட்டை மாதிரி ஒட்டுப் போட்ட துணியா ஆயிடாதா?''

''ஏற்கெனவே சினிமாக் கதாசிரியருங்களே அப்பிடித்தான் சட்டையைத் தைச்சு எடுத்திட்டு வந்திருப்பாங்க! அதுலே இன்னும் ரெண்டு ஒட்டுக் கூடப்போடச் சொல்லி நாம சொன்னாக் கேட்டுப்பாங்க...''

''எகிறிக்கிட்டு எதிர்த்து நின்னு மாட்டேன் அது இதுன்னு அடம் பிடிக்க மாட்டாங்களா?''

''ஊஹூம்! மாட்டவே மாட்டாங்க! ஹீரோ, ஹீரோயின், காமிராமேன், டைரக்டர் இவங்களே யாராவது அடம் பிடிச்சால்தான் எடுக்கும். கதாசிரியரும், பாட்டு எழுதற வங்களும் அடம்பிடிச்சா அவங்களையே கழட்டி வுட்டுருவாங்க. அடுத்த படத்துக்குச் சான்ஸ் கிடைக்காது. ஃப்ளெக்ஸிபிளா இருந்தால் தான் பிழைக்கலாம், அவங்களுக்கும் அதெல்லாம் தெரியும். எத்தனையோ நடிகைங்க ''வசனகர்த்தா சார்! எனக்கு ல, ள, ழ, வாயிலே நுழையாது. தயவு செய்து இந்த எழுத்துங்க மாறி மாறி வர்ரமாதிரி டயலாக் வேணும்''னு கேட்டு மாத்திக்கிட்டிருக்காங்களே...?''

''என் வாளைச் சுழற்றி உன் தலையைச் சீவி எறிவேனடா பாவிப் பயலே'—என்பதில் வாள், சுழற்றி, தலை என்று மூன்று ஒலிகளும் வருகின்றன. இதை யங் சூப்பர்ஸ்டார் பிரதாப் காந்த் பேசினல் எப்படி இருக்கும் சுலபா?''

''என் வாலைச் சுளற்றி உன் தளையைச் சீவி எறிவேனடா பாவிப் பயளே! என்றுதான் பிரதாப் காந்தால் பேச முடியும். எனவே இந்த வசனம் அப்படியே பேசப்பட்டால் பிரதாப் காந்துக்கு 'அத்தனை நீளவால்' எப்போது முளைத்தது என்ற சந்தேகம் கேட்கிறவர்களுக்கு உண்டாகி விடும். இதைத் தவிர்க்க ஒரே வழி வசனத்தை மாற்றுவதுதான் சார்!''

''வசனத்தை மாற்றினல் கதை மாருதா?''

''அதான் முன்னேயே சொன்னேனே; சூப்பர் ஸ்டாருங்க அப்ஜெக்ட் பண்ணினு வசனம், கதை எல்லாமே மாறியாக ணும். இல்லாட்டிக் கதாசிரியரையே மாத்திப் பிடுவாங்க...''

''அப்போ கதையிலே அமெரிக்கா ஜப்பான்னு லொக் கேஷன் வர்ரமாதிரிப் பண்ணியாவது ஒரு ஃபாரின் டிரிப் அடிச்சிட்டு வரப் பாரேன்''

''நான் மட்டுமில்லே! எனக்கு ஒரு பெர்ஸனல் அஸிஸ் டெண்ட் வேணும்னு புரொட்யூஸரை வற்புறுத்தி அவங்க செலவிலேயே கவிதாவையும் கூட்டிக்கிட்டுப் போயிட்டு வந்து டலாம்.''—

''நல்ல ஐடியா! உடனே முடிவு செய்து போயிட்டு வாங்க! மனசும் தெம்பா ஃப்ரஷ்ஷா ஆகும். சலிப்பு நீங்க அதுதான் சரியான வழி''—

''இன்னிக்கி யாராவது புரொட்யூஸருங்க வருவாங்க, பேசிப் பார்க்கிறேன். அநேகமாக நான் சொன்னுத் தட்டிச் சொல்லமாட்டாங்க''—என்று பதில் சொல்லிவிட்டுத் தன் காரியதரிசி கவிதாவின் பக்கம் திரும்பி, ''ஞாபகம் வச்சிக்கோ கவிதா! இன்னிக்கிக் கால்ஷீட்-யாராவது புரொட்யூஸர் தேடி வருவாங்க. அப்போ இதை ஞாபகப்படுத்து''- என்ருள். கவிதாவும் சரி என்று தலையை அசைத்தாள். ஆடிட்டர் கனக சபாபதி திருப்தியாக விடைபெற்றுக் கொண்டுபோய்ச் சேர்ந் தார். ஒரு தயாரிப்பாளரிடம் இருந்து கறுப்பில் வரவேண்டிய ரொக்கம் வராததால் அவருடைய தயாரிப்பில் அன்றைய கால்ஷீட்டுக்குப் போவதில்லை என முடிவு செய்து பிடிவாத மாக வீட்டிலிருந்தாள் சுலபா.

சூட்சுமம் அவளுக்குத் தெரியும். இது ஒரு டெக்னிக். காமிரா, ஸ்டுடியோ, புரொடக்ஷன், யூனிட் எல்லாம் தயார்ப் பண்ணி நிறுத்திய பின் ஆர்ட்டிஸ்ட் வரவில்லை என்ருல் மற்ற ஏற்பாடுகள் வீணுகி விடும், எங்கேயாவது கொள்ளை வட்டிக்குக் கைமாற்று ஏற்பாடு செய்தாவது ரொக்கத்தை எடுத்துக் கொண்டு வீடு தேடி வருவார்கள். அதற்கு முன் போய்விடக் கூடாது.

சுலபா இப்படி நாட்களில் நரசம்மாவை டெலிஃபோன் அருகே உட்கார்த்தி வைத்து விடுவாள். அவள் டெலிஃபோனை எடுத்து, ''அவங்களுக்கு உடம்பு நல்லா இல்லே! இன்னிக்கிக் 'கால்ஷீட்' முடியாதுன்னு சொல்லச் சொல்லிட்டாங்க''-

என்று கடுமையான குரலில் தமிழும் தெலுங்கும் கலந்த கொச்சையில் கீறல் விழுந்த ரெக்கார்டு மாதிரி ஒரே பதிலைச் சொல்லுவாள் நரசம்மா. எரிச்சலூட்டுகிற மாதிரிச் சொல்லு வாள்.

சொல்லப்படுகிற அதிகாரப் பூர்வமான பதில் இதுதான் என்றாலும் தயாரிப்பாளர்களுக்கு உண்மை புரியும். நம்பர் டூ அக்கவுண்டில் அந்த ஷெட்யூலின்போது ரொக்கமாகத் தருவ தாய் ஒப்புக் கொண்டிருந்த தொகையை நேரில் போய்த் தந்து விட்டால் காரியம் முடியும் என்பதை அவர்கள் பழக்கமான விதத்தில் அறிவார்கள். இந்த மாதிரி வருமானத்தைப் படம் முடிந்து ரிலீஸான பின் வாங்க முடியாது. நம்பர் ஒன் அக்-கவுண்ட் பணத்தையாவது காண்ட்ராக்ட் அது இது என்று ஆதாரங்களை வைத்து வழக்குத் தொடுத்து வாங்கி விடலாம். கறுப்பில் பேசியதை அவ்வப்போது கால்ஷீட்டுக்கு முன்னால் ரொக்கமாக வாங்கினால் ஒழிய ஏமாற்றி விடுவார்கள். இதை எல்லாம் தங்கமாகவும், வைரமாகவும் மாற்றி விடுவது சுலபா வின் வழக்கம். வர வர இப்படிப் பணத்தை என்ன செய்வ தென்று முழிக்க வேண்டியிருந்தது. நிலமாக வாங்கிப் போட்டாயிற்று. நகைகளாக வாங்கிப் போட்டாயிற்று. பங்களாவிற்குள் பளிங்காக இழைத்தும் அழகு படுத்தி யாயிற்று. 'இண்டீரியர் டெகரேஷன்' என்ற பேரில் படுக்கை யறை பாத்ரூம், டைனிங் ஹால் வரவேற்புக் கூடங்களை அழகு செய்வதில் பல லட்சங்களை வருஷா வருஷம் செலவிட் டும் தீராமல் மேலே மேலே வந்து கொண்டே இருந்தது. அவ ளுடைய அலுப்புக்கு இது ஒரு காரணம். 'இதெல்லாம் எதற் காக, யாருக்காக விட்டுவிட்டுப் போகப் போகிறோம்?'-என்ற கேள்வி அந்தரங்கமாக உள்ளே எழும்போது மனத்தை ஏதோ இறுக்கிப் பிழிந்தது. கையிலிருக்கும் படங்கள் முடிந்ததும் ஓர் அறிக்கை விட்டு விட்டு நடிப்பதையே நிறுத்தி விடலாமா என்று கூட எண்ணினாள்.

வெறும் முப்பது வயதிற்குள் உடம்பு கொஞ்சம் இளமை யைக் காட்டினாலும் மனம் என்பது வயது முதுமையை

யும் கவலையையும் உணர்ந்தது. விரக்தியை அடைந்தது. ஆடிட்டரோடு கலந்து பேசி இந்தச் சொத்தை எல்லாம் ஒரு 'டிரஸ்ட்' ஆகப் பண்ணி நல்ல காரியங்களுக்காக ஒதுக்கி விட்டு விட்டு-எங்காவது பெண்களுக்கான சேவாசிரமத்தில் சேர்ந்து விடலாமா என்றுகூட அவளுக்குச் சமயா சமயங்களில் தோன்றியிருக்கிறது உண்டு.

செலவழிக்கப் பணமில்லாமல் கோடிக்கணக்கான ஏழைகள் ஒருபுறமும் கோடிக் கணக்கில் வந்து குவிந்துகொண்டே இருக்கும் பணத்தை எப்படிச் செலவழிப்பதென்று தெரியாமல் தன்னைப் போல் தவிக்கும் சிலருமாக வாழ்க்கை முரண்படுகிற எல்லைகளை அவள் சிந்தித்தாள். மனம் மேலும் குழம்பியது.

''எஸ்.பி.எஸ். பார்க்க வந்திருக்கிறார் அம்மா! வரச் சொல்லட்டுமா?''-கவிதாவின் குரல் சுலபாவை இந்த உலகிற்குக் கொண்டு வந்தது. எஸ்.பி.எஸ். தான் அவள் எதிர் பார்த்துக் காத்திருந்த புரொட்யூஸர். நிச்சயம் பணத்தோடுதான் வந்திருப்பார். ஸ்டூடியோவுக்குப் புறப்பட வேண்டியிருக்கும். கவிதா சுலபாவின் காதருகே வந்து, ''அந்த 'ஃபாரின் டிரிப்' விஷயம் ஞாபகப்படுத்தச் சொன்னீங்களே?'' என்று நினைவூட்டினாள்.

## 4

தயாரிப்பாளர் எஸ்.பி.எஸ்.கையில் ஒரு அழகான மஞ்சள் நிற ஃப்ரீப் கேஸுடன் நரி நுழைவது போல் பம்மிப் பம்மி உள்ளே நுழைந்தார். அவர் வந்து இறங்கிய மழமழ என்று பெயிண்ட் மின்னிப் பளபளக்கிற ஏ. சி. டீலக்ஸ் டயோட்டா போர்ட்டிகோவில் கம்பீரமாக நின்றது. மிகுந்த தயக்கத்தோடு பங்களா முன்வராந்தாவில் இருந்த சோபாக்களில் ஒன்றில் உட்கார்ந்த அவரை, 'உள்ளே வாங்க! அம்மா கூப்பிடறாங்க''-என்று கவிதா வந்து உள்ளே அழைத்தாள். கூலிங்கிளாஸைக் கழற்றிக் கையில் வைத்துக் கொண்டு மற்

ருரு கையால் செண்ட் வாசனையை அந்தப் பகுதி முழுவதும் படரவிட்ட கைக்குட்டையால் முகத்தைத் துடைத்துக் கொண் டார் எஸ்.பி.எஸ். எனகிற எஸ். பி. சிவதாணு. அசடு வழியக் கவிதாவைப் பார்த்து ஒரு தரம் சிரித்தார். பின்பு அலுத்துக் கொள்ள ஆரம்பித்தார்:-

''பத்து மணிக்கு வரேன்னிருந்தேன்! கொஞ்சம் நேரமாயி டிச்சு... செட்ல எல்லாரும் ரெடியா இருக்காங்க... அம்மா அழுக்கு நோட்டு வாங்கமாட்டாங்க...அழுக்குன்னாலே அவங் களுக்கு அலர்ஜி...அதுனாலே எல்லாத்தையும் சலவைநோட்டா மாதத நேரமாயிடிச்சு...புது நோட்டு அவசரமா மாத்தணும்னு நூறு ரூபாய்க்கு நாலணா 'வட்டம்' கேட்கிறான். கமிஷனை வெட்டாமச் சலவை நோட்டு வாங்க முடியலே. சாராயக் கடைங்க வந்து போனாலும் போச்சு... மார்க்கெட்ல அழுக்கு நோட்டுச் செலாவணி ஒரேயடியா அதிகரிச்சுப் போச்சு...''

''பரவாயில்லே! வாங்க சார்! அம்மா உங்களை எதிர் பார்த்து ரெடியா இருக்காங்க...உடனே கிளம்பிறலாம்''

எஸ்.பி.எஸ். அம்பாள் சந்நிதிக்குள் நுழையும் பரம பக்த னைப் போல் செருப்புக்களை அறைமுகப்பிலேயே கழற்றிவிட்டுப் பயபக்தியோடு கவிதாவைப்பின்தொடர்ந்து குளிர்சாதன வசதி செய்யப்பட்டிருந்த 'சுலபா'வின் தனியறைக்குள் நுழைந்தார்.

''வாங்க எஸ்.பி.எஸ்! இந்தா கவிதா! அவருக்குக் குடிக்க எதாச்சும் ஜூஸ் குடு! பாவம்! எங்கெங்கியோ அலைஞ்சு களைச்சுப் போய் வந்திருக்கார்''— என்று சுலபா அவரை வர வேற்றாள்.

''பணம் நேத்தே ரெடிங்க! உங்களுக்குப் பிடிச்ச மாதிரிச் சலவை நோட்டா மாத்தறதுக்குத் தான் ஒரே அலைச்சல். பெரிய ஐம்பது கொண்டாந்திருக்கேன். சலவை நோட்டு வாங்கக் கமிஷன் மட்டுமே சுளையா நூத்தி இருவத்தஞ்சு ரூபா போயிரிச்சும்மா''-

''இந்தாங்க! புறப்படறத்துக்கு முன்னடி எண்ணிக் குங்க''-என்று நோட்டுக் கட்டுக்களை ஒவ்வொன்ருக ஃப்ரீப் கேஸிலிருந்து எடுத்து டீப்பாயில் வைத்தார் எஸ். பி. எஸ். புத்தம் புதிய பளீர் என்ற கட்டுக்கள்.

தனித்தனி ஐயாயிரம் ஐயாயிரமாகப் பத்துக் கட்டுக்கள். செண்ட் தெளித்த கர்சீப்பும் ஃப்ரீப் கேஸில் கூட வைக்கப்பட்டு இருந்திருக்க வேண்டும். வாசனை ஏ.சி. அறை முழுவதும் ஜமாய்த்தது. தூக்கி அடித்தது.

''நம்ம எஸ். பி. எஸ். கை பட்டால் ரூபாய் நோட்டுக்கூட ஜம்முன்னு மணக்குது.''

சிரித்தபடி சுலபா இப்படிச் சொன்னதில் எஸ். பி. எஸ். உச்சி குளிர்ந்து போனர்.

''எல்லாம் உங்க லட்சுமி கடாக்ஷம் தான் அம்மா! பத்திரமா எண்ணி எடுத்து வைக்கச் சொல்லுங்க... நாம புறப்படணும்! டயமாச்சு...''

''எண்றதாவது ஒண்ணுவது...எஸ். பி. எஸ். சொன்னல் சரியாதான் இருக்கும். அப்படியே எடுத்து லாக்கர்லே வைடீ கவிதா''—

''மத்தியானம் லஞ்சுக்கு நீங்க இங்கே வரவேணும்! உங்களுக்கும் சேர்த்து எங்க வீட்டிலேருந்தே வந்துடுது...''

''அது பரவாயில்லே எஸ். பி. எஸ்! உங்ககிட்ட வேற ஏதோ முக்கியமான விஷயம் பேசணும்னு நெனைச்சுக்கிட்டிருந் தேன்...மறந்திடிச்சே......?...ஆங்......இப்ப நினைவு வருது. நம்ம புரொடக்ஷன் ஒண்ணுலே ஏதாவது லண்டன், பாரிஸ், டோக்கியோன்னு லொக்கேஷன் வர்ர மாதிரிப் பண்ணுங் களேன். படம் 'ஹிட்' ஆவும். ஜனங்க திரும்பத் திரும்ப மகாபலிபுரத்தையும். பிருந்தாவன் கார்டன்ஸையும் பார்த்துப் பார்த்துச் சலிச்சுப் போயிட்டாங்க...''

''ரியலீ...நான் எப்ப வேணு ரெடிங்கம்மா! உள்ளூர்லியே உங்க கால்ஷீட் கிடைக்கிறது குதிரைக் கொம்பா இருக்கு...

தவிக்கிறேன். பீஸியா இருக்கிற உங்களைப் போய் ஃபாரின் கிளம்புங்கன்னு என்ன சொல்லுவீங்களோன்னு பயந்துக் கிட்டில்லே நான் ஃபாரினே வராமப் பார்த்துக் கிட்டிருக் கேன்''—

''உங்க பயம் சரியில்லே! நான் கொஞ்சம் ஃப்ரீயா வெளி யிலே சுத்தலாம்னு பார்க்கிறேன். லொக்கேஷன் முடிவு பண்ணி ஃபாரின் எக்ஸேன்ஜ் எல்லாம் தாராளமா அரேன்ஜ் பண்ணுங்க. போயிட்டு வரலாம்''—

''சரி ஸெட்ல லஞ்சி டயத்திலே இதைப் பத்தி மேலே பேசுவோம். இப்பக் கிளம்புங்க. போகலாம்! காத்துக்கிட்டி ருப்பாங்க''

காரியதரிசி கவிதா மேக்கப் பெட்டி முதலியவற்றுடன் உடன் கிளம்பச் சுலபா புறப்பட்டாள். கார் மோகினி ஸ்டூடியோ போகிறவரை மறுபடி ஃபாரின் லொக்கேஷன் பற்றிய உரையாடல்களே தொடர்ந்தன. சுலபா பிரவேசித்த வுடன் 'செட்' களை கட்டியது, தயாரிப்பாளரின் கவலை எல்லாம் அன்றைய செட் வாடகை, காமிரா வாடகை, யூனிட் செலவுகள் வீணாகிவிடாமல் வேலை நடந்து முடிய வேண்டுமே என்பதுதான்.

அது தவிரவும் 'ஊர்வசி' பட்டத்தை இரண்டு முறை பெற்றவளும் பேரைச் சொன்னாலே ஏரியா விற்பனையில் போட்டி வரக்கூடியவளுமான பேரழகு நடிகை 'சுலபா' மேல் எஸ். பி. எஸ்ஸுக்கு ஒரு மயக்கமே உண்டு. அவள் 'நீ தோப்புக் கரணம் போடு! நான் எண்ணிக் கொள்கிறேன்?-' என்றால் கூட உடனே இடுப்பில் மேலாடையைக் கட்டிக் கொண்டு தோப்புக் கரணம் போடத் தொடங்கிவிடுவார். அவளை வைத்து அவர் தயாரிக்க இருந்த படங்களின் மூலமே அவர் கோடீசுவரராக முடியும் என்பதனால் தொடர்ந்து அவளை 'நல்ல மூடில்' வைத்துக் கொள்வதற்கு எதுவும் செய்யத் தயாராயிருந்தார் அவர் என்பதுதான் உண்மை.

நடுப்பகல் ஒரு மணி வரை ஷூட்டிங் நடந்து முடிந்ததும் லஞ்ச் இண்டர்வெல் வந்தது. எஸ். பி. எஸ். ஹீரோ குமார விஜயன், கூலபா, எஸ். பி. எஸ்.ஸின் புரொடக்ஷன் மேனேஜர் எல்லாரும் கூட்டமாக இருந்தனர்.

''இந்தப்பா தனபால்! அந்தக் கதை வசனகர்த்தா கந்த சாமியைக் கூப்பிடு சொல்றேன்''—என்று தன்னுடைய புரொடக்ஷன் மேனேஜரைக் கூப்பிட்டுச் சொன்னார். தனபால் உடனே உள்ளே செட்டுக்கு ஓடினான்.

வலது காதில் சொருகிய நீளமான பால்பாயிண்ட் பேனா வும் கையில் ஒரு கத்தை ஸ்கிரிப்ட்டுமாக ஒரு ரெட்டை நாடி சரீர ஆள் வந்தார். அதிக உயரமுமில்லை, குட்டையு மில்லை. குரல் மட்டும் வெண்கலக் கடையில் யானை புகுந்த மாதிரி இருந்தது. நீண்ட நாட்களாக ஏதோ ஓர் இயக்கப் பேச்சாளராயிருந்து அப்புறம் வசனம் எழுத வந்தவர் போன்ற சாயல் தெரிந்தது. எஸ். பி. எஸ்ஸிடம் மரியாதையாக இருக்கிற பவ்யம் தென்பட்டது. அவரைப் பார்த்ததும் எஸ். பி. எஸ் மிகவும் உரிமையாக, ''கந்தசாமி! உங்க கிட்ட ஒரு விஷயம்... நம்ம கதையிலே எப்பிடியாச்சும் லண்டன், நியூயார்க், பாரிஸ், டோக்கியோ, இது மாதிரி ஃபாரின் லொக் கேஷன் வரணும்னு டிஸ்ட்ரிபியூட்டர்ஸ் ஆசைப்படறாங்க. ஏதாவது வழிபண்ணுங்களேன்'' என்றார்.

இதைக் கேட்டுக் கதை வசனகர்த்தா கந்தசாமி ஒரு கணங்கள் விசனகர்த்தாவாக மாறினார்.

''அது எப்பிடீங்க? கதையோ அசல் கிராமீயக்கதை! நிறைய ரூரல் மாஸ் அப்பீல் வேணும். ஊர், ஊரா நூறுநாள் ஓடணும். சின்னச் சின்ன ஊர்லே கூடப் பாக்ஸ் ஆபீஸ் ஹிட் ஆகணும்னீங்க. அதுனாலே படுகிராமீயக்கதையா எடுக்க ஆரம்பிச்சோம். இப்பத் திடீர்னு பாரிஸ், லண்டன் வரணும்னா எப்பிடி...?''

''ஏனய்யா? கிராமீயக் கதா நாயகன் லண்டன், பாரிஸ் எல்லாம் போகக் கூடாதா என்ன?''

"போகலாங்க... ஆனுக் கதை இடம் குடுக்கணுமே? பாதி எடுத்தாச்சே."

"எடுத்தா என்னய்யா? 'மாட்டுக்கார மன்னனுரு'ன்னு பேர் வைக்கிறதா இருந்தோம். இப்போ 'உலகம் சுற்றிய உழவன்'னு வச்சிட்டுப் போறோம்"

"ஏகமாச் செலவழிச்சு 'மாட்டுக்கார மன்னுரு—மக்களைப் பார்த்துச் சொன்னுரு—மக்கள் எல்லாம் அதிசயிச்சு நின்னுரு" —ன்னு டைட்டில் 'சாங்' ஒண்ணு ரிக்கார்ட் பண்ணி யிருக்கமே...?"

" 'சாங்' பாட்டுக்கு இருந்துட்டுப் போகட்டுமே? இல்லாட்டி வேற படத்துக்கு யூஸ்பண்ணிக்கலாம். விட்டாலும் விட்டிரலாம்"

"அது கஷ்டங்க... இப்ப இருக்கிற புரொடக்ஷன் காஸ்ட்லே ஒரு பாட்டுக்கு மட்டும் முப்பதாயிர ரூபாய்க்கு மேலே செலவாகுதுங்க... படத்திலே நாலு பாட்டுன்னு அதுவே கிட்டத்தட்ட ஒண்ணரை லட்சம் முழுங்கிடுது" என்று புரொடக்ஷன் மானேஜர் தனபால் குறுக்கிட்டான்.

எஸ். பி. எஸ். விடவில்லை. "தொடர்ந்து படம் எடுக்கிறோம். பாட்டை எதிலயாவது சேர்த்து விட்டுறலாம். மத்த ஆஸ்பெக்ட்டைப் பத்தி யோசியுங்க" என்றார். நேரடியாகச் சுலபா ஆசைப்படறாங்கன்னு சொல்லி அவளை வம்பில் மாட்டி விடாமல் "டிஸ்ட்ரிபியூட்டர்ஸ் ஃபாரின் லொக்கேஷன் வேணும்ன்னு சொல்றாங்க" என்று விஷயத்தை யாருமே மறுக்க முடியாதபடி வெளியிட்டிருந்தார் எஸ். பி. எஸ். அருகே அழகுப் பொம்மையாக எதுவுமே பேசாமல் அமர்ந்திருந்த சுலபா கூட அவரது சாமர்த்தியத்தை வியந்தாள். எஸ். பி. எஸ்ஸா கொக்கா? எதையும் முடிவு செய்ய வேண்டியது அவர்தான் என்றாலும் ஒரு சர்வாதிகார முடிவையே ஜனநாயகமாக எடுப்பது போல் காட்டிக் கொள்ள விரும்புகிற தற்கால ஃபாஷனை அவரும் ஒப்புக்காகக் கடைப்பிடித்தார்.

'கதை ஃபாரின் லொக்கேஷனுக்குப் போக வேண்டும்'- என்பது அவருடைய தீர்மானம் என்பது எல்லாருக்கும் புரிந்து விட்டது. இனி அதற்கு ஒத்துழைப்பதைத் தவிர வேறு வழியே இல்லை என்பதையும் எல்லாரும் புரிந்து கொண்டு விட்டார்கள்.

''இதுலே சிரமம் ஒண்ணுமில்லே! புரொட்யூஸர் சொல்ற படி பண்ணிடலாம். டிஸ்ட்ரிபியூட்டர்ஸ் நினைக்கிறதைப் பண்ணலேன்னுக் கழுத்தறுத்துடுவாங்க... ஏரியா விற்பனை படுத்துப் போயிரும்'' என்றார் டைரக்டர்.

''எடிட் பண்றப்போ கொஞ்சம் எக்ஸ்ட்ரா கேர் எடுத்துக் கிட்டாக் கதையைக் கோவையாக் கொண்டு போயிடலாம். எல்லாம் எடிட்டிங்கிலேதான் இருக்கு'' என்றார் ஹீரோ குமார விஜயன்.

சுலபா மட்டும் கடைசிவரை வாயே திறக்கவில்லை. மௌனமாகச் சிரித்துக் கொண்டே எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டிருந்தாள். மாலையில் ஷூட்டிங் முடிந்து அவரவர்கள் கிளம்பு முன், ''ஃபாரின் லொக்கேஷன் இருக்கு! லண்டன் பாரிஸ் போறோம். ரொம்பச் செலவாகும். ஃபாரின் எக்ஸ்சேன்ஜ் கிடைக்கிறது கஷ்டம், அதுனாலே ஒரு டஜன் ஆட்களுக்கு மேலே போய் விடாமல் ஒரு சின்ன யூனிட் மட்டும் போனால் போதுமானது'' என்று அதிகாரப் பூர்வமாக அறிவித்தார் எஸ். பி. எஸ். வெளிநாட்டுப் பயணம் போவது உறுதி யாயிற்று.

## 5

தன் காரியதரிசி கவிதாவைத் தவிர அவரே எதிர்பாராத விதமாக ஆடிட்டரையும் கூட அழைத்துக் கொண்டு போனாள் சுலபா. அதிலும் ஒரு திட்டம் இருந்தது. எங்கெங்கோ எப்படி எப்படியோ குல்மால் செய்து மாத்தி வைத்திருந்த

ஃபாரின் கரன்ஸியில் சுவிஸ் பாங்கில் ஒரு இரகசிய நம்பர் அக்கௌண்ட் வைத்துக்கொள்ள ஆடிட்டர் உடனிருக்க வேண்டும் என்று எண்ணினாள் சுலபா. அவளே ஆடிட்டரை உடன் வர வற்புறுத்தினாள்.

மிகப்பல சினிமாப் பெரும் புள்ளிகளின் நம்பர் ஒன் நம்பர் டு அக்கவுண்டுகளைக் கவனித்து வந்த ஆடிட்டர் கனக சபாபதிக்கு நல்ல அநுபவம் ஸ்விஸ் பாங்க் விவகாரங்களில் இருந்தது. தானே தனியாக ஏதாவது ஏடா கூடமாகப் பண்ணிப் புரியாத தேசத்தில் வம்பில் மாட்டிக் கொள்ளக்கூடா தென்று எண்ணினாள் சுலபா. அதனால்தான் ஆடிட்டரையும் கூப்பிட்டிருந்தாள்.

பாண்டிச்சேரியில் பிறந்து இப்போது பிரெஞ்சு நாட்டில் பல ஊர்களில் வாழும் உறவினர்கள் பலர் கனகசபாபதிக்கு இருந்தார்கள். அதனால் அவர் உதவி தேவைப்பட்டது.

ஆனால் பயணத்தின் இந்தப் பகுதியைப் பற்றித் தயாரிப் பாளர் எஸ்.பி.எஸ்.சுக்குத் தெரிய விடவில்லை அவர்கள்.

''என் உதவியாளர்ங்கிற முறையிலே கவிதா வரப்போரு. என்னோட ஆடிட்டரும் கூட வரார். அவர் செலவுகளை நான் பார்த்துக்கிறேன்''—என்று உபசாரத்துக்காக எஸ். பி. எஸ். ஸிடம் சுலபா கூறினாள்.

''செலவு என்னம்மா பெரிய விஷயம்? உங்க ஆடிட்டர் தானே? அவரும் நம்ம யூனிட்ல ஒருத்தர் மாதிரித் தான்! வரட்டும். நமக்கும் நாலு இடத்திலே பேசக் கொள்ள ஒரு படிச்ச ஆளாவது வேணும். அவருக்காக நீங்க செலவழிக்க வேணும், என் கிட்டவே விட்டுடுங்க—'' என்று எஸ். பி. எஸ். பெருந்தன்மையாகப் பதில் சொல்லிவிட்டார்.

வாழ்க்கையில் அவளுடைய ஆசைகள் ஒவ்வொன்றும் சுலபமாக நிறைவேறி வந்தன. கடைசியாக இந்த ஸ்விஸ் பேங்க் ஆசையும் நிறைவேறப் போகிறது. 'சுலபா' என்று

தனக்குப் பெயர் வைத்துக் கொடுத்தவரை இப்போது அவள் உள்ளம் வாழ்த்தியது. எல்லாம் சுலபமாகவே நடந்து விடுகின்றனவே!

பயணத்தில் படப்பிடிப்பை விட அவர்கள் வெளிநாட்டைச் சுற்றிப் பார்க்க வேண்டும் என்பது தான் முக்கியமாயிருந்தது.

கதாநாயகன், கதாநாயகி, காமிராமேன், டைரக்டர், தயாரிப்பாளர், தயாரிப்பாளரின் நெருக்கமுள்ள இரண்டு பணக்கார விநியோகஸ்தர்கள், கதாநாயகியோடு அவள் காரியதரிசி கவிதா, ஆடிட்டர் கனகசபாபதி-என்று ஒன்பது பேர் புறப்பட்டார்கள். கிடைத்த அந்நியச் செலாவணி அநுமதியில் இந்த ஒன்பது பேர்தான் போகமுடியும் என்று ஆகிவிட்டது. இவர்களிலேயே சிலருக்கு அநுமதி வாங்குவதற்காக யூனிட்டில் சம்பந்தப்பட்டவர்களைப் போலப் பெயர்கள் சூட்ட வேண்டியிருந்தது. கவிதா 'காஸ்ட்யூம் அஸிஸ்டெண்ட்' ஆனாள். கனகசபாபதி-புரொடக்ஷன் கண்ட்ரோலர் ஆனார். எஸ். பி. எஸ்.ஸின் இரு நண்பர்களும் 'லொக்கேஷன் ஷாட்' சம்பந்தப்பட்ட இரண்டு முக்கிய நடிகர்கள் என்று காட்டப்பட்டிருந்தனர். அந்நியச் செலாவணி அநுமதி வாங்குவதற்கு இந்த மாதிரிக் காண்பித்தாக வேண்டியிருந்தது. எஸ். பி. எஸ். இன்னும் இரண்டு மூன்று பேர்களைச் சேர்த்துப் பன்னிரண்டு பேர் வரையில் கூப்பிட்டுக் கொண்டு போக வேண்டும் என்று ஆசைப்பட்டார். ஆனால் ஒன்பது பேருக்குத்தான் அநுமதி கிடைத்தது. அதற்கு மேல் எவ்வளவோ முயன்றும் முடியவில்லை. புறப்படுவதற்கு முன் எல்லாப் பத்திரிகைகளிலும் செய்திகளும் விளம்பரங்களும் தடபுடல் பட்டன.

'எஸ். பி. எஸ். புரொடக்ஷன்ஸாரின் மாபெரும் தயாரிப்பு. கவர்ச்சிக் கன்னி சுலபா சம்பந்தப்பட்ட சில காட்சிகள் லண்டன், பாரிஸ் நகரங்களில் படப்பிடிப்பு ஆக ஏற்பாடு'—என்று விளம்பரமாயிற்று. அந்நியச் செலாவணிப்

பற்ருக்குறை காரணமாக நியூயார்க்—டோக்கியோ எல்லாம் விடுபட்டுப் போயிற்று. அவர்களும் பொருட்படுத்தவில்லை.

இந்த ஃபாரின் லொக்கேஷனுக்கு ஆகிற செலவை மட்டுமே கணக்கிட்டால் கூட உள்நாட்டில் கச்சிதமாக இன்ஞெரு படம் எடுத்து முடித்து விடலாம் என்று தெரிந்தது. ஆனாலும் கண்ணை மூடிக்கொண்டு செலவழிக்கத் தயாராயிருந்தார்கள். 'சுபவிரயங்கள்' என்று சோதிட பாஷையில் ஒரு பதப்பிரயோகம் உண்டு. 'சுபமான வீண்செலவுகள்' என்று அதற்கு அர்த்தம். எஸ். பி. எஸ். ஸைப் பொறுத்தவரை இது ஒரு "சுப விரயம்"தான்.

ஆனால் பணம் விரயமாகாமல் சினிமாவில் லாபம் சம்பாதிக்கவே முடியாது என்பதைப் பாலபாடமாகவே அவர் கற்றுத் தெரிந்துகொண்டிருந்தார்.

ஒரு நட்சத்திர அந்தஸ்துள்ள நடிகை பாதாம்கீர் கேட்டால் அவள் உதவியாள்—மேக்—அப்—மேன் நடிகையின் தாய் என்ற பெயரில் அவள் மெய்க்காப்பாளராக அல்லது பொய்க்காப்பாளராக செட்டுக்குள் வரும் மூகாட்டி, கார் டிரைவர் இத்தனை பேருக்கும் பாதாம்கீர் வாங்கிவர வேண்டியிருந்தது. ஆரம்பத்தில் இது எரிச்சலூட்டியது.

"என்னப்பாது? பணத்தை சும்மா வாரி விடறீங்களே? யார் அப்பன் வீட்டுச் சொத்துப் பாழ்போகுது? அந்தப் பொம்பளைத்தான் நடிக்கிது. லைட் வெளிச்சத்தில் நின்னு வாட வேண்டியிருக்கு. பாதாம்கீர் கேட்குது! இவனுகளுக்கெல்லாமும் கூடப் பாதாம்கீர் இல்லாட்டி வேறஎதுவும் தொண்டையிலே எறங்காதோ?"—என்று கடுமையாகக் கண்டித்துக்கொண்டிருந்தார் எஸ். பி. எஸ். நடைமுறையில் அதைல் பல இடைஞ்சல்களை அவர் சந்திக்கவேண்டியிருந்தது. "என்ஞய்யா இதுமாதிரிக் கஞ்சப் பெட்டிப் புரொட்யூஸரை நான் பார்த்ததே இல்லை" என்று அவர் காதுபடவே பேச ஆரம்பித்தார்கள்.

மெல்ல மெல்ல அநுபவம் வந்த பின்பு அவர் முற்றாக மாறினார். யாதார்த்தத்தைப் புரிந்துகொண்டார்.

'இந்தக் கலையே ஒரு சுபவிரயம், இதில் போய் விரயம் வீண், என்று பார்க்கக் கூடாது. வாழ்க்கையில் இப்படி எத்தனையோ அழகான வீண் செலவுகள் இருக்கின்றன. விறகு வெட்டுகிறவன் நாள்முழுவதும் நெற்றி வேர்வை ஆறாக ஓட வேலை செய்துவிட்டு முப்பது ரூபாய்க்கும் குறைவாகக் கூலி வாங்கிக் கொண்டு போகிற இதே உலகில் அரைமணி நேரம் பாடுகிற இசைக்கலைஞன் கால்மணி நேரம் ஒரு ஷாட்டுக்கு நடிக்கிற நடிகை, ஆயிரக்கணக்கில் வாங்குகிறாளே என்று தர்க்கம் செய்து பயனில்லை. அது வேறு இது வேறு.

'நிறைய விரையம் செய்தால்தான் நிறையச் சம்பாதிக்க முடியும் என்கிறமாதிரி ஒருகலை இது! இங்கே சிக்கனம் பார்க்க விரும்புகிற நல்லவனை எல்லாருமாகச் சேர்ந்து நஷ்டப்படுத்தி விடுவார்கள். சுபவிரயத்தைச் சகித்துக் கொள்கிற மனப் பக்குவமே இதில் வெற்றி'—என்ற இரகசியம் அவருக்குப் புரிந்த பின் அவர் தேறியிருந்தார்.

பதினைந்து வருஷங்களுக்கு முன் தேவகோட்டையில் எஸ். பி. எஸ், சிட்பண்ட்ஸ் அதிபராயிருந்த சொ. ப. சொ. வேறு இன்றைய எஸ். பி. எஸ். வேறு. அன்றைய எஸ். பி. எஸ். அறவே மாறிவிட்டார் இப்போது, ஐம்பதினாயிர ரூபாய் சலவை நூறுகளாக வாங்க நூற்று இருபத்தைந்து ரூபாய் வட்டம் கொடுக்க அன்றைய சொ, ப. சொ. துணிந்திருக்க மாட்டார். இன்று அப்படிப் புது நோட்டுக்களாகக் கொண்டு போய்க் கொடுப்பது ஒரு நடிகையை மகிழ்விக்கும் என்று புரிந்துவிட்டால் அதை உடனே நிறைவேற்றித் தருவது தம் கடமை என்று புரிந்துகொண்டு செயல்படக் கற்றுக் கொண்டுவிட்டார் என்று தான் சொல்ல வேண்டும். இந்த ஞானம் தான் தொழிலில் அவருக்கு மேலும் மேலும் வெற்றியைக் கொடுத்தது என்று சொல்ல முடிந்தது. மார்க்கெட்டில் ''எஸ். பி. எஸ். அண்ணனா? ஃபார் ஹிம்

நத்திங் இஸ் இம்பாஸிபிள்'' என்று பேசக்கூடிய பெருமை யைத் தந்திருந்தது.

''உலகில் சந்தோஷமாக இருக்க ரெண்டு வழிங்க இருக்கு. மத்தவங்களைக் கஷ்டப்படுத்திச் சந்தோஷம் அடை யிறது ஒண்ணு. அதிலே எனக்கு நம்பிக்கை இல்லே. மத்தவங்களைத் தாராளமாச் சந்தோஷப் படுத்தி நாமளும் சந்தோஷமா இருக்கிறது இன்னொண்ணு. இந்த ஃபீல்டிலே இன்னிக்கி இந்த ரெண்டாவது வழிதான் எனக்குப் பிடிச் சிருக்கு'' என்று எஸ். பி. எஸ். தம் வாழ்க்கை பிலாஸபியைத் தாமே எப்போதாவது ரொம்பவும் வேண்டப் பட்டவர்களிடம் சொல்வது உண்டு.

''ஒரு முழுப் புரொடக்ஷனுக்கு ஆகிற செலவுகளை ரெண்டு மூணு லொக்கேஷன் ஷாட்டுக்காக வீணாக்கணுமா?'' என்று எஸ். பி. எஸ்.ஸின் நண்பர் ஒருவர் அவர் தம்முடைய யூனிட்டோடு வெளிநாடு புறப்படுவதற்கு முன் கேட்டார்.

''விரயம் தான் நஷ்டம். இது வெறும் விரயமில்லே, சுபவிரயம். இதுலே நஷ்டம் வராது'' என்று சுருக்கமாகப் பதில் சொன்னார் எஸ். பி. எஸ். 'சுபவிரயம்' என்ற வார்த்தை அவருக்கு மிகவும் பிடித்த ஒன்று.

அதைவிட வேடிக்கை என்ன வென்றால் முழு யூனிட்டுக்கு மான வெளிநாட்டுப் பயண உடைகள் எடுக்கத் தைக்க-என்று எல்லாச் செலவுகளையும் அவரே பார்த்துக் கொண்டார்.

யூனிட் முதலில் லண்டன் போய்விட்டு அங்கே மூன்று நாள் தங்கியபின் அப்புறம் பாரிஸ் போவது என்று ஏற்பாடாகி இருந்தது.

ஒவ்வோர் இடத்திலும் படப்பிடிப்பு வேலைகள் மிகச் சில மணி நேரங்கள் தான். ஷாப்பிங், ஊர் சுற்றிப் பார்த்தல் ஆகியவற்றுக்கே அதிக நேரம் செலவாயின.

லண்டனில் அவர்கள் இரண்டு ஹோட்டல்களில் தங்கி னார்கள். சுலபா, கவிதா, ஆடிட்டர், எஸ். பி. எஸ். நால்வரும்

ஹைட்பார்க் எதிரே இருந்த மார்பிள் ஆர்ச் அருகிலுள்ள பிரபல 'கம்பர்லாண்ட்ஸ்' ஹோட்டலில் தங்கினார்கள். மற்ற வர்கள் கொஞ்சம் உள்ளே பிக்காடில்லி சர்க்கஸ் அருகே ஓர் இரண்டாந்தர ஹோட்டலில் தங்கினார்கள். எல்லாமே வசதியாகத்தான் இருந்தன.

பகலில் ஹைட்பார்க்கில் கொஞ்சம் ஷூட்டிங் நடந்தது. சுலபாவும், கதாநாயகனும் டூயட் பாடியபடியே ஓடிப்பிடித்து விளையாடுகிறார்கள். பார்க்குக்கு உள்ளே இருந்த 'ஸெர்ப் பண்டைன்லேக்'கில் இருவரும் படகு செலுத்துகிற மாதிரி ஒரு ஷாட் எடுத்துக் கொள்ளப்பட்டது. ஹைட்பார்க்கிலோ, ஏரியிலோ, பகலில் கூட்டமே இல்லை, இருந்த ஒரு சிலரும் இவர்களது ஷூட்டிங்கைத் திரும்பிப் பார்க்கக் கூட இல்லை, பட்டிக்காட்டான்கள் யானை பார்க்கிறமாதிரி ஷூட்டிங் பார்க் கக் கூடும் நம்மூர்க் கூட்டம் லண்டனில் இல்லாதது புதுமையாயிருந்தது. உள்ளூறக் கொஞ்சம் ஏமாற்றமாகவும் இருந்தது. தங்களையோ தங்கள் படப் பிடிப்பையோ யாருமே பொருட்படுத்தவில்லை என்பதனால் வந்த ஏமாற்றம் அது. கவனிக்கப்படாமல் விடப்பட்ட வருத்தம் உள்ளூற இருந்தது.

## 6

அதே போலப் பாரிஸில் ஈஃபில் டவர் அருகேயும் வார் ஸெயில்ஸ் அரண்மனை முகப்பிலும் படப்பிடிப்புக்கள் இருந் தன. பாரிஸில் இருந்தபோது ஒரே ஒரு நாள் ஆடிட்டரும், சுலபாவும் தலைமறைவானார்கள். காலை ஆறு மணிக்கே புறப் பட்டு 'ஜூரிச்' போனார்கள். அன்று முழுவதும் ஜூரிச்சில் கழித் தார்கள். பாரிஸிலிருந்து ஆடிட்டர் கனக சபாபதியின் உற வினர் ஒருத்தர் முந்திய தினமே 'ஜூரிச்' சென்று எல்லா ஏற் பாடுகளையும் செய்து முடித்து விட்டு இவர்களை விமான நிலை யத்துக்கு வந்து அழைத்துப் போனார். 'ஸ்விஸ்பாங்க்' கணக்கு விவகாரத்தை முடித்துக் கொடுத்தார். பிற்பகலுக்குள் அந்த

வேலை முடிந்து விட்டது. பிற்பகலுக்கு மேல் அங்கிருந்து ஜெனீவாவுக்குப் போய்ச் சுற்றிப் பார்த்து விட்டு மறுநாள் காலை ஜெனிவாவிலிருந்து பாரிஸ் திரும்பினார்கள்.

இந்தியாவில் இந்த மாதிரி அவள் இஷ்டம் போல் சுற்ற முடியாது. படப்பிடிப்பு என்றால் அது கிராமமாயிருந்தாலும் நகரமாயிருந்தாலும் கூட்டம் கூடிவிடும். இங்கே பாரிஸில் படப்பிடிப்புக்காக மேக்கப் போட்டுக் கொண்டு நின்றாலும், நீச்சல் உடையில் நடுத்தெருவில் நின்றாலும் சீந்துவாரில்லை, யாரென்றோ ஏனென்றோ பார்ப்பவர்கள் இல்லை. விசாரிப்பவர் கள் இல்லை. இப்படிக் கவனிக்கப்படாமலும் விசாரிககப்படா மலும், வியக்கப்படாமலும் இருந்ததில் நிம்மதி என்று இவர் களே சொல்லிக் கொண்டாலும் உள்ளூற ஆதங்கமாகத்தான் இருந்தது. 'டேய் சுலபா டோய்!'—என்று காணாததைக் கண்டுவிட்ட மாதிரித் துரத்திக் கொண்டு ஓடிவரும் பாமரக் கூட்டம் இல்லாததில் உள்ளே ஏக்கமாக இருந்தாலும் வாய் என்னவோ, 'இங்கே ரொம்ப ஃப்ரீயா இருக்கு, ரசிகர்களோட டிஸ்டர்பன்ஸே இல்லை'-என்று சொல்லி மகிழ்வது போலப் பாசாங்கு செய்தது. சுற்றி இருப்பவர்களுக்குத் தங்களை யாரென்றே தெரியவில்லை. தாங்கள் யாரென்று அவர்கள் கவலைப்படவும் இல்லை என்பது ஊமைக் காயமாக உள்ளே வலிக்கத்தான் செய்தது. தங்களை வியந்து தொழாதவர்கள் மத்தியில் தாங்கள் இருக்கிறோம் என்பதைச் சிரமப்பட்டுத்தான் சகித்துக்கொள்ள வேண்டியிருந்தது. யாரும் 'ஆட்டோ கிராப்' கேட்கவில்லை. பொது இடங்களில் ஷூட்டிங் நடப்பதுகூட யாருடைய கவனத்தையும் கவரவில்லை. அடிவருடிகளும், துதி பாடிகளும், பிறரைக் கவனித்துக் கவனித்தே தம்மை மறந்து விடுவோரும் நிறைந்த இந்தியா மாதிரி இந்த நாடுகள் இல் லாதது புரிந்தது, யாரையும் யாரும் கவனிக்கவே மாட்டே னென்கிறார்கள். அவரவர்கள் வேலையை அவரவர்கள் கவனித் தார்கள். மற்றவர்களைப் பார்த்துப் பொறுமைப் படவும் வியக்க வும் யாருக்கும் நேரமோ அவகாசமோ இருந்ததாகத் தெரிய வில்லை, இது புதுமையாயிருந்தது. இந்திய இட்லி, இந்திய

ரசம், இந்திய சாம்பார் எல்லாம் கிடைக்காதது போல இந்தியக் குணங்களும் காணக் கிடைக்கவில்லை இங்கே.

காதுத் தோட்டுக்கும், மூக்குத்திக்கும் வைத்துக் கட்டுவதற்கு நல்ல ப்ளூஜாக்கர் வைரம்-பெல்ஜியம் கட்டிங் உள்ளதாகத் தேர்ந்தெடுத்து வாங்க வேண்டுமென்றாள் சுலபா.

யூனிட்டில் மற்றவர்களை எல்லாம் பாரிஸிலிருந்தே ஊர் திரும்பச் சொல்லிவிட்டுச் சுலபா, கவிதா, கனகசபாபதி, எஸ். பி. எஸ். நால்வரும் வைரம் வாங்குவதற்காக ஆம்ஸ்டர்டாம் சென்றார்கள்.

திரும்பிய பின் கனகசபாபதி கூறியது போலவே சுலபாவை இந்த வெளிநாட்டுப் பயணம் மாற்றியிருந்தது. அவள் உற்சாகமாகவும் விரக்தியற்றும் இருந்தாள். புகழுக்காகவும், கூடி நிற்கிற துதிபாடிகளுக்காகவும் ஏங்கினாள். வைரம் தேர்ந்தெடுத்து வாங்க ஆசைப்பட்டாள். ஸ்விஸ் கிரெடிட் வங்கியில் இரகசிய எண்கணக்கு வைத்துக்கொண்டாள். எஜமானிக்கு வாழ்க்கையில் பிடிப்பு உண்டாக்க இந்தப் பயணம் பயன் பட்டதைக் கவிதா உணர்ந்தாள்.

லண்டனில் இரண்டு காட்சிகளும், பாரிஸில் இரண்டு காட்சிகளும் எடுத்து முடித்ததுமே படப்பிடிப்பு வேலைகள் முடிந்து விட்டன. வேடிக்கை பார்க்கக் கூட்டம் கூடாத-சடங்கு போன்ற-எந்த இடைஞ்சலும், அசௌகரியமுமற்ற அந்தப் படப்பிடிப்புகள் சுளுவாக முடிந்து விட்டன. எல்லாரும் ஊர் சுற்றுவது-பாரிஸ் பை நைட்-பஸ்டிரிப், ஷாப்பிங் போவது ஆகிய வேலைகளைத் தான் உற்சாகமாகச் செய்தார்கள்.

எஸ். பி. எஸ். புரொடக்ஷன் ஸார் பாரிஸில் படப்பிடிப்பு -லண்டனில் சுலபா-என்று செய்திகளை முன் கூட்டி ஊரிலிருந்து புறப்படும் போதே எழுதிக் கொடுத்தபடி தமிழ்த் தினசரிகள் பிரமாதமாக நாலுகாலம் தலைப்போடு பிரசுரித்து ஊரையே கலகலக்கப் பண்ணிக் கொண்டிருந்தன. அவர்கள் யூனிட் வெளி நாட்டில் இருந்த இருபது நாளும் வெளிவர

ஏற்ற இருபது தலைப்புச் செய்திகளை அழகாக எழுதிக் கொடுத்து வெளியிடும் பொறுப்பு-புரொடக்ஷன் மானேஜரிடமும் வசனகர்த்தாவிடமும் விடப்பட்டிருந்தது. அவர்கள் அதை ஜிஞ்ஜாமிர்தம் பண்ணினார்கள். வெளி நாட்டுப் படப்பிடிப்புக்கு விளம்பரம் கிடைத்துக் கொண்டிருந்தது.

ஊர் திரும்பியதும் மீதி உள்ள நாலைந்து ஷெட்யூல்களை முடித்து ரீரிகார்டிங், எடிடிங் பூர்த்தி செய்தால் சூட்டோடு சூடாகப் படத்தை ரீலீஸ் பண்ணிவிடலாம். ஏரியா விற்பனை முன்னைவிட அதிகமாக ஆகும். அதில் வருகிற லாபத்தைப் பார்க்கும்போது இந்த வெளிநாட்டுப் படப்பிடிப்புச் செலவு கொசுக்கடி மாதிரித்தான். சட்டப்படி கிடைத்த வெளிநாட்டுச் செலாவணி தவிரவே எஸ். பி. எஸ். முதல் சுலபா வரை வேறு தனிவசதிகளும் கைநிறைய இருந்தன.

ஜூரிச் அக்கவுண்ட், ஆம்ஸ்டர்டாமில் பதினாறுகல் வைத்துத் தோடு கட்டுவதற்கு வைரம் எல்லாம் நினைத்தது போல் செய்து கொள்ள முடிந்தது.

அதிகம் பிரபலமாகப் பிரபலமாகச் சுலபாவுக்குள் அப்படி ஒரு பிடிவாத குணம் வளர்ந்துவந்தது. 'தான் நினைத்தது நடக்க வேண்டும், அதுவும் நினைத்தபடியே பிசகாமல் நடக்க வேண்டும். அதற்குத் தடையாயிருப்பதை எல்லாம் நிர்மூலமாக்கிவிட வேண்டும் என்ற மனப்பான்மை வளர்ந்துகொண்டு வந்தது. 'எல்லார் நினைப்பதும் நடக்க வேண்டும். எல்லாரும் ஆசைப்பட வேண்டும், எல்லாரும் வாழ வேண்டும்' என்று எண்ணி அங்கீகரித்து ஏற்றுக் கொள்ளுவது ஜனநாயக மனப்பான்மை. 'தான் நினைப்பது மட்டும் நினைத்தபடி நடக்க வேண்டும்'-என்று எண்ணுவது சர்வாதிகாரம். உள்ளுக்குள் அவள் சர்வாதிகாரி போலத்தான் ஆகியிருந்தாள். சர்வாதிகாரம் செல்லுபடி ஆயிற்று. சலாம் போட்டுக் கொண்டு அடி பணிந்தார்கள் இங்கே.

சலவை நோட்டாக வேண்டும்என்றால் அப்படியே செண்ட் தெளித்து எடுத்து வந்து காலடியில் குவித்தார்கள்.

வெளிநாடு போய்ப் படப்பிடிப்பு நடத்த வேண்டும் என்றால் உடனே வெளிநாட்டுப் பயணத்துக்கு ஏற்பாடு செய்தார்கள். எல்லாமே நடந்தன. எல்லாமே நினைத்த படியே நினைத்த விதத்தில் நடக்கிற போதும் மனம் அதே நிலைக்குப் பழகி அதையே எங்கும் எதிர்பார்க்கிறது. எதிர்பார்த்தது, எதிர்பார்க்கும்.

சுலபாவும் இப்போது அந்த நிலைக்கு வந்திருந்தாள். அவள் சொன்னதை 'அது சாத்தியமில்லை'-என்று யாராவது மறுத்துப் பேசினால் அவளுக்குக் கோபம் வந்தது. அவள் சொல்கிற எதையும் யாராவது எதிர் நின்று விவாதிக்கவோ, வினவவோ முயன்றால் கூடப் பொறுத்துக் கொள்ள முடிய வில்லை அவளால். ஒருவரிடம் ஆணவம் கொடி கட்டிப் பறப்ப தற்கு இவை எல்லாம் புற அடையாளங்கள் என்றால் சுலபா விடம் இந்த அடையாளங்கள் வெளிப்படையாகவேத் தென் படத் தொடங்கின.

''உன்னை யாரும் யோசனை கேக்கலே! பேசாமே நான் சொல்றதைக் கேளு! எனக்கு எதை எப்படிச் செய்யணும்னு தெரியும்''-என்பன போன்ற வாக்கியங்கள் அவளிடம் அடிக் கடி வெளிப்பட்டன இப்போது.

கவிதா இதைக் கவனித்தாலும் தனக்கேன் வம்பு என்று பேசாமல் இருந்து விட்டாள். ஒரு படத்தில் ஒரு காட்சியில் அவள் பாடுவதாக 'நான் ஒரு பயித்தியக்காரி'- என்ற எடுப்பு டன் ஒரு பாடல் இருந்தது. அந்தத் திரைக் கதையில் அந்தக் குறிப்பிட்ட காட்சியில் அவள் அப்படிப் பாடுவதுதான் பொருத் தம் என்று ஏற்பாடு செய்து பாடலாசிரியரும் இசையமைப் பாளரும் பலநாள் சிரமப்பட்டு அதை இசையமைத்து முடித்தி ருந்தார்கள். அவளுக்கு அந்தப் பாட்டுத் தன்னுடைய 'இமேஜைக்' கெடுத்து விடுமோ என்று மனத்திலே பட்டது. அவ்வளவு தான். மெல்ல டைரக்டர் மூலம் அந்தப் பாடலாசிரி யருக்கும் இசையமைப்பாளருக்கும் சொல்லி அனுப்பினாள். அது 'ஹிட் ஸாங்' ஆகப் புகழ் பெறும் என்று நம்பிக்கொண்டி

ருந்த அவர்களுக்கு இவள் கூறியதைக் கேட்டதும் தூக்கி வாரிப் போட்டது. இவள் பாட்டை மாற்றச் சொல்லி வற் புறுத்தினாள்.

''உங்களைத் தனிப்பட யாரும் நெனைக்க மாட்டாங்க மேடம்! அந்தப் படத்திலே நீங்க நடிக்கிற ரோலுக்கு அந்தப் பாட்டுப் பொருந்துதா இல்லியான்னு மட்டுமே பார்ப்பாங்க''- என்று எவ்வளவோ சொல்லி வாதாடினார் பாடலாசிரியர், அவர் வாதத்தை அவள் ஏற்கவில்லை.

கதாசிரியரும், இசையமைப்பாளரும், பாடலாசிரியரும் இணைந்து மறுத்தனர். ''சரி! நாளைக்குப் பார்ப்போம்! போய் வாங்க''-என்று அவர்களை விடைகொடுத்து அனுப்பி விட்டு அவர்கள் சம்பந்தப்பட்ட சில தயாரிப்பாளர்களுக்கு அன் றிரவே ஃபோனில் தகவல் சொல்லிப் பேசினாள் சுலபா. மூன்று பேருக்கும் அடுத்தடுத்துச் சில தயாரிப்புக்களுக்கான ஒப்பந்தங் கள் இரத்து ஆயின. ஒன்றும் புரியாமல் திணறி நடுநடுங்கிப் போனார்கள் அவர்கள். விசாரித்ததில் அது சுலபாவின் வேலை என்று புரிந்தது. பிழைப்பைக் கெடுக்கிறாளே என்று அஞ்சி நடுங்கி ஓடிவந்து அவளிடம் முறையிட்டார்கள். கெஞ்சிக் கேட்டு மன்றாடினார்கள்.

''இதுக்கும் எனக்கும் சம்பந்தமே இல்லை'' - என்று சிரித்து மழுப்பினாள் அவள். அந்தச் சிரிப்பில்தான் மர்மம் இருந்தது. எச்சரிக்கை இருந்தது. 'என்னிடமா வாலாட்டு கிறீர்கள்?' - என்ற எச்சரிக்கை அதில் தொனித்தது. உடனே பாடலும் இசையும் மாறின. 'நானொரு பயித்தியக் காரி'—பாட்டு மாற்றப்பட்டது. தொழிலையும் பிழைப்பையும் காப்பாற்றிக்கொள்ளும் ஆத்திரத்தில் பாடலாசிரியர் சுல பாவை வாழ்த்தியே ஒரு பாடலைத் தனியாக எழுதி வந்து நேரில் அவளிடமே பாடி விட்டார்.

கலை பாராட்டும் கவின் பேரழகே
கண் பார்த்துக் கருணை காட்டு!

பல பாராட்டிப் பயனென்ன?
பகை பாராட்டி விளைவென்ன?
நிலை மாருத பெண்ணரசி
நித்தியமாம் நடிப்பரசி!
சுலபாவைப் போலுண்டோ தொல்லுலகில்?

என்று பாடிச் சட்டம் போட்டு வரவேற்பு இதழ் போல் கண்ணுடியிற் பொதிந்து தந்து அவளிடம் மன்னிப்பும் கேட்டார் பாடலாசிரியர்.

அதன் பின்புதான் இரத்து ஆன ஒப்பந்தங்கள் அவளுக்குத் திரும்பக் கிடைத்தன. தான் நினைத்ததற்குக் குறுக்கே நிற்பவர்களை அவள்...பொறுத்து விட்டுக் கொடுத்ததே கிடையாது. எப்படியும் அவர்கள் பணிந்தே ஆக வேண்டும். அதற்கான காரியங்களை அவளால் செய்ய முடிந்தது. நிகழ்காலம் இப்படி நடந்தாலும் கடந்த காலத்தில் தன்னை எதிர்த்தவர்களைத் தேடிப் பழி வாங்க முடியவில்லையே என்கிற கவலை உள்ளூற அவளை வாட்டியது உண்டு. அப்படிப்பட்டவர்களை அவள் மறக்க முயன்ருள். ஆனல் மறப்பது சுலபமாக இல்லை.

# 7

சினிமாவில் சேர்த்து விடுவதாக சென்னைக்கு அழைத்து வந்து தன்னை விபசார விடுதியில் விற்றுவிட்டு இரவோடு இரவாகத் தலைமறைவாகிப் போனனே குப்பையரெட்டி அவன் இப்போது அகப்பட்டால் பழி வாங்கலாம். அல்லது பழியைத் தீர்த்துக் கொள்ளலாம். உலகத்தின் எந்த மூலையில்-எந்த நிலையில் எப்படி அவன் இருந்தாலும் இப்போது அவளால் பழி தீர்க்க முடியும். ஆனல் அகப்பட வேண்டுமே? அவன் அகப்பட்டால் அவளால் எதுவும் செய்ய முடியும். 'சுலபா'வே ஒரு குணசித்திரமாகிப் போனள். விரக்தி ஒரு புறமும், தன்னை எதிர்ப்பவர்களை வைரம் வைத்து அழிக்கும் குணம் ஒருபுறமுமாக அவள் விளங்கினள்.

மனிதர்கள் மெல்ல மெல்ல அவளுக்குப் பயப்பட ஆரம்பித்தார்கள். பயம் மரியாதையைக் கொண்டு வந்தது. மரியாதை பயத்திலிருந்து விளைந்தது.

பயப்படாதவர்கள், எழுந்து நிற்காதவர்கள், தன்னைப் பார்த்ததும் பீடி குடிப்பதை நிறுத்தி விட்டுப் பதறிக் கை கூப்பாதவர்கள், எல்லாரையும் ஞாபகமாக வஞ்சம் தீர்க்கிற குணம் அவளுள் வளர்ந்தது. புற எளிமை என்பது ஒரு வேஷமாக மட்டும் இருந்தது.

ஒரு வகையில் பார்த்தால் இது தாழ்வு மனப்பான்மையின் விளைவுதான். தாழ்வு மனப்பான்மைதான் மறுபுறத்தில் ஆணவமாக உருவெடுக்கும். பயமும், அவநம்பிக்கையும்தான் வன்முறையாகவும் பிடிவாதமாகவும் வெளியே தெரியும். சுலபாவிடமும் அப்படித்தான் அவை தெரிந்தன.

சுலபா யாரையும் எதையும் நம்ப மறுத்தாள். எல்லார் மேலும் சந்தேகப் பட்டாள். மற்றவர்களை நம்ப மறுப்பவர்களுக்குத் தன்னம்பிக்கை குறைவாகவே இருக்கும். அவளுக்கும் அப்படித்தான் இருந்தது.

புகழை அவள் வெறுத்தாள் என்றால் அதற்குக் காரணம் புகழுகிறவர்கள் மேலெல்லாம் அவள் சந்தேகப் பட்டாள். அவரவர்கள் எப்படி எப்படி இருப்பார்களோ அப்படி அப்படித் தான் இருக்க முடியும் என்று ஒப்புக்கொள்ள மறுத்து இப்படி இப்படித்தான் இருக்க வேண்டும் என்று தானாக எதிர் பார்த்தாள். அவள் எதிர்பார்த்தபடி மனிதர்கள் இல்லாதபோது அவளுக்குக் கோபம் வந்தது. தான் சொல்லியது தவறாகவே இருந்தாலும் மனிதர்கள் அதைக் கேட்க வேண்டும். அதற்கு இசைந்து அதன்படி செயல்பட வேண்டும் என்று அவள் விரும்பினாள்.

எதிர்த்துப் பேசுபவர்கள், அவள் யோசனை சரியில்லை என்பவர்கள் மேலெல்லாம் கோபப்பட்டாள் சுலபா.

இதைப் பலம் என்பதா, பலவீனம் என்பதா என்று புரியாமல் கவிதாவும் மற்றவர்களும் சிரமப்பட்டார்கள்.

தன்னை இலட்சியம் செய்து மதித்தவர்களைச் சுலபா மதிக்காமல் அலட்சியம் செய்தாள். தன்னை அலட்சியம் செய்தவர்களைப் பழிவாங்கத் திட்டமிட்டாள்.

ஒரு குளோஸப்-ஷாட்டில் மகா நிபுணரான கேமிராமேன் ஒரு கோணத்தை முடிவு செய்தபின் இவள் தன் முகத்தை அந்தக் கோணத்திலிருந்து படம் பிடித்தால் நன்றாயிராது என்றாள்.

"இல்லேம்மா! நான் சொல்றதைத் தயவு செய்து கேளுங்க! இது சோகக் காட்சி. இதிலே இதுதான் பிரமாதமா இருக்கும்"—என்று காமிரா நிபுணர் வாதிட்டார். இவள் நடிக்க வருவதற்கு முன்பே காமிரா நிபுணராகப் பெயரெடுத்திருந்தவர் அவர்.

அதற்கு ஒப்புக்கொண்டது போல் சுலபா மௌனமாயிருந்து விட்டாள். ஆனால் அன்றிரவே தயாரிப்பாளர் அவளைச் சந்தித்தபோது அவரது படத்தில் தான் மேற்கொண்டு "நடிக்க முடியாது" என்றாள் சுலபா, "ஏன்? என்ன காரணம்...யாராவது உங்க மனசு நோகும்படி நடந்துக்கிட்டிருந்தா எங்கிட்டச் சொல்லுங்க"—என்றார் தயாரிப்பாளர்.

சுலபா மௌனம் சாதிக்கவே அவரது கோபம் அதிகமாயிற்று.

"யார் என்ன செஞ்சாங்கன்னு சொல்லுங்கம்மா... இப்பவே அவனைக் கணக்குத் தீர்த்து வீட்டுக்கு அனுப்பறேன்"—

"என் தலை எழுத்து ஒரு காமிராமேனிட்ட நான் அவமானப்பட வேண்டியிருக்குது."

அந்தக் காமிராமேன் ஒரு ஜெண்டில்மேன் என்பது தயாரிப்பாளரின் அபிப்பிராயமாயிருந்தது. சுலபா காமிரா

மேனேக்குறை கூறியதும் அவர் இருதலேக் கொள்ளி எறும் பாகத் தவித்துப் போனார். என்ன பதில் சொல்வதென்றே தெரியவில்லே அவருக்கு. அவளோ முரண்டு பிடித்தாள். தயாரிப்பாளர் கெஞ்சினார்:-

''நாட்டிலே இன்னிக்கி முன்னணியிலே இருக்கிற ரெண்டு மூணு புகழ்பெற்ற காமிரா மேன்களிலே அவரும் ஒருத்தராச்சுங்களே மேடம்! நீங்கதான் கொஞ்சம் பெரியமனசு பண்ணணும்''—

''அப்போ நாங்கள்ளாம் நாட்டிலே உள்ள புகழ்பெறாத ஆளுங்களா? இல்லே பத்தோடப் பதினொண்ணுங்கிற மாதிரி ஆளுங்களா? நீங்க சொல்றதைப் பார்த்தால் அதுமாதிரித் தொனிக்குதே?''

''அய்யய்யோ! நான் அந்த மாதிரி அர்த்தத்திலே சொல்லலே அம்மா. ஒரு 'ஆங்கிளே' அவர் சரியான 'ஆங்கிள்'னு முடிவு பண்ணியிருந்தா அது படத்துக்கு உபயோகமானதாகத்தான் இருக்கும். தப்பா எதுவும் இருக்காதேன்னு...?''

''அவரு பெரிய ஆளானு அது அவர் மட்டிலே...எனக்கு அந்த 'ஆங்கிள்' பிடிக்கலேன்னு அவர் ஏன் கேட்கமாட்டேங்கிறாரு?''

அவள் குரலில் கடுமையும் முரண்டும் ஏறின. அவருக்குப் பயமாயிருந்தது. தனக்குச் சம்பந்தமில்லாத விஷயத்தில் வீம்புக்காக அவள் தலேயிடுகிருள் என்று அவருக்குப் புரிந்தாலும் ஒன்றும் செய்யமுடியாமல் இருந்தது.

'இவளுடைய நடிப்பு ஏதோ ஓர் இடத்தில் சரியில்லே' என்று காமிராமேன் கூற முன் வந்தால் அதற்கு இவள் என்ன மதிப்பளிப்பாள் என்று எண்ணிப்பார்த்தார் அவர். அப்படித் தன் நடிப்பைப் பற்றி மற்றொருவர் அபிப்ராயம் சொல்ல முன்வருவதையே அவள் சகித்துக் கொள்ள மாட்

டாள் என்பது அவருக்குப் புரிந்தது. ஆனலும் மற்றவர்கள் விஷயத்தில் அதிக உரிமை எடுத்துக்கொண்டு தலையிட அவள் சிறிதும் தயங்கவில்லை. படிப்பறிவும் காரணகாரியச் சிந்தனையுமற்ற அவளுடைய 'ஈகோ'வின் கூர்மை பனங்கருக்குப் போல எதிர்ப்படுகிறவர்களைத் தாறுமாருக அறுக்கக் கூடியதாயிருந்தது. இவளையும் விரோதித்துக் கொள்ள முடியாது. காமிராமேனையும் விரோதித்துக் கொள்ளக் கூடாது. எப்படியாவது இரண்டு பேரையுமே சமாளித்தாக வேண்டும் என்று முடிவு செய்தார் தயாரிப்பாளர். காமிராமேன் எடுத்துச் சொன்னல் கட்டுப்படுவார். கேட்டுக் கொள்வார். ஆகவே அவரிடம் இதமாகப் பேசிப் பார்த்து அவர் மூலமே இவளை வழிக்குக் கொண்டு வருவதென்று முடிவு செய்தார்.

காமிரா மேனைச் சந்தித்தார். தம் நிலையை விளக்கினர். காமிராமேனுக்குப் புரிந்தது.

''சார் இது ஸைக்கலாஜிகல் டிஸ்பியூட்! இதை எந்த ஆங்கிள்லே சரிப்படுத்தறதுங்கிறதை எங்கிட்டவே விட்டுடுங்க. நானே சரிப்படுத்திடறேன். வேற ஒண்ணுமில்லே! அந்தம்மா வோட 'ஈகோ'வை நான் ஒத்துக்கிறேனு இல்லையாங்கிறது தான் அவங்க கேள்வி. அந்த 'ஈகோ'வை நான் எதிர்த்துச் சர்ச்சை செய்ய மாட்டேன்னு அவங்க புரிஞ்சுக்கிட்டாலே என்னை விட்டுடுவாங்க''

''படிச்சவங்களோட ஈகோவாவது வெண்ணெயிலே இறங்கிற கத்திமாதிரி ஓசைப்படாமச் சிதருமல் அறுக்கும். படிக்காதவங்க ஈகோவோ பனைமடல் மாதிரி இரத்தம் சிந்த வச்சிரும்''

''சரியாச் சொல்றீங்க! இந்தம்மாவோட வீம்புக்கும் ஈகோவுக்கும் காரணமே அவங்களோட தாழ்வு மனப்பான்மை தான். அதை நான் நல்லாப் புரிஞ்சுக்கிட்டிருக்கேன். எங்கிட்ட விட்டுடுங்க நானே அவங்களைச் சந்தித்துப் பேசிச் சரிப்படுத்திக்கிறேன்'' என்று காமிராமேன் நம்பிக்கையோடு உறுதி கூறினர். உலக அநுபவம் மிக்கவரும் சுலபாவை விட வயது

மூத்தவருமான அந்தக் காமிராமேன் மறுநாளே அந்தப் பிரச்னைக்கு முடிவு கட்டி விட்டார்.

பூக்கடையில் ஐந்து ரூபாய் செலவழித்துப் பாலிதின் உறையில் அழகாக அடுக்கிய மலர்க்கொத்து ஒன்றை வாங்கிக் கொண்டு அவளைச் சந்திக்கப் போனார் அவர்.

அவள் உள்ளே இருந்து கொண்டே அலைக்கழித்தாள்,

''உடம்பு சரியில்லை. இன்னிக்கி யாரையும் பார்க்க முடியாதாம்'' என்று நரசம்மா மூலம் வேண்டுமென்றே சொல்லியனுப்பினாள். அவர் அசரவில்லை.

''இன்னிக்கி வெள்ளிக்கிழமை! மங்கலமான நாள். பூங்கொத்தோடு பார்க்க வந்திருக்கேன். பார்க்காமப் போக மாட்டேன்னு சொல்லுங்க'' என்றார்.

நரசம்மா மறுபடி உள்ளே ஓடினாள். திரும்பி வந்து, ''என்ன விஷயமாப் பார்க்கணும்னு கேட்கிறாங்க'' என்றாள்,

''ஒரு விஷயமுமில்லே. அவங்களுக்கு மரியாதை செலுத்திட்டுப் போக வந்தேன். அவ்வளவுதான்''

அவள் உள்ளே போய்விட்டு மறுபடி திரும்பி வந்து, ''ஒருமணி நேரம் ஆகும்! உங்களால அதுவரை 'வெயிட்' பண்ண முடியுமான்னு கேட்கிறாங்க?'' என்றாள்.

''ஒருமணியோ, ரெண்டு மணியோ அவங்களைப் பார்த்து இந்தப் பூவைத் தராமல் நான் போகப் போறதில்லே''— அவள் தன்னைப் பதம் பார்க்கிறாள் என்று அவருக்குப் புரிந்தது. கயவர்களை அவர்களுக்குத் தோற்பதுபோல் போக்குக் காட்டி விட்டு அப்புறம் தான் ஜெயிக்க வேண்டும் என்ற உத்தி அவருக்கு நன்றாகத் தெரியும்.

முதலில் சொன்னது போல் அவ்வளவு காலதாமதம் செய்துவிடாமல் மிக விரைவிலேயே அவரை உள்ளே கூப்பிட்டனுப்பினாள் சுலபா. போனதும் பூங்கொத்தைக் கொடுத்து விட்டு அவளை இதமாகப் புகழ ஆரம்பித்தார் அவர். ''இன்

னிக்கி இருக்கிற ஸ்டாருங்களிலேயே காமிராவுக்கு அதிர்ஷ்ட மான முகம் உங்களுது தான்.''

முதலில் அவள் நம்பவில்லை. பின்பு அவள் மெல்லமெல்ல இளகினாள்.

''உங்க முதல் படத்திலேருந்து நான் பரம ரசிகன்.''

''ரொம்பப் புகழாதீங்க... ப்ளீஸ்''-

''இந்தச் சமீபத்துக் காமிரா ஆங்கிள் பத்தின சண்டைகூட நமக்குள்ள அவசியமில்லாதது. ஏதோ என்போருத வேளைன்னு தான் சொல்லணும். அந்த ஆங்கிளைக் கூட நீங்க நினைக்கிற படியே மாத்திடலாம்''-

''வேண்டாம்! நீங்க மூத்தவர். அநுபவஸ்தர். உங்க விருப்பப்படியே விட்டுடலாம். தெரியாத்தனமா உங்களைத் தப்பாப் புரிஞ்சுக் கிட்டேன்''

''நீங்க நினைக்கிறபடியே மாத்திடலாம் மேடம். கவலைப் படாதீங்க...''

''வேண்டாம்!பழையபடியே இருக்கட்டுங்க. நான் புரொட் யூஸர் கிட்டப் பேசிடறேன்''-

வந்த காரியத்தை ஜெயித்தாயிற்று. அவர் மேலும் சுலபா வைப் புகழ்ந்து அவள் ஆணவத்தின் கிளர்ச்சி நிலையில் தமது காரியத்தைச் சாதித்துக் கொண்டு திரும்பினார். வெற்றி சுலப மாயிருந்தது.

## 8

சினிமா உலகைப் பொறுத்தவரை அவள் ஆணவத்தை அதுவரை யாரும் தட்டிக்கேட்கவில்லை. சினிமா அவளுக்குச் சேர்த்துக் கொடுத்திருந்த புகழும் செல்வமும் அந்த உலகிற்கு வெளியேயும் அவள் ஆணவம் செலாவணியாகும்படி செய்தி ருந்தது என்பதே உண்மை.

கடந்த காலக் கணக்கு என்ற பழைய பாக்கியில் குப்பையரெட்டி மட்டுமே மீதமிருந்தான். அவனைப் பழிவாங்க அவன் ஆள் அகப்படவில்லை. மேலே ஏறுவதற்கு உயரங்களே மீதமில்லாத அத்தனை உயரத்தில் இப்போது அவள் இருந்தாள். அதனால் தான் சலிப்பாயிருந்தது. முயற்சியும் ஊக்கமும் அற்றிருந்தன.

இன்னும் அடைவதற்கு என்று எந்த வசதியுமே மீதமில்லாத அத்தனை வசதிகளில் அவள் திளைத்துக் கொண்டிருந்தாள். அதனால் வாழ்க்கையைப் பற்றிய தாகம் எதுவுமே இல்லை. மந்தமாக இருந்தது.

உலகில் எல்லாரும் அவளைக் காதலித்தார்கள். அவள் காதலிக்க எதுவுமே யாருமே மீதமில்லைபோல் தோன்றியது.

சுலபாவுக்குச் சில மேல் வர்க்கத்துக் குடும்பத் தலைவிகள் சிநேகிதமாயிருந்தார்கள், அவர்களில் இரண்டொருவர் வீட்டுக்கு அவள் அடிக்கடி போவாள். அவள் வீட்டுக்கும் அவர்கள் வருவார்கள். மனம்விட்டுப் பேசுவார்கள்,

இப்படி அவர்கள் சந்திப்பின்போது பல விஷயங்களைப் பற்றிய பேச்சு வரும். ஆண்கள் யாரும் கூட இல்லாத சமயங்களில் பால் உணர்வு கவர்ச்சி-பிறரை மயக்கும் அழகு-எல்லாம் பற்றிக் கூட அவர்கள் நேரம் போவது தெரியாமல் பேசி இருக்கிறார்கள். விவாதித்திருக்கிறார்கள்.

இத்தகைய சிநேகிதிகளில் ஒருத்திதான் கோகிலா. ஒரு சிமெண்ட் கம்பெனி உரிமையாளரின் நடுத்தர வயது மனைவி. படித்தவள். அவளும், சுலபாவும் தங்கள் அந்தரங்கங்களைப் பகிர்ந்து கொள்வதுண்டு. ஒரு முறை கோகிலா தன் கணவர் ஊரில் இல்லாத சமயமாகப் பார்த்துச் சுலபாவை டின்னருக்கு அழைத்திருந்தாள். கோகிலா, 'சுலபா' இருவருமே எப்போதாவது 'பிராந்தி' குடிப்பது உண்டு. கோகிலாவுக்குச் சுலபாவின் பழக்கம் இது எனத் தெரியும். நடித்துக் களைத்து வீடு திரும்பினால் அயர்ந்து உறங்க இது தேவை என்று ஆரம்பித்து அப்

புறம் இது பழக்கமாகிவிட்டது. 'கோகிலா' ஏதோ பிரசவத் துக்குப்பின் மருந்தாக ஆரம்பித்து அப்புறம் மேல்தட்டு சிநேகிதத்தில் பழக்க மாக்கிக் கொண்டுவிட்டாள். அர்பன் சொஸைட்டு ஹேபிட்டாக வந்துவிட்டது.

இவர்கள் தனியே சந்தித்த விருந்தின்போது இரண்டு ரவுண்டு சுகமான பிஸ்கட் பிராந்தி உள்ளே கதகதவென்று இறங்கியதும்-சூடு வேலை செய்தது.

கோகிலா சுலபாவைக் கேட்டாள்.

''பார்த்தவுடன் இவனை அநுபவித்துவிட வேண்டும் என்று எந்த ஆண்பிள்ளையாவது உன்னை நினைக்கச் செய்திருக்கிறானா?''

''சினிமாவைப் பொறுத்தவரை அப்படி ஆசைப்பட்டு நினைக்க இடைவெளியோ அவகாசமோ கிடையாது கோகிலா! புகழ்பெறுகிறவரை நீ ஆசைப்பட வாய்ப்பே கிடையாது. உன்னை ஆசைப்படுகிற வசதியுள்ளவர்களைத் திருப்திப்படுத்துவதற்கே நேரம் போய்விடும்''

''ஆசை, காதல், இச்சை எல்லாமே வறண்டு போய்விடும் என்கிறாயா?''

''மற்றவர்கள் அநுபவம் எப்படியோ, என் அநுபவம் அப்படித்தான். விரக்தி அடையும் அளவு நான் கசந்து போயிருக்கிறேன். இப்படி முன்னுக்கு வர என்னைக் கசக்கிப் பிழிந்திருக்கிறார்கள்.''

''நெஞ்சைத் தொட்டுச் சொல் சுலபா? இது உறுதி தானா?''

''தற்போதுள்ள நிலைமையைச் சொல்கிறேன். எந்த ஆண்பிள்ளையும் எனக்கு அழகனாகத் தெரியவில்லை. யாரைப் பார்த்தாலும் மிருக இச்சையுள்ள ஓர் இயந்திரமாகவே கண்ணுக்குப் படுகிறான் கோகிலா. அந்த முதல் குப்பையரெட்டி தொடங்கி எல்லாருமே திருட்டுப் பயல்கள்.''—

''இது தற்காலிகமான கோபம். இன்னும் நீ சந்யாசினி ஆகிடவில்லை. உன்னை ஆசைப்படாத யாராவது எதிர்ப் பட்டால் ஒருவேளை நீ அவன் மேல் ஆசைப்படலாம் சுலபா!''

''என்னைச் சுற்றி அத்தனை நிதானமும் பொறுமையுமுள்ள நிஜமான ஆண்மகன் யாருமே இல்லையடீ கோகிலா...''

''இதுவரை நீ சந்தித்த ஆண்களில் யாருமே உனக்குச் சந்தோஷத்தைக் கொடுக்கவில்லை என்கிறாயா?''

''நிர்ப்பந்திக்கப்பட்ட சந்தோஷங்கள் எல்லாம் நிஜமான சந்தோஷங்கள் ஆவதில்லை.''

''யாரும் ஏற்பாடு செய்யாமல்-ஒரு பெண்ணுக்கு ஆணிடமோ, அல்லது ஆணுக்குப் பெண்ணிடமோ ஏற்படுகிற சுயேச்சையான யதேச்சையான உல்லாஸம் என்பதை நீ ருசித்ததே இல்லை என்று சொல்கிறாய்?''

''குப்பைய ரெட்டி என்கிற படுபாவியிடம் சிக்கியிரா விட்டால் அந்த உல்லாஸம் எனக்கும் கிடைத்திருக்கலாமோ என்னவோ?''

''காமம் சம்பந்தமான எல்லா அசல் மகிழ்ச்சிகளுமே சுயேச்சையானவை- யதேச்சையானவை- தற்செயலானவை! மழையையும், காற்றையும் போல இயல்பானவை.''

''எனக்கு அதை எல்லாம் புரிந்துகொள்ளவே வாய்த்த தில்லை.''

''தற்செயலாக நம்மேல் வீசும் தென்றலின் ஓர் இழை நிலவின் ஒரு கீற்று, மழையின் ஒரு துளி போன்றது அசலான சந்தோஷம்.''

''நான் உடல்களை நிறையச் சந்தித்திருக்கிறேன். சந்தோஷம் என்பது மனசைப் பொறுத்தது இல்லையா?''

''மனசோடு கூடிய உடம்புதான் சந்தோஷம் சுலபா! உடம்புகள் மூலமாகத்தான் மனசுகளின் சந்தோஷம் உணரப் பட முடியும்''

''மனசால் தவறு என நினைத்தபடியே இரண்டுடம்புகள் அசல் சந்தோஷத்தை அறிய முடியாது உணர இயலாது''—

''ஒருவரை வெல்கிறோம் என்ற உணர்வோடு அடைகிற மகிழ்ச்சியும் சமமானதில்லை''

''காதலில் முழுமகிழ்ச்சிக்கு இருவருமே சமமாகத் தோற்க வேண்டும். இருவரில் ஒருவர் மட்டுமே ஜெயித்துவிடுவது போல அடைவது இன்பமல்ல. வேட்டை. வேட்டையில் தான் குறிவைத்த மிருகத்தை வலையில் பிடித்து வீழ்த்து வார்கள்''

''வேட்டையில் பிடிபட்ட மிருகம் போல வாழ்ந்து விட்டதாகச் சொல்கிறாய் சுலபா! உனக்கென்று தனியாக ஆசைகள் எதுவும் இல்லையா?''

''உண்டு கோகிலா! உன்னிடம் சொன்னால் நீ ஒரு வேளை என்னைத் தப்பாக எண்ணிக்கொள்ள நேரிடும்''—

''அசடே? இதில் தப்பாக நினைக்க என்ன இருக்கிறது? நான் என் மனசைத் திறந்து உன்னிடம் பேசுகிறேன். நீ உன் மனசுவிட்டு என்னிடம் பேசமாட்டேனென்கிறாய்?''

''அன்றரும்பிய மலராகப் பரிசுத்தமாக-ஆண்கள் யாரும் தீண்டாத கன்னியாக இருந்த என்னை விலை கொடுத்து ஒவ்வொருவராக வேட்டையாடினார்கள். முப்பது வயது முடிவதற்குள்ளேயே எண்பது வயது மூப்பை என்னுள் திணித்தார்கள். என் மனத்தின் இயல்பான ஆசை ஊற்றுக் கண்களை எல்லாம் அடைத்தார்கள். பணத்தால்-புகழால் அந்த இனிய ஊற்றுக் கண்கள் அடைபட்டுப் போயின''

''நீ சொல்வது முழு உண்மை இல்லை சுலபா! உனக்குள் இன்னும் ஏதோ ஓர் ஆசை இருக்க வேண்டும். அதை நீ மறைக்கிறாய்''

''எப்படி? எதனால் நீ இதை அநுமானிக்க முடிகிறது?''

''உன்னிடம் எல்லாவற்றின் மேலும் வெறுப்பும் கசப்பும் நிரம்பியிருக்கின்றன. எல்லாவற்றையும் வெறுப்பவர்கள்

ஏதாவது ஒன்றின் மேல் ஆசைப்படுகிறவர்களாக இருப்பார்கள் என்பது மனத் தத்துவம். பரிபூரணமான துறவிகள்தான் எதையும் வெறுக்காமல் விரும்பவும்-எதையும் விரும்பாமல் விட்டுவிடவும் முடிந்தவர்கள். நீ துறவியைப் போல் பேசுகிறாய், ஆனால் துறவியில்லை. பிஞ்சிலே பழுத்தவள்-ஐமீன் பழுக்க வைக்கப் பட்டவள். உன் வெறுப்புக்கள் மேலாக மிதப்பவை. அவை அப்படி மிதக்கக் காரணமான ஆசைகள் அடி நீராகத் தேங்கியிருக்கின்றன என்பதுதான் உண்மை''

''இதெல்லாம் எப்படிச் சொல்கிறாய் கோகிலா? ஜோசியமா?''

''ஃப்ராய்டிலிருந்து ஹக்ஸ்லி வரை எவ்வளவு படித்திருப்பேன்? உன் மனசை அப்படியே எக்ஸ்ரே எடுத்து வைக்க என்னால் முடியும்டீ சுலபா?''

''நீ அவ்வளவு சிரமப்பட வேண்டிய அவசியமில்லை கோகிலா! நான் மறைத்தால் தானே நீ எக்ஸ்ரே எடுக்க முயல வேண்டும்? நானே சொல்லி விடுகிறேன். உள்ளதை அப்படியே சொல்லி விடுகிறேன். என்னை இரத்தவெறி பிடித்தவள்-காமாந்தகாரி என்றெல்லாம் முடிவு செய்து விடாதே. உண்மையைச் சொன்னேன் என்று மட்டுமே சந்தோஷப்படு! வேறுவிதமாக எண்ணாதே''

''நானும் அதைத்தான் எதிர்பார்க்கிறேன். சொல்லு! உண்மைகள் எப்படி இருந்தாலும் விமர்சனத்திற்கு அப்பாற்பட்டவை. அவைகளை உண்மைகளாக மட்டுமே பார்த்துவிட்டு விலகிவிட எனக்குத் தெரியும்! உண்மைகளைப் பிரதிபேதம், பாட பேதம் பார்த்து ஆராய எனக்குப் பைத்தியமில்லை''—

''என்னுடைய அந்தரங்கம் குரூரமானது என்று நீ என்னைக் கேவலமாக நினைக்கலாம்''

''சந்தோஷங்கள் குரூரமானவை அல்ல; ஆனால் குரூரமான ஆசைகள் இருக்க முடியும். அவற்றை விமர்சிப்பதற்காக நான் விரும்பவில்லை...''

''என்னை முதல்முதலாக மற்றவர்கள் கெடுத்துப் பாழாக்கிய மாதிரி ஐம்புலன்களையும் அடக்கி ஆசைகளைக் கட்டுப்படுத்தி விலகி வாழும் இளைஞர்களாகத் தேடிக் கெடுத்துவிட வேண்டும் என்கிற வைரம் பாய்ந்த பழிதீர்க்கும் எண்ணம் என்னுள் அடிமனத்தில் உண்டு''

''உன்னைக் கெடுத்தவர்கள் பணத்தோடு வந்து அதைச் செய்தார்கள்''

''உண்மை! அன்று என்னிடம் பணம் இல்லை. அழகு மட்டும் இருந்தது. நான் கெட்டேன். இன்று என்னிடம் பணம் இருக்கிறது. அழகு இருப்பதாக மற்றவர்கள் சொல்கிறார்கள். பணத்தைச் செலவழித்துப் பெண்களைத் தேடி வந்து கெடுக்கும் உரிமை ஆண்களுக்கு மட்டுமே சொந்தமா என்ன? பணத்தைச் செலவழித்து ஆண்களைக்கெடுத்துப் பழி தீர்க்க வேண்டும் என்று எனக்குள்ளும் ஒரு தணியாத வெறி உண்டு,''

''ஏற்கெனவே நீ சினிமா மூலம் அதைத்தான் செய்து கொண்டிருக்கிறாய் என்று உனது கடுமையான விமர்சகர்கள் சொல்லலாம்''

''சொல்கிறார்கள், ஆனால் அதன் மூலம் பழிதீர்த்து விட்ட திருப்தி எனக்குள் ஏற்படவில்லையே?''

''அப்படியானால் அந்த ஒரு திருப்திக்கு நீ கொடுக்க விரும்பும் விலை என்ன சுலபா?''

''ஆண்வர்க்கத்தைப் பழி வாங்கி முடித்து விட்டேன் என்ற திருப்தி கிடைக்குமானால் என் முழுச் சொத்துச் சுகங்களை இழக்கக்கூட நான் தயாராயிருப்பேன் கோகிலா! அதன் பின் வாழ்க்கையே கூட எனக்கு அவசியமில்லை. என்னுடைய இலட்சியமே முடிந்துவிட்ட மாதிரி''...கண்களில் நீர் மல்கச் சொன்னாள் சுலபா.

# 9

மூன்றாவது ரவுண்டு பிராந்தியும் தீர்ந்தது. சிப்ஸை எடுத்து நீட்டினாள் கோகிலா. வறுவலை எடுத்துக் கொண்டு சாப்பிட்ட சுலபா இன்னொரு ரவுண்டுக்காக கிளாஸை மீண்டும் எடுத்து நீட்டினாள். ''நாலாவது ரவுண்டா? உன் மனம் அதிக மாகக் குழம்பிப் போயிருக்கிறது என்று நினைக்கிறேன்''

''ஆமாம்! இன்னொரு ரவுண்டுதான் அதைத் தெளிவு படுத்தும்''—

கோகிலா மறுக்கவில்லை. ''எல்லாப் பார்ட்டிகளிலும் ஹோஸ்ட் பாட்டிலை மூடி வைத்தபின் கிளாஸை நீட்டுபவர் களால் ஹோஸ்டுக்கு லாபமே தவிர நஷ்டமில்லை. அப்படி விருந்தினன் கேட்டதைச் செய்கிற தங்கக் கம்பியாக இழைபடு வான். அவனுக்காக மூடிய சீஸா மட்டுமல்லாமல் அவசிய மாயின் புதிய பாட்டில்களே திறக்கப்படலாம்''-என்று கோகி லாவின் கணவர் மாடிஸன் அவென்யூ வெளியீடான 'பிஸினஸ் பார்ட்டி அண்ட் காக்டெயில்'—என்ற புத்தகத்திலிருந்து அடிக்கடி ஒரு கொட்டேஷனை எடுத்துச் சொல்லுவார். இப் போது கோகிலாவுக்கு அந்த மேற்கோள் நினைவு வந்தது. சுலபாவுக்கும் அது பொருந்தியது.

அவளைப் பொறுத்தவரை இப்போது சுலபா கிளாஸை நீட்டுகிறாள். சுலபாவிடமிருந்து மேலும் புதிய விஷயங்கள் தெரியும என்றால் அவளுக்காகப் பழைய பாட்டிலின் மீதத்தை மட்டும இன்றிப் புதிய பாட்டில்களே திறக்கப்படலாம் என்கிற முடிவுக்கு வந்தாள் கோகிலா,

நவ நாகரிகமான டேபிள் மேனர்ஸ், எக்ஸிகியூட்டிவ் பார்ட்டீஸ், பற்றி நூற்றுக்கணக்கான ஆங்கிலப் புத்தகங்களை வீடு நிறைய வாங்கி அடுக்கியிருந்தார் அவள் கணவர். அதில் ஒரு புத்தகத்தில், ''ஒரு புதிய பாட்டிலின் மூடியைத் திறப்பதனால் ஒரு புதிய உலகின் கதவுகளை

திறக்கப்பட நேரிடலாம். அப்படி வேளைகளில் கஞ்சனாகி விடாதே. பாட்டிலைத் தாராளமாகத் திற. கிளாஸ்களை நிறை. லாபத்தை அடை'' என்று கூட இருந்தது. சுலபாவுக்கு நாலாவது ரவுண்டு ஊற்றியபோது ஐந்தாவது ரவுண்டையும் எதிர்பார்த்துப் பாட்டிலை மூடாமலே வைத்திருந்தாள் கோகிலா. தான் மட்டும் கச்சிதமாக மூன்றாவது ரவுண்டோடு நிறுத்திக் கொண்டாள். ''என்னடீ கோகிலா? உன் கிளாஸ் மட்டும் காலியாவே இருக்கு?''- என்று சுலபா கேட்ட போது கூட, 'உனக்கே தெரியும் டீ சுலபா! நான் எப்பவுமே மூணு ரவுண்டோட நிறுத்திடுவேன்...மோர் ஓவர் டு டே ஐயாம் நாட் ஃபீலிங் வெல்...''-என்று சமாளித்தாள். கோகிலா இப்படிக் கூறியபின் சுலபா அவளை வற்புறுத்தவில்லை. ஆனால் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ளவுமில்லை.

'டிப்ளமேடிக் பார்ட்டி'களில் இப்படி ஒரு தரப்புக் கிளாஸை விட்டு விட்டு, எதிர்த் தரப்பு கிளாஸை மட்டுமே நிரப்புவது ஒற்றறியும் முயற்சியாகக் கருதப்படும் என்பதும் அப்படி விருந்துகளில் எப்போது எத்தனை ரவுண்டு ஊற்றினாலும் இருதரப்பு கிளாஸ்களிலுமே சம அளவில் ஊற்ற வேண்டும் என்பதும் மரபு. தொடங்கும் போதும் இருதரப்பு கிளாஸ்களிலும் டோஸ்ட் சொல்லி நிரப்பி உயர்த்திப் பிடிக்க வேண்டும். முடிக்கும் போதும் அப்படியே முடிக்க வேண்டும். சுலபாவின் நிலையில் ராஜதந்திரம் எதுவும் இல்லை. அவளே அதிகம் பருக விரும்பினாள், அதிகம் பேசவும் முன்வந்தாள். உள்ளே போகப் போக நிறைய விஷயங்கள் வெளி வந்தன. தன்னை நம்பி விருந்துக்கு வந்த சிநேகிதியிடம் இப்படிச் 'சாராயத்தை வார்த்துப் பூராயம் அறிவது' சரியில்லை என்று கோகிலாவுக்கே தோன்றினாலும் அந்த அடக்கத்தை ஆசை வென்றது. சுலபாவின் அந்தரங்கங்களை அறியும் ஆசையைக் கோகிலாவால் கட்டுப்படுத்திக் கொள்ள முடியவில்லை. ஒரு நிலைமைக்குப் பின் கோகிலா கேட்காமலே சுலபா விஷயங்களைக் கொட்டத் தொடங்கினாள். இவள் தடுத்தால் கூட நிறுத்தமாட்டாள் போலிருந்தது. அத்தனை வேகத்தில் எல்லாம் பீறிட்டுக் கொண்டு வந்தன.

''உனக்குத் தெரியுமோ கோகிலா? அந்தக் குப்பைய ரெட்டியே நல்ல அழகன். அரைத்த சந்தனம் மாதிரி நிறத்தில் கட்டுமஸ்தான உடம்பு. இறுகிய தசைகள். சிரித்தால் அவன் முகத்தை விட்டுப் பார்வை விலகாது. ஆனுல் அந்தப் படுபாதகன் என்னை ஒரு பெண்ணுக இலட்சியம் பண்ணித் தீண்டியதே இல்லே. மற்றவர்களுக்கு என் உடம்பை விற்றுப் பணம் பண்ணுவதிலேயே குறியாயிருந்தான்''-

''நீ அவனைக் கவர முயலவே இல்லையா? ஒரு வேளை உன் அந்தரங்கம் அவனுக்குத் தெரியாதோ என்னவோ?''

''தெரியாமல் என்னடீ? இங்கே என்னை அழைத்து வந்து அந்தக் கோடம்பாக்கம் லாட்ஜில் தங்க வைத்தபோது கூட அவன் ஒரு டபிள் ரூமாக எடுத்ததைப் பார்த்து நான் மகிழ்ந் தேன். டபிள் ரூமில் என்னை விட்டுவிட்டு அவன் அதே மாடி யில் இன்னெரு தனியறையில் போய்த் தங்கினுன். அப்போது நானே வெட்கத்தை விட்டு விட்டு 'சேர்ந்து தங்கும்படி' மனசு விட்டுப் பேசி அவனைக் கெஞ்சினேன், என் ஆசையைக் கூடக் குறிப்பாக அறிவித்தேன்.

அவன் மறுத்து விட்டான்.

''உன்னை ஒரு சினிமாப் பார்ட்டி இப்போ இங்கே இட்டுக் கினு போக வரப் போவுது. நான்கூட இருந்தா சந்தேகப்படு வாங்க''—என்று புளுகினுன்.

''உண்மையான காரணம் என்னவாயிருக்கும்டீ சுலபா? அவனுக்கு உன்னைப் பிடிக்கலியா? அல்லது அவன் ஆண்மையே அற்றவனு? என்ன காரணம்...?''

''என்னைவிட மட்டமான, முகம் முழுவதும் அம்மை வடு நிரம்பிய அழகற்ற பெண்களோடு கூடக் குண்டூரில் அவன் சுற்றியிருக்கிருன்.''

''ஸோ... ஆண்மையுள்ளவன் தான்! உன்னை மட்டும் 'விற்பனைக் குவாலிட்டி' கெடாமல் விற்றிருக்கிருன்''

''இது எச்சிற் பண்டம். நமக்கு வேண்டாம் என்கிற அலட்சியமும் திமிரும் கூடக் காரணமாயிருக்கலாம்''

''அந்த அம்மை வடு மூஞ்சிப் பெண்கள் என்ருயே. அவர்கள் எச்சிற் பண்டம் இல்லையா?''

''இல்லை! அவர்கள் என் மாதிரி டைப் இல்லை. உயர் குடும்பங்களில் பிறந்தவர்கள். இவன் அழகுக்காக இவனை வட்ட மிட்டவர்கள்''

''உன் அழகை இவன் விற்கமட்டுமே விரும்பினுன் என்கிருயா சுலபா?''

''இவன் அழகன் என்று இவனிடம் இரகசியமாக வந்த அழகற்ற பெண்களைக் கூட இவன் பயன்படுத்திக் கொண் டான்.''

''அதே சமயம் இவனே தேடிக் கண்டுபிடித்த அழகியான உன்னை நீ ஏழை, தாழ்ந்த பிரிவினள் என்பதற்காக மற்றவர் களுக்கு விற்ருன் என்கிருய்!''

''அவர்கள் மூலமும் இவனுக்குப் பணம் வந்தது. என் மூலமும் இவனுக்குப் பணம் வந்தது''

''அவர்களை இவன் பெண்ணுக மதித்தான். பெண்ணுக நடத்தினுன். பெண்ணுக அநுபவித்தான். உன்னை மட்டும் வியாபாரப் பொருளாக விற்று லாபம் சம்பாதித்தான்''

''என்னை இரத்தமும் சதையுமுள்ள பெண்ணுகவே மதிக்க வில்லை அந்தக் கிராதகன்''

''உன் ஆதங்கம் புரிகிறது சுலபா! ஒரு பெண்ணுக்கு ஆண் செய்ய முடிந்த அவமானங்களில் மிகப் பெரியது அவளைப் பெண்ணுகவே புரிந்து கொள்ளாமலிருப்பதுதான்''—

''அவன் என்னை மானபங்கப் படுத்தியிருந்தால் கூட நான் திருப்திப் பட்டிருப்பேன், அதற்குக் கூட நான் லாயக்கில்லாதவள் என்று அவன் அலட்சியம் செய்ததுதான்

எனக்கு பெரிய மானபங்கமாயிருந்தது கோகிலா. என்னை மானபங்கப்படுத்தாமலே அதைவிட அதிகமாக அவமானப் படுத்தி விட்டான் அவன்''

''ஒரு பெண்ணை மானபங்கப்படுத்துவதுதான் அவமானம் என்று இதுவரை கேள்விப்பட்டிருக்கிறேன். நீயோ 'மானபங் கப் படுத்தக் கூட லாயக்கற்றவள்' என ஒரு பெண்ணை ஓர் ஆண் ஒதுக்கியதன் மூலமே அவமானப்படுத்தியது பற்றிக் கூறுகிறாய்.''

''அந்த அளவுக்கு நான் கேவலமானவள். பலரிடம் சீரழிந்தவள் என்று என்னைப் பற்றி அவன் மிக மிக மட்டமாக நினைத்திருக்கிறான் கோகிலா!''

''நீ அவனை நினைத்து ஏங்கியிருக்கிறாய்! அவன் உன்னைச் சாதாரணமாகக்கூட நினைக்கவே இல்லை''

''நினைக்காதது கூடத் தப்பில்லை. நான் ஏங்கியதை அலட்சியமே செய்திருக்கிறான் அவன். அவனைப் போல் ஒருத்தனை நினைத்து ஏங்க நான் தகுதியற்றவள் என்பது போல் கூட நடந்து கொண்டிருக்கிறான் அவன்.''

''ஆண் பிள்ளையின் திமிர்களில் மிகவும் குரூரமான-மன்னிக்க முடியாத திமிர் இது''

''இன்று அவன் அகப்பட்டால் கூட அந்தத் திமிருக்குப் பழி வாங்குவேன். இன்னும் நான் தீர்க்கமுடியாத பழங் கணக்கு அது''

''நான் அனுமானித்தது சரிதான் சுலபா''

''என்ன அனுமானித்தாய் நீ?''

''யாரொருவர் மனப் பரப்பில் வெறுப்பும் விரக்தியும் நிராசையுமாக மிதக்கின்றனவோ அவருடைய அடிமனத்தில் இந்த உணர்வுகள் மிதக்கக் காரணமான ஏதாவது ஓர் ஆசை நிச்சயம் இருக்கும். அந்த ஓர் ஆசைமட்டும் வற்றி விடுமானால்

அப்புறம் இந்த வெறுப்பு. விரக்தி, எல்லாமே மிதக்க முடியா மற் போய் விடும்''

''இன்று கோடிக் கணக்கான இரசிகர்களின் கனவில் அழகியாக அங்கீகரிக்கப்பட்டுவிட்ட நான் அதைப் பிடிவாத மாக அங்கீகரிக்க மறுத்த ஒருவனைப் பழிவாங்கவே அந்தரங்க மாக விரும்புகிறேன்''

விரும்பினுல் மட்டும் போதுமா? அந்த ஒருவன் அகப்பட வேண்டுமே? அப்படியே அகப்பட்டாலும் அவன் பழையபடி தான் இருப்பான் என்பது என்ன நிச்சயம்? ஒரு வேளை இன்று அவன் உன்னைக் காமுறலாம்''

''காதலோ காமமோ அவனுடைய வசதிக்காக என்னிடம் காத்திருக்கவில்லை.''

''ஆனுல் நீ இன்னும் ஏங்கிக் கொண்டிருக்கிருயே?''

''இது ஆசை தீர்வதற்கான ஏக்கமில்லை! அதே மாதிரித் தோற்றமுள்ள மேல் வர்க்கத்துப் பரிசுத்தவான் ஒருவனைச் சீரழித்தால் கூட என் வேகம் தணிந்து விடலாம்''

''துர்த் தேவதைகளின் கோபத்தைத் தணிக்கத்தான் ஆடு கோழிகளைப் பலி கொடுப்பார்கள் சுலபா!''

''குப்பையரெட்டி விஷயத்தில் நானும் ஒரு துர்த் தேவதையாகத்தான் காத்திருக்கிறேன். என் பலிகளில் தான் உள் வெறுப்புத் தணியும்.''

மேலும் அடுத்த ரவுண்டுக்காக அவள் கிளாஸை நீட்டிய போது கோகிலா இதமாக மறுத்து அவளைக் கைத்தாங்கலாக டைனிங் டேபிளுக்கு அழைத்துச் சென்ருள். சுலபாவுக்குள் இத்தனை வேதனைகள், ஏக்கங்கள், அந்தரங்கங்கள், பழி வாங்கல் உணர்வுகள் நிரம்பியிருக்கும் என்று கோகிலா எதிர் பார்க்கவில்லை. சுலபா அவள் நடித்த படங்களில் எல்லாம் ஏற்றவற்றை விடப் பெரிய சுயமான குணசித்திரத்தைத் தனக் குள் தாஞக ஏற்று நடமாடிக் கொண்டிருந்தது புரிந்தது.

கோகிலாவுக்கு அவள் மேல் பிரியமாகவும் இருந்தது. இரக்க மாகவும் இருந்தது. பெரிய பெரிய சாம்ராஜ்யப் பகைகளே விட இந்த அந்தரங்கமான காதல் பகை-அல்லது காமப் பகை கடுமையாகவும் பெரியதாகவும் உள்ளே மறைந்திருப்பது புரிந்தது.

## 10

'அவள் தான் இணையற்ற பேரழகி' என்று ஒப்புக் கொண்ட எல்லாரையும் சுலபா மன்னிக்கத் தயாராயிருந் தாள். அழகில் அவளுடைய 'சுப்ரீமஸியை'க் கேள்வி கேட்கக் கூடியவர்கள் சர்ச்சை செய்யக் கூடியவர்கள் எல்லாரையும் அவள் வெறுத்தாள். விரோதித்துக் கொள்ளக் கூடத் தயாரா யிருந்தாள். காமிராமேனிடம் கூட முதலில் அவளுக்கு ஏற் பட்ட விரோதம் பின்பு அவர் நேரில் வந்து 'உங்களைப் போலக் காமிராவுக்கு அழகான முகம் வேறு இல்லை'—என்று புகழ்ந்த வுடன் மாறிவிட்டது. மன்னித்து விட்டாள்.

சுய கர்வத்தை மிதக்கச் செய்கிற தாழ்வு மனப்பான்மை அவளுள்ளே நிரம்பியிருந்தது. அந்தத் தாழ்வு மனப்பான்மை மட்டும் உள்ளே நிரம்பியிராவிட்டால் அவளுடைய கர்வம் மேலெழுந்து நிற்காமல் போயிருக்கும்.

தன் வேலைக்காரர்கள் கீழ் நிலையிலுள்ளவர்கள், ஊழியம் புரிகிறவர்கள் கால்களில் விழுந்து கும்பிடுவது அவளுக்குப் போதையூட்டியது.

அதை அவள் விரும்பினாள். குப்பையரெட்டி அவளை அன்று ஒரு மனுஷியாகவே மதிக்கவில்லை. இன்றோ பலர் அவளைத் தெய்வமாக மதித்தார்கள். வணங்கினார்கள்.

என்ன மதிப்பு இன்று வந்தாலும் குப்பையரெட்டி அன்று மதிக்காததும் சேர்த்தேதான் நினைவு வந்தன. அதை

மறக்கவே முடியவில்லை. ஆறாத வடுவாக அது உள்ளே இருந்தது.

சினிமா சம்பந்தப்பட்டவர்களின் பிள்ளைகள் பெண்கள் கலியாணமாகிப் பார்க்க வந்தால் அவர்கள் விழுந்து கும்பிட்டு ஆசி கேட்கிறார்களா இல்லையா என்று கவனித்தே அவர்களுக்குத் தான் செய்ய வேண்டியதைச் செய்தாள். இதுபற்றிக் காரியதரிசி கவிதாவுக்கு ஸ்டாண்டிங் இன்ஸ்ட்ரக்ஷன்ஸ் இருந்தன. நம்பர் டூ கணக்கு ரொக்கத் தொகையிலிருந்து நூறு ரூபாய் உறையிலிட்டது, ஐநூறு ரூபாய் உறையிலிட்டது என இரண்டு கவர்களைத் தயாராக வைத்திருப்பாள் கவிதா.

தேடிவந்த மணமக்கள் காலில் விழுந்து கும்பிட்டால் எஜமானியிடம் ஐநூறு ரூபாய் உறையை நீட்டுவாள். காலில் விழுந்து கும்பிடாவிட்டால் வெறும் நூறு ரூபாய் உறைதான். கவிதாவின் திருமணத்தைப் பற்றிய பேச்சு வந்தபோது சுலபா அதில் ஆர்வமே காட்டாதது போல நடந்துகொண்டாள்.

"அவசரப்பட்டுக் கல்யாணம் கிலியாணம்னு ஆம்பிளையோட மாட்டுத் தொழுவத்திலே தாலிக் கயிற்றாலே கட்டப்பட்டு உள்ளே போயிறாதே. உன் சுதந்திரம் எல்லாம் பறிபோயிடப்போறே" — என்று சுலபா கூறியபோதே திருமணங்களின் மேலும் ஆண்களின் மேலும் அவளுக்கு இருந்த வெறுப்பும் ஆத்திரமும் புலப்பட்டன.

தான் கலியாணம் செய்து கொள்வதற்கு முன்பே சுலபாவிடமிருந்து விலகிட வேண்டும் என்று அவள் நினைத்துக் கொள்வதுண்டு. கலியாணத்திற்குப் பின் சுலபாவிடம் வேலை பார்ப்பது மிகவும் சிரமம் என்று கவிதா தனக்குத் தானே புரிந்து கொண்டிருந்தாள். சுலபாவும் ஜாடைமாடையாக அதைத் தெரிவித்திருந்தாள்.

"பெண்களை அவமானப் படுத்தறாங்க, அலட்சியம் செய்யிறாங்க, கொடுமைப் படுத்தறாங்க, கேவலப் படுத்தறாங்க...

கொத்தடிமை மாதிரி வேலே வாங்கருங்க. பிள்ளே பெறுகிற மிஷின் மாதிரித் தேய்த்துத் துரு பிடிக்க விடருங்க. கொஞ்சம் முதுமை வந்ததும் புறக்கணிக்கிருங்க...இத்தனே பண்ணியும் எந்தப் பொம்பிளேயும் ஆம்பிளே கையாலே தாலி கட்டக் கழுத்தை நீட்டிக்கிட்டு ஓடறதை இன்னும் நிறுத்தலே. ஆம்பிளேகிட்ட அப்பிடி என்னதான் மயக்கமோ தெரியிலே''—என்று கடுமையாக விமர்சிப்பாள் சுலபா.

கவிதா இவற்றையெல்லாம் விமர்சிக்காமல் விவாதிக்காமல் பொறுமையாகக் கேட்டுக் கொள்வாள். விவாதிப்பதும், விமர்சிப்பதும் எஜமானிக்குப் பிடிக்காதவை என்பதுதான் காரணம்.

இந்தப் போக்கைப் பற்றி எஜமானியின் பொருளாதார ஆலோசகரும், தன் மாமாவுமான கனகசபாபதியிடம் மெது வாகப் பலமுறை பிரஸ்தாபித்து விவாதித்திருக்கிருள் கவிதா.

கவிதாவைப் போன்ற திருமணமாகாத ஓர் இளம் பெண்ணிடம் எந்த அளவு இதற்கு விளக்கமாகப் பதில் சொல்லலாமோ அந்த அளவு கனகசபாபதியும் பதில் சொல்லி யிருந்தார்.

வரவர இப்படிப் புகார் கவிதாவிடம் இருந்து அதிகம் வந்தது.

''எப்பப் பார்த்தாலும் இதையே சொல்லிப் போரடிக் கிருங்க! அத்தனே ஆம்பளேங்களும் நரமாமிச பட்சிணிங்கிருங்க, அதுக்கு நான் உடனே கைதட்டி சபாஷ் சொல்லணும்னும் ஆசைப்படருங்க மாமா! ஒரே ரோதனேயாப் போச்சு...''

இந்த விஷயத்திலே அவள் ஒரு 'சைக்காலஜிகல்மித்'—அதாவது மனேதத்துவப் புதிர் கவிதா. 'ஃபெமினிஸ்ட்'னு கூட ரொம்ப கௌரவமாகச் சொல்லிவிட முடியாது. இதில் அவளே நாம மாத்தறது முடியாத காரியம். நமக்கு ஒத்து வர்ர வரை இருக்கலாம். பிடிக்கலேன்ஞ முதல்நாள் சொல்லிட்டு மறு நாளே ஒதுங்கிக்கலாம்...தப்பில்லே ... கிட்டத்தட்ட அனுங்

காமல் குலுங்காமல் மாசம் மூவாயிரம் ரூபாய் சம்பாதிக்கிறே! காரிலே கூட்டிக்கிட்டுப் போய்க் காரிலேயே வீட்டு வாசல்லே கொண்டுவந்து டிராப் பண்ணிடறு. கோடிக்கணக்கிலே வெள்ளையும் கறுப்புமாகச் சொத்தைச் சேத்து வச்சுட்டுப் பூதம் காக்கிறமாதிரித் தனியே காத்துக்கிட்டிருக்கா...

உனக்கோ இன்னும் ரெண்டு மூணு வருஷத்திலே கலியாண ஏற்பாடு எதுவும் நாம பண்ணப் போறதில்லே. அதுவரை பல்லைக் கடிச்சுக்கிட்டுப் பொறுமையா இருந் துடேன். கலியாண ஏற்பாடுன்னு வர்ரப்போ நானே சுலபா கிட்டப்போயி, ''நாளையிலேருந்து கவிதா வேலைக்கு வரமாட் டாள்''னு சொல்லிடறேன், அதுவரை எனக்காகப் பொறுத்துக்கோ! ஆம்பளை செகரெட்டரி அவளுக்குப் பிடிக்காது. வேற பொம்பளைங்களை விடறது நம்பிக்கையில்லே. என் இண்ட்ரஸ்டிலேயாவது நீ அங்கே இருந்தாகணும். அவளோட நம்பர் டூ அகவுண்ட் பணத்திலே என்னோட க்ளை யண்ட்ஸ் நெறையப் பேர் கடன் வாங்கியிருக்காங்க. நான் சம்பந்தப் பட்டிருக்கேன்'' இவ்வளவும் கேட்டபின் வேறுவழி யின்றி ''சரி மாமா! பொறுத்துக்கிறேன்'' என்பாள் கவிதா. விரக்தியையும் ஆசைகளையும் பக்கத்தில் பக்கத்தில் வைப்பது, தளிரையும் நெருப்பையும் அருகருகே இருக்கச் செய்வதுபோல் தான். சுலபாவின் அருகே கவிதாவும் அப்படித்தான் இருந் தாள். சதா காலமும் சுலபாவின் விரக்தியான ஆண் எதிர்ப்புப் பிரசாரத்தைக் கேட்டுக் கேட்டு இளம் தளிராக இருந்த அவள் வெதும்பினாள். வாடிவதங்கினாள். சபித்தாள்.

ஒருநாள் சுலபா ஏதோ ஸ்டுடியோவில் படப்பிடிப்பு முடிந்து வீடு திரும்பிக் கொண்டிருக்கையில் அன்று லீவு போட்டிருந்த கவிதாவை டாக்ஸி ஸ்டாண்ட் அருகே ஓர் அழகிய இளைஞனோடு பார்க்க நேர்ந்து விட்டது. சுலபாவின் ஏ.சி. கார் கவிதாவின் அருகே வந்து ஓசைப் படாமல் நின்றது. ''நீ மட்டும் ஏறிக்கொள்'' என்று கடுப்போடு அவளை அழைத்தாள் சுலபா. ''என் கூட இன்னொரு நண்பர் இருக்

கிறார் அம்மா! இன்று நான் லீவு... நாளை உங்களைப் பார்க்கிறேன்'' என்றாள் கவிதா.

''யாரு டீ அவன்?''

கவிதா இந்த ஆணவமான கேள்விக்குப் பதிலே சொல்லவில்லை. நல்ல வேளையாகக் கவிதா ஏ.சி காருக்குள் உட்கார்ந்து கதவை அடைத்துக் கொண்டு எஜமானியம்மாளிடம் பேசி விட்டு வந்ததால் அவள் 'யாரு டீ அவன்?' என்று கேட்டது வெளியே கவிதாவின் காதலனுக்குக் கேட்டிருக்க முடியாது.

மெல்ல ஏதோ சாக்குப் போக்குச் சொல்லிக் கழற்றிக் கொண்டாள் கவிதா. அந்த ஒரு நாள் அவளுடைய சுதந்திர மான தினம், எஜமானியின் விரக்தியில் இருந்து வெளி உலகத் தென்றலைத் தாராளமாக அநுபவிக்க முடிந்த நாள்.

''கூப்பிட்டால் போய்விட்டு வருவதுதானே?'' என்றான் அவன் காதலன்.

''ஐயோ போரடிச்சுக் கொன்னுடுவா... இன்னிக்கு நான் லீவு''

''இத்தனை பெரிய ஸ்டார் தெருவிலே பார்த்து ஏ.சி. டயோட்டாவை அருகில் கொண்டு வந்து நிறுத்திப் பிரியமாக் கூப்பிடறப்பப் பிகு பண்ணிக்கிறியே?''

''உங்களுக்குத் தெரியாது! அந்த ஏ.சி.க் காருக்குள்ளே ஒரே புழுக்கமா இருக்கும். அவங்க சொன்னதையே திரும்பத் திரும்பச் சொல்லி ரம்பமா அறுப்பாங்க''

''நீ அவங்க கிட்டக் கொஞ்சம் மரியாதையா நடந்திட்டிருக்கணும் கவிதா'' என்றான் அவன் காதலன்.

அந்தப் பேச்சை மாற்றி அவனைத் தன் உலகுக்குள் கொண்டுவர அவள் மிகவும் சிரமப்பட்டுமுயல வேண்டியிருந்தது. லீவு போட்டுவிட்டு வந்தபின்னும்தேடிவந்து தன்னுடைய சுதந்திரத்தில் குறுக்கிட்ட எஜமானியம்மாள் மேல் கோபம் கோபமாக வந்தது கவிதாவுக்கு.

# 11

மறுநாள் அவள் வேலைக்குப் போனபோதும் நாகரிகம் இல்லாமல் அவள் மனசு புரியாமல் சுலபா அதே பேச்சை மீண்டும் தொடங்கினாள்.

''ஏண்டீ யாரோடவோ சுத்தறியே? உன் அங்கிளுக்குத் தெரியுமாடீ? இதெல்லாம் ஏதாவது வம்புலே கொண்டுபோய் விட்டுடப் போவுது? ஜாக்கிரதை''—என்று சுலபா தேவையின்றித் தலையை நுழைத்து உரிமை எடுத்துக் கொண்டது கவிதாவுக்கு அறவே பிடிக்கவில்லை. எஜமானி பத்து வாக்கியம் பேசினால் கவிதா பதிலுக்கு அரை வாக்கியம் சொன்னாள்.

''என் ஃபிரண்டு ரொம்ப நல்லவரும்மா...அங்கிளுக்குத் தெரியும்''—என்று பதில் சொல்லிவிட்டு வழக்கமான வேலைகளைக் கவனிக்கத் தொடங்கினாள். தான் அதுபற்றி விசாரிப்பதே கவிதாவுக்குப் பிடிக்கவில்லை என்பதைச் சுலபா புரிந்து கொண்டாள். அதனால் அவளது ஆத்திரம் மேலும் அதிகமாயிற்று. அவள் தன்னைப் பொருட்படுத்தவில்லையோ என்று எண்ணியதும் சுலபாவின் 'ஈகோ' கிளர்ந்தெழுந்து விசுவரூபம் எடுத்து விட்டது. 'காதல் விஷயத்தில் தலையிடவோ அட்வைஸ் கூறவோ உனக்கென்ன யோக்கியதை?'—என்பதாகக் கவிதா தன்னைப் பற்றி எண்ணுகிறாளோ என்று சந்தேகம் வந்தவுடன் சுலபாவின் ஆணவமும் ஆத்திரமும் சீறிப் படம் எடுத்தன; சுலபா ஆடிட்டருக்கு ஃபோன் செய்து பேசினாள். ''லீவு போட்டுட்டு எவனோ கண்டவனோட எல்லாம் சுத்திக்கிட்டிருக்காளே?''—என்று தடலடியாகப் பேசினாள். ஆடிட்டருக்கே சுலபா பேசிய விதம் பிடிக்கவில்லை.

ஆடிட்டர் சொன்னார்:—

''இதெல்லாம் நாம ஒண்ணும் கண்டிக்க முடியாது சுலபா. கவிதா இந்தக் காலத்துப் பெண்...ஒருத்தர் சொல்லிக் கேட்கிறவள் இல்லே! இப்ப முளைச்சதுகள் எல்லாம் அடங்கவா செய்யிது?''

அவள் இந்தக் காலத்தவள் என்று கனகசபாபதி சொல்லிய விதத்திலிருந்து தன்னை ஹைதர் காலத்து மனப்

பாவிமையுள்ளவள் போல அவர் சித்திரிக்க முயல்வது சுலபா வுக்கு எரிச்சலூட்டியது. தன் இளமையையோ, அழகையோ இப்படிக் குறைத்து மதிப்பிடும் எந்த உரையாடலேயும் அவள் ஒப்பியதுமில்லே உடன்பட்டதுமில்லே, மறுக்காமல் விட்டது மில்லே.

''நாம மட்டும் பேரன நூற்ருண்டிலியா இருக்கோம்? நாமளும் இந்தக் காலத்திலே தானே இருக்கோம் ஆடிட்டர் சார்?''

''இருக்கோம்! ஆனல் பெரியவங்க சொல்றதை இந்தக் காலத்து பசங்க எங்கேம்மா கேட்கிருங்க? நீயே சொல்லு!''...

மீண்டும் மீண்டும் சுலபாவுக்கும் கவிதாவுக்கும் நடுவி லேயே ஒருதலே முறைக்காலம் இடைவெளிப்படுவது போலக் கனகசபாபதி பேசியது அவளுக்குப் பிடிக்கவில்லே. ஆத்திர மூட்டிவிட்டது.

''எதுக்கும் கண்டிச்சு வையுங்க சார்! இங்கே வேலே பார்க்கிறதனுலேதான் நான் கவலேப்பட வேண்டியிருக்கு... 'இன்னுரோட பெர்ஸனல் செகரெட்டரியாம்...இப்பிடிக் கண்டபடி சுத்தருளாம்னு' பேராயிடப்படாது''

''சொல்றேன்...நாம சொல்லத்தான் சொல்லலாம். அப்புறம் கேட்கிறதும் கேட்காததும் அவள்பாடு''—என்று சமாதானம் சொல்லி ஃபோனே வைத்தார் ஆடிட்டர்,

ஏற்கனவே சுலபாவிடம் வேலேக்குச் சேருவதற்கு முன்னல் கவிதாவுக்கு ஒரு ஸ்பெஷல் கிளாஸே நடத்தியிருந்தார் அவர். அவளுக்கு எது எது பிடிக்கும் எது எது பிடிக்காது என்று படித்துப் படித்துக் கவிதாவிடம் சொல்லியிருந்தார் அவர்.

''அங்கே வேலே பார்க்கிற வரையில் அவளேவிட அழகாகத் தோன்ற முயலாதே! அவளே விட நீ அழகானவள் என்பதை மறந்துவிடு. அவளேவிட நல்ல

சேலை உடுத்தாதே! நல்ல நகை அணியாதே! அவள் மனத்தில் அப்படி எண்ணம் வந்துவிட்டதோ நீ தொலைந்தாய்! எந்த மூலையிலும் சுலபாவின் 'ஈகோ' வை இலேசாகக் கூட வடுப்படுத்த முயலாதே... அது உனக்கு ஆபத்துக் கவிதா''

''அதுக்காக நான் அவலட்சணமாக மாறிவிட முடியுமா?''

''மாறவும் வேண்டாம்! ஒன்றும் வேண்டாம். அவள் ஈகோவை அப்படியே ஒப்புக் கொள். அதற்குப் பணிந்து வணங்குவது போல் பாவனை செய். ''மேடம் யூ லுக் ஸோ ப்யூட்டிஃபுல்'' என்பது போல் அவ்வப்போது நடுநடுவே அவளிடம் சொல்லிவை! உன் சொந்த அழகைச் சொந்த வாலிபத்தை மெல்ல மறந்து விடு''

''இது என்ன உத்தியோகமா அல்லது தண்டனையா மாமா?''

''இரண்டும் தான் கவிதா''

''ஒரு சம்பளத்திற்கு நாலுவேலை பார்க்கச் சொல்லு கிறீர்களே?''

''என்ன செய்வது கவிதா! இவள் ஒரு 'மெண்டல் கேஸ்.' இப்படி எல்லாம் கவனமாக நடக்காவிட்டால் நீ இவளிடம் நீண்ட காலம் வேலைபார்க்க முடியாது''

''இவளைத் திருப்திப்படுத்த நான் என்னைக் கிழவியாக்கிக் கொள்ள முடியுமா?''

''யார் ஆக்கிக் கொள்ளச் சொன்னார்கள்? சுலபாவின் இளமையை நீ மறுக்க முயலாதே என்று தானே சொன்னேன்.''

''இதன் அர்த்தம்?''

''அவள் இளமையைக் கொண்டாடு! உன் இளமையை மறந்து விடு''

''அது எப்படி மாமா சாத்தியம்?''

"அது நிச்சயமாக சாத்தியம் கவிதா! நாம் மறந்து விடுவதனால் நமது இளமையும் அழகும் குன்றிவிடப் போவதில்லை. தான் அழகு என்று இடைவிடாமல் நினைத்து அதையே எண்ணி மாய்ப்பவர்கள் தான் மூத்துப் போகிறார்கள். ஞாபகமில்லாமல் விடப்படும் எந்த அழகும் அப்படி மூப்பதில்லை. கவனித்துப் பராமரிக்கப்படும் எத்தனை மல்லிகைப் பதியன்கள் பூக்காமலே போகின்றன! யாரும் கவனிக்காத எத்தனை வன மல்லிகைகள் தாமாகப் பூத்துக் கொட்டுகின்றன"—

அவரது வாதம் சரியாகவே இருந்தது. அவள் மறுத்துப் பேசவில்லை. சுலபாவிடம் வேலைக்கு ஒப்புக்கொள்ள இசைந்தாள்.

பழைய இந்த விவாதங்கள் எல்லாம் இப்போது கவிதாவுக்கு மீண்டும் நினைவு வந்தன. 'சுலபா'வின் குணசித்திரத்தை மாமா கனக சபாபதி எத்தனை கனகச்சிதமாக எடை போட்டு முடித்திருக்கிறார் என்று உணர்ந்தபோது கவிதாவுக்கு வியப்பாகவே இருந்தது.

வெறும் உடல் நோயாளிகளிடம் கூட நர்ஸாக இருந்து விடலாம். அது மிகவும் எளிய காரியம். தாங்கள் நோயாளிகள் என்று தாங்களே உணராத மன நோயாளிகளிடம் உதவியாளராயிருப்பது பயங்கரமானது. தான் ஒரு மனநோயாளி என்பது சுலபாவுக்கே தெரியாது. அதை அவளுக்குத் தெரிவிக்கவும் கூடாது. அவளுடைய அழகுக்கும், ஆரோக்கியத்துக்கும் கவிதாவே அடிக்கடி நற்சான்றிதழ் கொடுக்கிற காரியத்தையும் செய்தாக வேண்டியிருந்தது. சிரமமாகத்தான் இருந்தது. சுலபாவின் முரண்டுகளுக்கும் அறியாமைக்கும் ஏற்ப இசைந்து பழகுவது கவிதாவுக்குப் பழகி இருந்தாலும் சமயாசமயங்களில் ஒரே மேக்காலில் ஒரு நொண்டிமாட்டோடு சேர்ந்து இழுக்கிறாற்போல உணர்ந்தாள் கவிதா.

கவிதாவுக்கு ஆங்கிலமும் இந்தியும் நன்றாகப் பேசவரும். சுலபாவுக்குத் தெலுங்கும் தமிழும் மட்டுமே வரும். ஆங்கிலம் வராது. இந்தி தெரியாது.

பிறரிடம் கவிதா இந்தியும் ஆங்கிலமும் பேசுமுன் எஜமானிக்கு அது உகப்பாக இருக்குமா இல்லையா என்று பார்த்து யோசித்துத் தயங்கிப் பேச வேண்டியிருக்கும். எஜமானிக்குப் பிடித்தால் பேசவேண்டும். பிடிக்காவிட்டால் பேசாமல் இருக்க வேண்டும்.

படப்பிடிப்புக்காக அவர்கள் வெளிநாடு போயிருந்தபோது சுலபாவின் முன்னிலையில் ஒரு வெள்ளைக்காரனிடம் கவிதா சரமாரியாக ஆங்கிலத்தில் உரையாட ஆரம்பித்ததைக் கவனித்துப் பொறுமையின்றி முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடிக்க உடன் அமர்ந்திருந்தாள் சுலபா. கவிதாவே தன்னை அம்போ என்று விட்டுவிட்டு இன்னோர் ஆணமகனிடம் இணைந்துபேச ஆரம்பித்தது சுலபாவுக்குப பிடிக்கவில்லை. அதுவும் தனக்குத் தெரியாத மொழியில் படுலாகவமாக அவள் தன்னைப் பொருட்படுத்தாமல் இன்னொருத்தனிடம் தனக்கு முன்பாகவே பேசியது அவளுக்குக் கடுப்பாயிருந்தது. காட்டுமிராண்டித்தனமாக நடுவே குறுக்கிட்டு,

"என்னடி! உனக்குத்தான் இங்கிலீஷ் தெரியும்னு பொளந்து கட்டிக்கிட்டிருக்கியா—"—என்றாள். கவிதாவுக்குச் சை என்றாகிவிட்டது. குறுக்கிட்டுப் பேசுமுன் "ஸாரி ஃபார் த இண்டரெப்ஷன்" என்று ஆயிரம வருத்தமும் மன்னிப்பும் கூறிவிட்டு மற்றவர்கள் உரையாடலில் குறுக்கிடுகிற அதிநாகரிக நாட்டில் சுலபாவோட கூடச் சென்றதே பாவம் என்று பட்டது கவிதாவுக்கு. சுலபா ஒவ்வொரு நேரம் ஒவ்வொரு 'மூடில்' இருந்தாள். அவளைத் தேடிவந்து யாராவது ஆங்கிலத்தில் பேசினால் அதைத் தமிழில் மொழி பெயர்த்துச் சொல்ல அவள் கூறும் பதில்களை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துச் சொல்ல என்று கவிதாவின் உதவி அவளுக்குத் தேவைப்பட்டது. அப்படி வேளைகளில் எல்லாம் கவிதா தயங்காமல் ரெடிமேடாக உடன் முன்வந்து தனக்கு உதவ வேண்டும் என்று சுலபாவே எண்ணினாள். கட்டளையும் இட்டாள்.

ஆனால் கவிதா எபபோதாவது தானே சுயேச்சையாகச் சுலபாவுக்குத் தெரியாத சில விஷயங்கள் தனக்குத் தெரியும் என்று தற்செயலாகக் காட்டிக் கொள்ள முயன்றால் கூட அவளுக்குப் பொறுக்காது, கோபம் வந்துவிடும்.

"உனக்கு எல்லாம் தெரியுது...இங்கிலீஷ்லே பேசலாம்—இந்தியிலே பேசலாம்கிற திமிர்டீ"—என்று சுரீர்என ஆரம்பித்து விடுவாள்,

முதல் முதலாகச் சுலபாவுக்கு இந்தியில் டுப்குரல் கொடுக்கக்கூடக் 'கவிதா'வையே ஏற்பாடு செய்யலாம் என்று யோசனை கூறினார் ஒரு தயாரிப்பாளர். ஏனென்றால் கவிதாவின் இந்தி நன்றாயிருந்தது. கொஞ்சம் முயன்று ஓர் இந்தி ஆசிரியரை விட்டுப் பழக்கினால் அவள் வடநாட்டுக்காரர்களைப் போலவே சகஜமாக இந்தி பேசுவாள் என்று தோன்றியது. சுலபாவுக்கோ இந்தி உச்சரிப்பு அறவே வரவில்லை. கவிதாவுக்குக் கூடக் குரல் தானம் செய்ய ஆசை தான். அது தானமுமில்லை. கணிசமான வருமானமும் கிடைக்கும் என்று தெரியவந்தது. சுலபா என்ன நினைத்தாளோ எப்படிப் புரிந்து கொண்டாளோ. கடைசி நிமிஷத்தில் அந்தத் தயாரிப்பாளரைக் கூப்பிட்டு, "கவிதாவைத் தொந்தரவு பண்ணாதிங்க... நல்லா இந்தி பேசற ஒரு வடக்கத்திப் பொண்ணையே குரலுக்கு ஏற்பாடு பண்ணிடுங்க" என்று கண்டிப்பாகச் சொல்லி விட்டாள். இதில் கவிதாவுக்கு ஏமாற்றம் தான்.

மாமாவிடம் போய்ச் சொன்னாள்: "எனக்குக் கொஞ்சம் பணம் கிடைக்கும்! இந்தி பேச வராத வேற சில ஆர்ட்டிஸ்ட்டுக்கும் குரல் கொடுக்கக் கூப்பிடுவாங்க! என் குரலும் உச்சரிப்பும் பிரமாதமா 'சூட்' ஆகும்னு அவங்களே டெஸ்ட் பண்ணி முடிவு சொல்லிட்டப்ப இவ திடுதிப்னு குறுக்கிட்டுக் கூடாதுன்னுட்டாளே?"

"நல்ல வேளை! நீ தப்பிப் பிழைத்தாய். அவளுக்குப் பிடிக்காததை நீயாக ஒப்புக் கொண்டு செய்ய ஆரம்பித்து

அப்புறம் சித்திரவதை அநுபவிப்பதைவிட முதலிலேயே விட்டுப் போனதற்காகச் சந்தோஷப்படு'' என்றார் மாமா.

இவை எல்லாம் அநுபவங்கள் என்றாலும் கவிதாவின் ஏமாற்றங்களைப் படிப்படியாக வளர்க்க இவை போதுமானவையாக இருந்தன. எஜமானியின்விரக்தி வெப்பத்திற்கு அருகிலேயே தொடர்ந்து இருந்தால் தானே வாடிக் கருகி விடுவோமோ என்ற எண்ணம் கவிதாவுக்குள் வளர்ந்தது. எஜமானியின் ஈகோவை நிறைவு செய்யத் தன் ஈகோவை வலிந்து அடக்குவது கவிதாவுக்கே பிடிக்கவில்லை.

## 12

கோகிலா சுலபாவுக்கு ஃபோன் செய்தாள். தன் விருந்துமுறை முடிந்து சுலபாவின் தரப்பிலிருந்து ஒரு விருந்து பாக்கியிருந்தது. அதை அப்படிக் கடன் பாக்கியை வசூலிப்பது போல் வலிந்து கேட்டுப் பெற முடியாது. கூடவும் கூடாது. ஆனால் சுலபாவுக்கு எப்படியாவது நினைவுபடுத்த வேண்டும்தான். அதற்கு ஆயிரம் வழிகள் இருந்தன. 'டூயிங் நைஸெஸ்ட் திங்க்ஸ் இன் நாஸ்டியஸ்ட்வே' என்பதையே மாற்றி 'டூயிங் நாஸ்டியஸ்ட்திங்ஸ் இன் நைஸெஸ்ட்வே' எனப் பழகியிருந்தாள் கோகிலா. 'மோசமான விஷயங்களை நாசூக்காக ஆரம்பித்து முடிப்பது' கோகிலாவுக்குக் கைதேர்ந்த கலை.

''என்ன சுலபா! உன்னைப் பார்த்து ஒரு யுகம் ஆனாப்ல இருக்குடீ... எப்படி இருக்கே? ஒருபத்திரிகையிலே உன் பாரிஸ் படப்பிடிப்பு அநுபவம் பற்றிப் பார்த்தேன்... நல்லாச் சொல்லியிருந்தே'' என்றாள் கோகிலா. புரிந்து கொண்டு பதில் சொன்னாள் சுலபா: ''எனக்கு இந்த சண்டே ஈவினிங் நைட்— எல்லாம் ஃப்ரீ! கால்ஷீட் இல்லாமே ஃப்ரீயா வச்சுக்கிட்டிருக்கேன். சண்டே டின்னருக்கு இங்கே வந்துடேன்...''

''என்னைத்தவிர வேற யாராவது வராங்களா? நாம ரெண்டு பேர் மட்டும்தானா?''

''வேற நம்ம ஃபிரண்ட்ஸ் யாரையாவது கூப்பிடணும்னுச் சொல்லு! கூப்பிடறேன். எனக்கு யாரும் வேண்டாம்னு படுது. நாம பலதும் மனசுவிட்டுப் பேசுவோம். உன் இரகசியங்களை நீ மறைக்காமல் என்னிடம் சொல்லுவே. என் இரகசியங்களை நான் மறைக்காமல் உன்னிடம் சொல்லுவேன். பிடிச்சால் இஷ்டம் போலக் கூட ரெண்டு ரவுண்டு பிஸ்கட் சாப்பிடுவோம். மத்தவங்களைக் கூப்பிட்டோம்னு இதெல்லாம் வம்பு ஆயிடும்''

''சரியாச் சொன்னேடீ சுலபா! என் அபிப்ராயமும் அது தான். நம்ம அந்தரங்கங்கள் நம்மோட இருக்கணும். மத்தவங்க மூலமா அநாவசியமா வெளியேறிடப்பிடாது''

''அப்ப நீ மட்டும் வா போறும். டிரைவர்கூட வேணும்... வழக்கம்போல் நீயே 'ஸெல்ஃப்' எடுத்துக்கிட்டு வந்துடு கோகிலா! இல்லாட்டி நானே வண்டி அனுப்பட்டுமா?''

''வேண்டியதில்லே சுலபா! புது மாருதி வந்தப்புறம் இவர் அதை என் டிஸ்போஸல்லியே விட்டுட்டார். சொந்தமா ஓட்டிக்கிட்டு வர்ரத்துக்கு ரொம்ப சுகமா இருக்கு''

''நான் கூட ஒரு மாருதி ஏ.சி.டீலக்ஸ் மாடலுக்கு ஏற்பாடு பண்ணச் சொல்லியிருக்கேன். பெட்ரோல் நெறையக் குடுக்குதுங்கிறாங்க...''

''டேங்க் ஃபுல் பண்ணிட்டாப் பத்துப் பன்னண்டு நாள் கவலையில்லாமே இருந்துடலாம்''

''இப்ப விற்கிற பெட்ரோல் விலையில அது பெரிய காரியம்டீ கோகிலா''

''அப்படி எங்களை மாதிரி மனுஷா கவலைப் படறது நியாயம்டீ சுலபா! உனக்கென்ன வந்தது? 'கடிலாக்' ஓட்டிப் பெட்ரோல் செலவழிச்சாக்கூடக் கவலையில்லே! கோடி

கோடியாச் சேர்த்து வச்சுட்டு என்னடி பண்ணப்போறே? அநுபவிக்காத பணம் எதுக்கு ஆகப்போகுது? செலவழிக்கப் படாத பணம்கிறது கன்னி கழியாத பெண் மாதிரி. அதுனாலே நமக்கும் பிரயோசனமில்லே பிறருக்கும் பிரயோசனமில்லே''

''என்னடீ! பிரமாதமான மூடில இருக்கியா? உதாரணம் லாம் எப்பிடி எப்பிடியோ வருதே?''

''நான் சுமாரான மூடிலே எப்பவுமே இருக்கிறதில்லேடீ சுலபா!''

''அப்போ ஞாயிறன்னிக்கி டின்னரிலே பேச நெறைய விஷயம் இருக்குன்னு சொல்லு''

''ப்ளெண்டி! நேத்திக்குக்கூட இங்கிலீஷ்ல 'செக்ஸை'ப் பத்தி ஒரு பிரமாதமான நியூ புக் படிச்சேன். உங்கிட்ட நிறையச் சொல்லணும்...''

''போறுமே! இதெல்லாம் ஃபோன்ல ஒண்ணும் வேண் டாம்...''

''ஃபோனுக்கு விரகதாபம் அது இதுல்லாம் கிடையாது சுலபா—''

''நீ ரொம்ப மோசம் டீ கோகிலா! வர வர உனக்கு வாய் துளுத்துப் போச்சு... சண்டே மறந்துடாதே...''

''அதுவரை நிறையச் சேர்த்துவச்சுக்கிறேன் சுலபா''

''எதை டீ சேர்த்து வச்சுக்கப் போறே?''

''உங்கிட்டப் பேசறத்துக்கான இரகசியங்களைத்தான் சொல்றேன்...அது சரி... இன்னொண்ணு கேட்க மறந் துட்டேனே...?''

''என்னடீ? கேளேன்...''

''டின்னர் 'வெட்' தானே?''

''உனக்குன்னாலே அது 'வெட்' பார்ட்டியாத் தானே இருக்க முடியும்?''

''இந்தப் பூனையும் இந்தப் பாலைக் குடிக்குமாங்கிருப்ல நீ என்னமோ பெரிய டீ டோட்டலர் மாதிரிப் பேசறயேடீ சுலபா?''

''உங்கூடச் சேர்ந்தப்புறம் எப்படீடீ டீட்டோட்டலரா இருக்க முடியும் கோகிலா?—''

கேள்வி எகத்தாளமாய் வந்தது.

''இது நான் உன்னைக் கேட்க வேண்டிய கேள்வியாக்கும்! கொஞ்சம் இடம் கொடுக்கப் போக நீ முந்திக் கொண்டு என்னைக் கேட்கிறாய்!''

—இப்படி வளர்ந்து முடிந்தது அவர்கள் உரையாடல். சுலபாவுக்குக் கோகிலாவுடன் தனி டின்னர் என்றாலேபடுகுஷி. கோகிலாவும் சரி அவள் புருஷனும் சரி படுசுதந்திரமான பேர்வழிகள். புருஷனை அவள் சுதந்திரமாக விட்டிருந்தாள். புருஷன் அவளைச் சுதந்திரமாக விட்டிருந்தான். தேவைக்கதிக மான சுதந்திரங்கள், பெர்மிஸிவ்னெஸ்கள் எல்லாம் உள்ள அமெரிக்காவிலோ, பிரான்ஸிலோ பிறந்திருக்க வேண்டிய தம்பதிகள். தவறிப்போய் இந்தியாவில் இருந்தார்கள். கோகிலாவும் சுலபாவும் சிநேகிதம் ஆனதே ஒரு வேடிக்கை யான கதை.

ஏதோ ஒரு மேல் மட்டத்துப் பணக்கார வீட்டுப் பார்ட்டி ஒன்றில் அறிமுகமானார்கள். கோகிலா நகைச்சுவையாகப் பேசினாள். நிறைய செக்ஸ் ஜோக்குகளாகச் சொன்னாள். பிளேபாய் ஜோக்ஸ் நிறைய வந்தது. பெண்களில் இத்தனை வெளிப்படையான கலகலப்பான ஆட்களைச் சினிமா உலகில் கூட அவள் சந்தித்ததில்லை. அப்புறம் கோகிலா தன் வீட்டுக்கு ஒரு நாள் இவளைச் சாப்பிடக் கூப்பிட்டாள். இவளு டைய பலவீனங்கள் அவளுக்குப் புரிந்தன. அவளுடைய பலவீனங்கள் இவளுக்குப் புரிந்தன. பரஸ்பரம் இருவரும் தவிர்க்க முடியாத சிநேகிதிகள் ஆகிவிட்டார்கள். அந்தரங்கங் களைப் பகிர்ந்து கொண்டார்கள். கோகிலா அழகி மட்டுமில்லை.

துணிச்சல்காரி, படித்தவள் என்பதால் சுலபாவுக்கு அவளிடம் ஈடுபாடு ஏற்பட்டது. 'சூப்பர்ஸ்டார் சுலபா தன் நெருங்கிய தோழி—தான் வாடீ போடீ என்று பேசுகிற அளவு உரிமையுள்ளவள் என்றறிந்ததும் பிறர் தன்னை மதிக்கிற மதிப்புக் கோகிலாவை அப்படியே கிறங்க அடித்திருந்தது. இவர்களைப் பிடிக்காத—இவர்கள் சிநேகிதம் பிடிக்காத சில பொறுமைக்காரர்கள் இவர்கள் இரண்டு பேரும் 'லெஸ்பியன்ஸ்' என்று கிளப்பிவிட்டு வம்பு பேசினார்கள். கோகிலாவே ஒருநாள் வேடிக்கையாக, இதைச் சுலபாவிடம் ஃபோனில் சொல்லிச் சிரித்தாள்.

''நம்மைப் பத்தி மத்தவங்க கொழுப்பெடுத்துப் போய் என்ன பேசிக்கிறாங்க தெரியுமாடீ சுலபா?''

''தெரியாதே...? என்ன பேசிக்கிறாங்களாம்? தெரிஞ்சாச் சொல்லேன்-''

''சே! வேணும்...அதைக் கேட்டு வீணா உன் மனசுதான் சங்கடப்படும். நான் தாங்கிப்பேன். 'ஆமாம் அப்படித்தான்! உங்களுக்கு என்னடீ வந்திச்சு?''ன்னு எதிர்த்துக் கேட்கக்கூடத் துணிஞ்சிருவேன். நீ பாவம் இதைக் கேட்டா அப்படியே இடிஞ்சு போயிருவே!''

''அப்பிடி என்னதான் சொல்றாங்கடீ? சொல்லேன், அதையும் நான் கேட்டுத் தெரிஞ்சுக்கிறேன்.''

''நாம ரெண்டு பேரும் லெஸ்பியன்ஸாம்''—

''புரியலியே...? அப்பிடீன்னா...'''?''—

உண்மையிலேயே சுலபாவுக்கு லெஸ்பியன்ஸ் என்றால் என்னவென்றே தெரிந்திருக்கவில்லை. கோகிலாவுக்கு இதை நம்பவே முடியவில்லை. தன்னளவு பாலியல் மனத்தத்துவ நூல்களைச் சுலபா படித்திருக்க வாய்ப்பில்லை என்றாலும் இப்படிச் சில முக்கியமான வார்த்தைகள் கூடவா தெரியாமல் இருக்கமுடியும்! என வியந்தாள். நம்பக்

கூட முடியாமல் இருந்தது. கோகிலா அதைச் சொல்லிய விதத்தில் சுலபாவின் ஆவல் கிளர்ந்து விட்டிருந்தது. அது என்ன வென்று தெரிந்து கொண்டுதான் ஆக வேண்டும் என்று துடித்தாள் அவள்.

''உனக்குப் புரியலேன்னு அதை மறந்துடு சுலபா... வொர்ரீ பண்ணிக்காதே. நேரே பார்க்கறப்பச் சொல்றேன். ஃபோனில் வேண்டாம்''

''சஸ் பென்ஸ் எல்லாம் வேணும். இப்பவே சொல்லிடு கோகிலா''

கோகிலா கலகலவென்று ஃபோனிலேயே இரைந்து சிரித்தாள்.

''என்னடி நான் கேட்கிறேன். நீ பாட்டுக்குச் சிரிக்கிறே?''

''பின்னே... சிரிக்காமே வேற என்ன பண்ணுவாங்க... இதைப் போயி ஃபோனிலே விளக்குன்னு சிரிப்புத்தான் வரும்''

''நிமிஷத்துக்கு நிமிஷம் சஸ்பென்ஸையும் அதிகமாக்கி விஷயத்தையும் என்னன்னு சொல்லாமக் கழுத்தை அறுக்கிறத் துக்குப் பதிலா நீ இதைப் பத்தி எங்கிட்டப் பிரஸ்தாபிச்சே இருக்க வேணும்டீ கோகிலா''

''இது 'ஏ' விஷயம். அடல்ட்ஸ் ஒன்லி. ஃபோன்ல சொல்லமுடியாது. நேரே பார்த்தால் கொஞ்சம் டெமான்ஸ் ரேட் பண்ணிக் கூட விளக்கிட முடியும்''

இப்போது சுலபாவுக்கு ஏதோ கொஞ்சம் புரிந்த மாதிரியும் இருந்தது. புரியவும் இல்லை. 'செக்ஸ் விஷயம்' என்று மட்டும் விளங்கியது.

''பொல்லாதவடீ நீ! ஆரம்பிச்சு விட்டுடுவே! முழுக்கச் சொல்லாமல் இப்படித்தான் சித்திரவதை பண்ணுவே. இது உன் வழக்கமாவே போச்சு! சீக்கிரமா நீயே நேரில் வந்து சொல்லப்பாரு'' என்று கூறி டெலிஃபோனை வைத்தாள் சுலபா.

## 13

கோகிலாவுக்கும் சுலபாவுக்கும் நெருக்கமான சிநேகிதம் இருந்தாலும் இருவருக்குமிடையே நிறைய வேறு பாடுகள் இருந்தன. கோகிலா மனத்தத்துவத்தில் பட்டதாரி. ஏராளமான ஆங்கில நாவல்களையும் உளவியல் நூல்களையும் படித்தவள். தொடர்ந்து படித்துக் கொண்டிருப்பவள். உலகப் புகழ் பெற்ற நாவல்கள், காப்பியங்கள், கதைகள், நாடகங் களின் கதாபாத்திரங்களையும் அவர்கள் பற்றிய திறனாய்வு நூல்களையும் படித்தவள்.

சுலபா ஃபார்மல் எஜுகேஷனுக்காகத் தெலுங்குத் திண்ணைப் பள்ளிக் கூடத்திலும் ஒதுங்காதவள். அவளுடைய செல்வத்துக்கும் புகழுக்கும் பின்னால் கூட முறையான படிப்பு என்பது ஓரளவுதான் வளர முடிந்தது. அதற்குள் புகழும் பணமும் அதைவிட அதிகம் வளர்ந்து விட்டன.

அளவாய் அழகாய்ச் செதுக்கி எடுத்த தங்கச்சிலை போன்ற வனப்பும், முகவசீகரமுமே சுலபாவின் பெரிய முதலீடுகளாக அமைந்து அவளை முன்னுக்குக் கொண்டு வந்திருந்தன. படிப்பு இன்மை குறையாக உணரப்படாத அளவு செல்வம் அவளிடம் சேர்ந்து விட்டது.

தெலுங்கிலும் ஆங்கிலத்திலும், தமிழிலும் எழுத்துக் கூட்டி அவள் கையெழுத்துப் போடும் விதங்களை வைத்தே அவள் அதிகம் படிக்காதவள் என்பதைச் சொல்லிவிட முடியும். ரொம்ப வருஷங்களுக்குப் பின் 'தினத்தந்தி' படிக்கப் பழகிக் கொண்டாள். வீட்டுக்கு வருகிற ஆங்கில நாளிதழ்களைக் கவிதாதான் படிக்க வேண்டும். சுலபா படிப்பதாகச் சிலவேளை பாவிப்பாள்.

தன் உடலின் வசீகரமான வளைவுகளாலும் முகத்தின் மோகனப் புன்னகையாலும் - பெண்ணுக்கு அதிக அழகு என்றும் கம்பீரம் என்றும் வர்ணிக்கத்தக்க எடுப்பான உயரத்

தானும் அவள் கவர்ச்சி பிரமாதமாயிருந்தது. நல்ல சண்பகப் பூவின் மேனி நிறம். சிரிப்புக்கு மட்டுமே கனகாபிஷேகம் செய்யலாம் போல அத்தனை அழகான பல்வரிசை. எதிரே நிற்பவர்களைச் சுருட்டி விழுங்கும் சிரிப்பு. மோகனமான கண்கள். உல்லாசமான இந்த விழிகளுக்கும், புன்னகைக்கும் அப்பால்தான் விரக்தியும், வெறுப்பும் மறைந்திருக்கின்றன என்பதைச் சத்தியம் செய்து சொன்னால் கூட நம்புவது சிரமமாயிருக்கும். இப்படிப் பட்டவளிடம் போய்க் கோகிலா 'லெஸ்பியன்' என்றால் என்ன புரியும் இவளுக்கு?

ஃபோனில் பேசிய மறுதினம் நேரில் பார்த்த போது கோகிலா 'லெஸ்பியனிஸம்' பற்றி இவளிடம் விவரித்ததும் இவள் சிரித்தாள். கேலியாகக் கேட்டாள்:

''அந்த மாதிரிக் கூட உண்டா என்ன?''

''அந்த மாதிரி மட்டும் என்ன? அதற்கு நேர் மாறாக இந்த மாதிரியும் கூட உண்டுடீ''— என்று லெஸ்பியனிஸத்திற்கு நேர் மாறானதைக் கோகிலா விவரித்தபோதுகூட எல்லாம் தெரிந்த குருநாதர் முன் சிஷ்யை கேட்பது போல் அடங்கிக் கேட்டுக் கொண்டிருந்தாள் சுலபா. கோகிலா கூறுபவை இவளுக்குப் புதியவையாயிருந்தன.

ஆனால் இதெல்லாம் கோகிலாவும் சுலபாவும் பழகத் தொடங்கிய புதிதில்தான். நாளாக நாளாக நிறைய இரகசியங்களை— நிறைய விஷயங்களைக் கோகிலாவிடம் பழகிப் பழகியே தெரிந்து கொண்டாள் சுலபா. கோகிலாவைப் போல ஒரு படித்த— எந்தப் போக்கிரித்தனத்துக்கும் துணிந்த மேல் வர்க்கத்துப் பெண்ணின் நட்பு சுலபாவுக்கு அவசியமாயிருந்தது. அந்த நட்பு இதமாகவும், சுகமாகவும், தேவையானதாகவும் இருந்தது. கோகிலாவும் இவளும் சந்திக்கத் தவறிய வாரக் கடைசிகளே அநேகமாக இராது. இருவரும் ஒருவர் மனசுக்குள் இருப்பதை இன்னொருவரிடம் கொட்டித் தீர்த்து விடுவார்கள். பாரம் குறைந்த மாதிரி உணர்ந்த பின்பே இருவருக்கும் திருப்தி ஏற்படும். இப்படிச்

சந்திப்புக்கள் பேச்சுக்களின்போது கவிதாவோ, நரசம்மாவோ கூட உடனிருக்க அவர்கள் அநுமதிப்பதில்லை. இந்தச் சந்திப்புக்களின் சுகங்களை இவர்கள் இருவர் மட்டுமே பங்கிட்டுக் கொண்டார்கள்.

சுலபா வெளிநாட்டில் படப்பிடிப்பு ஏற்பாடுகள் முடிந்து திரும்பியதும் அவளும், கோகிலாவும் தங்களுக்குள் சந்தித்துக் கொண்டது சுவாரஸ்யமானதொரு சந்திப்பாக இருந்தது.

தன்னோடு வெளிநாட்டுக்கு வந்திருந்த யாருமே பிரயோசனமில்லை. கோகிலாவோடு வெளிநாடு போயிருந் தால் நன்றாயிருந்திருக்கும் என்று சுலபாவை உணரச் செய்து விட்டாள் கோகிலா. அவள் ஒவ்வொன்றாகச் சொல்லி அதைப் பார்த்தாயா? இங்கு போனாயா? அதெல்லாம் 'என்ஜாய்' பண்ணுமலா திரும்பி வந்தாய்?—என்று கேட்கக் கேட்கச் சுலபாவுக்கு ஒரே ஏமாற்றமாகவும், தவிப்பாகவும் போயிற்று. இவள் அவசர அவசரமாகப் பார்த்துவிட்டு வந்திருந்த பாரிஸ் நகரை விடக் கோகிலா ஆர அமரப் பலமுறை பார்த்து விட்டு வந்திருந்த பாரிஸ் கேட்கச் சுகமாயிருந்தது. இவள் பார்த்து முடித்த லண்டனைவிட அவள் பார்த்து ரசித்து நினைவூட்டிய லண்டன் சுகமானதாயிருந்தது. அவள் இடங் களைத் தேடித் தேர்ந்தெடுத்துப் பார்த்திருந்தாள்.

''பாரிஸ் போயிருந்தியே பிகால் பார்த்தியா?''

''அப்படீன்னா?''...

''பிகாலுக்கு உன்னை யாருமே கூட்டிக்கிட்டுப் போகலி யாடீ?''

''போகலியே எனக் கென்ன தெரியும்டீ?''

''அப்படியானால் நீ பாரிஸைப் பார்க்கவே இல்லைடீ! இனிமேல் புதுசா என்னோட ஒரு தடவை வந்து பார்த்தால் தான் உண்டு.''

''உன்னோடப் பாரிஸைப் பார்க்கப் போறதுங்கிறது ஒரு பாரிஸைக் கைகோத்து உடனழைத்தபடி இன்னொரு

பாரிஸைப் பார்க்கப் போகிற மாதிரின்னு சொல்லணும்டி கோகிலா''

''பின்னென்ன பாரிஸை நர்சம்மாவோடவும், கவிதா வோடவுமா போய்ப்பார்க்க முடியும்? கோகிலா, கூட இருந் தால் நீ அதிர்ஷ்டசாலியாயிருந்திருப்பேடி?''

''நான் துரதிருஷ்ட சாலிதான்டி! கவிதாதான் என்கூட இருந்தாள்,''

''கவிதாவுக்கு என்ன தெரியும்? பாவம். சிறிசு. கல்யாண மாகாதவள்''

''அப்படியில்லேடி கோகுலா! அவளும் யாரோ ஓர் இளைஞனைக் காதலிக்கிறாள், சதாகாலமும் லீவு போட்டு விட்டு அவனோடு ரெஸ்ட்டாரெண்டுகள், தியேட்டர்கள், பார்க்குகள் என்று காலேஜைச் சுற்றுகிறாள்''—

''சும்மா ஆண்களைச் சுற்றுகிற பெண்கள் எல்லாம் பிரார்த்தனையுடன் அநுமார் கோயிலேயோ, பிள்ளையார் கோயிலேயோ சுற்றுகிறவர்கள் மாதிரித்தான். அவர்களுக்கு எப்போது எப்படி வரம் கிடைக்கும் என்றே தெரியாது! பிள்ளையார் கோயிலேயும், அநுமார் கோயிலேயும் சுற்றுகிற மாதிரித்தான் கவிதாவோடு பாரிஸையும் லண்டனையும் பய பக்தியோடு சுற்றிப் பார்த்துவிட்டு வந்திருக்கிறாய் நீ''—

''போதும்டி! ரொம்பத்தான் கிண்டல் பண்ணாதே. நான் சுற்றிப் பார்த்ததிலே என்ன குறை? தயாரிப்பாளர் எஸ். பி. எஸ். என்னைத் தரையிலே இறங்கவிடாமல் பார்த்துக் கொண் டார். கப்பல் மாதிரி ஒரு லிமோஸின் கார் எல்லா இடத் துக்கும் கூட்டிக்கிட்டுப் போச்சு. ஜூரிச்சுக்கும், ஜெனிவா வுக்கும், பிளேன்ல பறந்தோம். ஆம்ஸ்டர்டாமிலே 'ப்ளூஜாக்கர்' வாங்கினோம்! ஒரு குறையும் இல்லே''...

''அப்படிக் கீழே இறங்காமே லிமோஸின்ல சுத்தினதுதான் தப்பு. பாரிஸ் என்பது சுகந்தம். பாரிஸ் என்பது உல்லாசம், பாரிஸ் என்பது சந்தோஷம். பையில் பணத்துடனும் மனசில் மகிழ்ச்சியுடனும் கீழே இறங்கி நடப்பவர்கள்தான் அதை

அநுபவிக்க முடியும். மெட்ரோ ரயிலில 'ரவுண்ட் ட்ரிப்' டிக்கட்டை வாங்கி வைத்துக் கொண்டு இஷ்டம் போல் சுற்றினுல் அங்கங்கே சுகங்களும், சந்தோஷங்களும் கேளிக்கைகளும் இறைந்து கிடப்பது புரியும். கேளிக்கைகள் அதிகம் இறைந்து கிடக்கிற இடம்தான் பிகால், 'மௌலின் ரோஜ்' போய்ப் பார்த்தியா? 'பிகால்'லே ரெண்டு மூணு கேஸட்டாவது வாங்கினியா? நாலஞ்சு ஃப்ளோர் ஷோவாவது பார்த்தியா? பாரிஸ்ல என்னதான் பண்ணினே?''

''எஸ். பி. எஸ். சிரமப்பட்டு டிக்கெட் வாங்கி லிடோவுக்குக் கூட்டிக் கிட்டுப் போனுர். அதுக்கு நேரம் கிடைக்கிறதே சிரமமாப் போச்சு. லேட் நைட் ஷோவாப் பார்த்து டிக்கெட் வாங்கிப் போய்ப் பார்த்துவிட்டு வந்தோம்''

''அதெல்லாம் இருபது வருசத்துக்கு முன்னுடிப் பாரிஸ் போனவன் பார்த்தேன்னு சொல்லிப் பீத்திக் கிட்டிருக்கிற பழைய விவகாரம்! எய்ட்டீஸ்ல ஒருத்தன் சொல்லிக்கிறதுக்கு லைஃப்ஷோ, மௌலின் ரோஜ்னு எத்தினி எத்தினியோ புதுசா வந்திருக்கேடீ?''

''அதெல்லாம் எனக்கென்னடீ தெரியும்? என்னைக் கூட்டிக்கிட்டுப் போனவங்க எங்கெங்கே கூட்டிக்கிட்டுப் போனுங்களோ அதெல்லாம் தான் நான் பார்த்தேன்''

''சில சமயத்திலே கூட்டிக்கிட்டுப் போறவங்களும் கூடப் போறவங்களும் சேர்ந்து ரெண்டு குருடங்க யானை பார்த்த கதையா ஆயிடும். கூட வர்ரவருக்குப் பிடிக்குமோ பிடிக்காதோங்கிற தயக்கத்திலேயும், கூச்சத்திலேயும் கூட்டிக்கிட்டுப் போறவங்களுக்குச் சிலதை விசாரிக்கவும், சொல்லவும் தோனுது. கூட்டிக்கிட்டுப் போறவர் தன்னைப் பத்தி என்ன நினைப்பாரோ என்ற தயக்கத்திலும், பயத்திலும், கூச்சத்திலும் கூடப் போகிறவரே தன் ஆசைகளை உள்ளே புதைத்துக் கொள்வது உண்டு. நம்மிடையே வேஷங்கள் அதிகம். வேஷங்களைப் பிறர் முன் களைய நாம் விரும்புவதே இல்லை. தனியே நமக்கு

நாமே அந்தரங்கமாக உடைமாற்றுவது போல் அவற்றை இரகசியமாகக் களைந்துவிட்டு மறுபடி வேஷம் போடுகிறோம். இந்தியர்களின் பொதுக் குணங்களில் இதுவும் ஒன்று சுலபா! ஓர் ஃபிரெஞ்சுக் காரனோ, அமெரிக்கனோ இப்படி வேஷம் போடுவது மில்லை. களைவதும் இல்லை. நாம் இரண்டையுமே அடிக்கடி செய்கிறோம். வேஷம் போடுகிறோம். களைகிறோம். மோஸ்ட் ஆஃப் த இண்டியன்ஸ் ஆர் ஸ்பிளிட் பெர்ஸனுலிட்டீஸ்...''

''என்னைப் பொறுத்தவரை வேஷம் போடுவதும் களைவதும், கலைப்பதும் மறுபடி புதுவேஷம் போடுவதும்தான் என் தொழில் கோகிலா!''

''நம் நாட்டில் வேஷம் போடுபவர்கள் யார் என்பது கேள்வியில்லை. வேஷம்போடாதவர் யார் என்பது தான் கேள்வி. மேக்கப் இல்லாமலே சகஜமாக வேஷம் போடுவதைப் பிறவிக் குணமாகப் பெற்ற கோடிக் கணக்கான மக்கள் உள்ள நாட்டில் நாம் வாழ்கிறோம்டீ சுலபா!''

''கொஞ்சங் கூடத் தேசபக்தியே இல்லாமல் இப்படி உன் சொந்த நாட்டையே வேஷதாரிகளின் தேசம் என்கிறாயேடீ? இது உனக்கே நன்றாயிருக்கிறதா கோகிலா?''

''தேசபக்தி வேறு! ஆத்ம பரிசோதனை வேறு. இந்தக் கடுமையான விமரிசனம் ஆத்ம பரிசோதனைதான், வேஷம் போடுவதும், இரகசியமாகக் களைவதும், பிறகு புது வேஷம் போட முயல்வதும் நமது தேசிய குணங்களில் தலையாயது''

''நீ ஒருத்தியாவது இந்தத் தேசத்தில் விதிவிலக்காக இருக்கிறாயே? அது போதாதாடீ?''

''இருக்கிறேன்! ஆனால் எங்கே என்னை வெளிப்படையாகக் காட்டிக் கொள்ள முடிகிறது. நானும் வேஷம் போடத்தான் வேண்டியிருக்கிறதடீ சுலபா! நம் சமூக அமைப்பு அப்படி! நான் வெளிப்படையாக என்வேஷங்களைக் களைந்து நினைப்

பதைப் பேச ஆரம்பித்தால் அப்புறம் என்னைப் பற்றி என்ன சொல்லுவாங்க தெரியுமா? 'கோகிலா சரியான திமிர்பிடிச்ச பொம்பளை. ஷீ இஸ் அப்டு எனிதிங்'னு கமெண்ட் அடிக்க ஆரம்பிச்சிடுவாங்க, நம்மூரைப் பத்தி எனக்கு நல்லாவே தெரியும்டி சுலபா!''

# 14

கோகிலாவுடன் பேச ஆரம்பித்தால் நேரம் போவதே தெரியாது. சுவாரஸ்யமாகத் தொடரும், சுலபா அந்த உரையாடல் சுகத்தை அநுபவிப்பதற்காக 'கால்ஷீட்களை' இரத்துச் செய்திருக்கிறாள். பல்லாயிரக் கணக்கில் செலவழித்துப் போடப்பட்ட 'செட்'களையும் யூனிட் ஏற்பாட்டையும் மறந்து படப்பிடிப்புக்குப் போகாமல் உரையாடல் சுகத்தில் ஈடுபட்டிருக்கிறாள், மனிதர்கள் அறிய ஆசைப்படும் இரகசியங்களும், விவரங்களும் தெரிந்த விரும்பத்தக்க 'கான்வர் சேஷனலிஸ்ட்' கோகிலா ஒருத்திதான்,

கோகிலாவின் அந்தரங்கலைப்ரரியில் பாலியல் பற்றிய புத்தகங்கள் மட்டுமில்லை. வீடியோ டெக்கும் பாரிஸ், கோபன் ஹேகன் போன்ற நகர்களுக்குப் போனபோது இரகசியமாக வாங்கி வந்த 'லைஃப் ஷோ' வீடியோ கேஸட்டுகளும் கூட உண்டு. அவை படுநீலமானவை என்பது சுலபாவின் அபிப் ராயம். ''இது 1986ல் தான் படுநீலம். 1987ல் 88ல் இதைத் தூக்கி அடிக்கிற படுபடு நீலம்லாம் வந்துடும் பாரு'' என்பாள் கோகிலா. ''அதுசரி! இதெல்லாம் செய்யிறியே...? உங்களவர் 'அப்ஜெக்ட்' பண்ணமாட்டாரா?''

''அவரே பிஸினஸ் பார்ட்னர்ஸை எண்டர் டெயின் பண்ண நாலு பேருக்குக் கிளாஸ்ல தண்ணியை ஊத்திக் குடுத்து இதெல்லாம் போட்டுக் காண்பிக்கச் சொல்றதுகூட உண்டுடி!''

"உன் துணிச்சல் வேற யாருக்கும் வராதுடீ! கோகிலா"

"நீ இப்பிடிப் புகழறே! அவராளுப் பம்பாய், கல்கத்தா டில்லியிலே பெரிய பெரிய கோடீசுவர பிஸினஸ் மேகனெட் களோட மனைவிமார்கள் கத்துக்கிட்டிருக்கிற 'டேக்டிஸ்'ல நூற்றுலே ஒரு மடங்குகூட நான் கத்துக்கலேன்னு குறைப் பட்டுக்கிருரு. அவங்க இன்னும் மாடர்ளு இன்னும் அப்டு டேட்டா இருக்காங்களாம். புருஷன் இல்லாதபோது தேடிவர்ர பிஸினஸ் பார்ட்னர்ஸுக்குக்கூட உள்ளே கூப்பிட்டு உட்கார வச்சு டிரிங்க்ஸ் ஸெர்வ் பண்ருங்களாம்"—

"ஆரம்ப நாளிலே சினிமாவிலே நாங்க இப்பிடி எத் தனையோ பண்ணியிருக்கோம்! ஒரு மிஷின் மாதிரிப் பணக் காரங்களை, முதலீடு செய்யிறவங்களை விநியோகஸ்தர்களைச் சந்தோஷப்படுத்தியிருக்கோம்..."

"இருக்கலாம். ஆனல் அது வேற, இது வேற, இதுவே வெறும் சரீர சந்தோஷம் மட்டும் பத்தாது. இண்டெலக்சுவல் ப்ளெஷர் முக்கியம், அவங்களோட அரசியல் முதல் 'குக்கெரி' வரை இங்கிலீஷ்ல சரளமா உரையாடணும். ஜோக் அடிக் கணும். அவங்க ஜோக்கடிக்கிறப்ப அது சுமாரான ஜோக்கா யிருந்தாலும் பிரமாதமா ரசிச்சுச் சிரிக்கணும். அவங்க ரொம்ப 'ஸ்மார்ட்'னு நாலுதடவை அவங்க கிட்டவே சொல்லிப் புகழணும். அவங்க நம்மைப் புகழறப்போ அதைச் சடங்கு மாதிரி ஏற்காமே முகம் சிவக்கப் புன்னகை புரிந்து வெட்கப் படறமாதிரி நடக்கணும்.

"ஹேவ் ஸம் மோர்..." என்று அதிகமாகப் பருகச் சொல்லி உபசரிக்கணும். நிறைய இங்கிதங்களைப் பயன்படுத்தி இங்கிதக் குறைவான காரியங்களைக் காதும் காதும் வச்சாப்ல சாதிச்சுக்கணும். ஒரு 'கால்கேர்ளுக்கும் புரொஃபஷனல் ஹோஸ்டெஸ்ஸுக்கும் இப்படி நிறைய வித்தியாசம்லாம் இருக்குடி சுலபா!"

இதைக் கேட்டுச் சுலபாவுக்குச் சுரீரென்றது. கோகிலா தன்னைக் 'கால்கேர்ள்' என்கிருளோ என்று பட்டது. ஆனல்

சிறிது நேரம் மேலும் பேசிப் பார்த்தபோது மனத்தில் கரவட மில்லாமல் ஒப்பிட்டுப் பேசியிருக்கிருள் என்று சுலபாவுக்கே புரிந்தது. கோகிலாவைப் பொறுத்தவரை அவளது திறமை களும் அழகும் கெட்டிக்காரத்தனமும் ஆயிரம் தொழில் முறை ஹோஸ்டஸ்களுக்கும் மேலானவை என்பது சுலபா வுக்குப் புரிந்துதான் இருந்தது. இவள் கணவனின் வியாபாரம் ஒன்றிற்குப் பத்தாக லாபம் தந்து கொழிப்பதற்குக் காரணம் இவளைப்போல் தங்கக் கம்பியாக இழுத்த இழுப்புக்கு வளைந்து கொடுக்கும் மனைவியாகத் தானிருக்க வேண்டும் என்று நம்பினாள் சுலபா.

நடிகை சுலபா ஒரு குணசித்திரம் என்று கோகிலா எண்ணிஞள். கோகிலாவே ஒரு குணசித்திரம் என்று சுலபா விக்குத் தோன்றியது. இருவருக்குமே தனிமனிதத் ஒழுக்கங் களில் நம்பிக்கை போயிருந்தது. இவர்களது அந்தரங்க நட்பு என்பது அந்த அடிப்படையில் உருவானது தான். இருவருக் குமே பெண்கள் நினைத்தால்—முயன்ருல் எதையும் சாதிக்க முடியும் என்ற அகம்பாவம் உள்ளூர இருந்தது.

'விபசாரிக்கும்' 'உபசரணைப் பெண்ணுக்கும்' வித்தியாச மிருப்பதாகக் கோகிலா சொன்ஞள். பச்சையான பதப் பிரயோகமும் நாசூக்கான பதப்பிரயோகமும்-தொனியில் வித்தியாசப் படலாமே ஒழிய அர்த்தத்தில் ஒரே மாதிரியான வைதான்; ஒரே விளைவை உடையவைதான்.

'முட்டாள் தனமாகப் படுகிறது' என்பதற்கும்'புத்திசாலித் தனமாகப் படவில்லை'—என்பதற்கும் ஒரே அர்த்தம்தான். ஆனல் 'முட்டாள் தனமாகப்படுகிறது'—என்பவன் யாரைப் பார்த்து அப்படிச் சொல்லுகிருேனே அவனுடைய விரோ தத்தை உடனே சம்பாதித்துக் கொள்கிருன். 'புத்திசாலித்தன மாகப் படவில்லை' — என்பவன் கேட்பவனேடு உடனடி விரோதத்தைத் தவிர்க்க முடிகிறது. கோகிலா புத்திசாலித்தன மாக எல்லாம் செய்தாள். அவள் கணவன் டாட்டா, பிர்லா

போலக் கோடீசுவரனாக உதவினாள். முதலில் இல்லா விட்டாலும் நாளடைவில் சுலபா கூடச் சில கோடிகளை இரகசியமாகக் கோகிலாவின் கணவனிடம் பினாமி பெயர்களில் முதலீடு செய்திருந்தாள். சிநேகிதமாகப் பிடித்து மெல்ல மெல்லச் சுலபாவைக் கணவனின் தொழில்களில் பணம் போட வைத்துவிட்டாள் கோகிலா.

மத்திய மாநில ஆளும் கட்சிகளுக்கும் ஆட்சியைப் பிடிப்பது போல முன்வரும் கட்சிகளுக்கும் தேர்தல் நிதி ரொக்கமாகத் தரவேண்டி வரும்போதெல்லாம் கோகிலாவின் கணவருக்குச் சுலபாதான் உதவ வேண்டியிருந்தது. தேர்தல் நிதிக்குக் கணக்கில் காட்டாத ரொக்கம் வேண்டும் என்று கழுத்தறுத்தால் எங்கேயிருந்து அவ்வளவு பெரிய தொகையை ஒரே நாளில் தேடுவது? சுலபாவிடம் தான் சுலபமாக அது கிடைத்தது. சுலபாவுக்குத் தெரியாமலே அவளுக்கு நட்பு வலை விரித்துத் தன் அந்தரங்கங்களை அவளுக்குக் கூறுவது போல் அவள் அந்தரங்கங்களை ஒன்றுவிடாமல் அறிந்து—அவசரப்பட்டு விடாமல் சில வருஷங்கள் வரை இந்தச் சிநேகிதத்தைப் பயன் கருதாத வெறும் நட்பாகவே தொடரும் படி பொறுத்துக் காத்திருந்து காலம் கனிந்தவுடன் பணமாகக் 'கேஷ்' பண்ணிக் கணவனுக்கு வாங்கிக் கொடுத்த சாதுரியம் கோகிலாவினுடையது.

கோகிலாவின் கணவன் உலகின் தலைசிறந்த ஒரே ஒரு ராஜதந்திரியாக—டிப்ளமேட்டாக கின்னஸ் புத்தகத்தில் இடம் பெற வேண்டிய அத்தனை சாமார்த்தியம் உள்ளவன், படு ஸ்மார்ட் ஆசாமி.

"நீ முதலில் உன் எதிராளியின் பூட்டப்பட்ட மனக் கதவுகளைத் திறப்பதற்காக உன் சொந்த இரகசியங்களையும் அந்தரங்கங்களையும் எதிராளியிடம் தாராளமாகத் திறந்து சொல்லத் தொடங்கு! உன் செயலால் எதிராளியின் மனக் கதவுகள், பூட்டுக்கள் எல்லாம் திறக்கப்படுகிறவரை தொடர்ந்து பேசு! எதிராளியின் மனக்கதவுகள், போதுமான

அளவு திறந்துவிட்டதை அறிந்ததும் உடனே உன் மனக் கதவுகளைப் பத்திரமாக மூடிப் பூட்டிவிட்டு எதிரே திறக்கப்பட்ட கதவுகளுக்குள்ளே நுழைந்து என்னென்னவற்றைக் கடத்திக் கொண்டு வர முடியுமென்று பார்! டெல் மோர் ஸீக்ரெட்ஸ் இன் ஆர்டர் டு கெட் மோர் ஸீக்ரெட்ஸ் ஃப்ரம் அதர்ஸ்''—என்பதுதான் கோகிலாவின் கணவன் அடிக்கடி கூறும் ராஜதந்திர தத்துவம். மனிதர்களையும், மனங்களையும் கவர்ந்து வசப்படுத்தும் உத்திகளில் அவன் நிபுணன், அவனுடைய திறமையான 'கோச்சிங்'கிலும் ஸ்பெஷல் கிளாஸ்"லும் சரிபாதிதான் கோகிலாவே தயாராகியிருந்தாள்.

''போரும்! யூ ஹாவ் டு லேர்ன் மோர்''—என்று அவளிடம் சொல்வான் அவன். சுலபமாக அவளது அனைத்து அந்தரங்கங்களோடும் தன் சிநேகிதியாகச் சிறைப்பிடிக்கக் கணவன் சொல்லிக் கொடுத்த வழிகளில்தான் முயன்று வெற்றி பெற்றிருந்தாள் கோகிலா. கோகிலாவின் கணவனைப் பற்றிச் சொல்லும்போது. ''நத்திங் இஸ் இம்பாஸிபிள் ஃபார் மிஸ்டர் கே. வி. லிங்கம்'' என்று பிஸினஸ் சர்க்கிளில் சொல்லுவார்கள், கொச்சையாகவும், பொறுமையாகவும் பேசும்போது, ''வைத்திலிங்கமா? அவன் பெரிய வல்லாள கண்டனுச்சே'' என்பார்கள். கே.வி.லிங்கம் என்று சுருக்கமாக அழைக்கப்பட்ட கே. வைத்திலிங்கத்தால் முடியாத காரியமே இல்லை. எந்த இக்கட்டான நிலையிலும் சிக்கலின் மறுநுனியைக் கண்டுபிடித்து அழகாகச் சரி செய்து சிக்கலைத் தீர்த்துக் கொடுத்துவிட அவனால் முடியும். தொழிலதிபர்களிடையே அவன் நிபுணனாகப் பெயர் பெற்றிருந்தான்.

ஒரு சமயம் டெல்லியில் ஒரு இண்டஸ்ட்ரியல் லைசென்ஸ் படுதாமதமாக இழுத்தடித்தது. இன்ஷ்யூரிங் அதாரிட்டி ஆபீஸர் எதிலும் வசப்படாமல் நழுவினான். தூண்டித் துளைத்து விசாரித்ததில் அந்த ஆபீஸர் 'கஜாரண்யசுவாமிகள்' என்ற மௌனச் சித்தரிடம் அளவு கடந்த பக்தியுள்ளவர் என்று தெரிந்தது. கஜாரண்ய சுவாமிகள் மடத்து நிர்வாகியைப்

பிடித்து அடுத்த மாசம் நடக்கிற விசேஷ பூஜைக்கு வந்து ஆசிபெற வேணும் என்று சுவாமிகளே அநுக்கிரகிப்பதாக ஒரு கடிதம் டெல்லி ஆபீசருக்கு அனுப்ப ஏற்பாடாயிற்று.

கஜாரண்யத்தில் நடந்த அந்த பூஜைக்கு டெல்லி ஆபீஸர் வந்தார். கோகிலாவும் அவள் கணவரும் கூடச் சென்றார்கள். தரிசனம் முடிந்ததும் மடத்து நிர்வாகி கோகிலாவையும் அவள் கணவரையும் டெல்லி ஆபீஸர் முன் அறிமுகம் செய்து, ''நம் சுவாமிக்குப் பரமபக்தர்கள்! இந்தத் தம்பதிகள் மேல் அவருக்குக் கொள்ளை விசுவாசம்'' என்றார். கோகிலாவின் கணவரது ஏற்பாடு இது. அடுத்த வாரமே நேரில் போய் லைசென்ஸ் பெற்று வர முடிந்து விட்டது. இதற்குத் திட்டமிட்டதே கோகிலாவின் கணவன்தான். மற்றொரு சமயம் ஒரு லைசென்ஸில் கையெழுத்திட வேண்டிய ஆபீஸருக்காகத் திருத்துறைப் பூண்டிக்கு அருகே உள்ள கிராமத்திலிருந்து ஒரு லாரி லோடு ஏட்டுச் சுவடிகளுடன் ஒரு நாடிஜோஸியனைய டெலலிக்கு அழைத்துப் போக வேண்டி வந்தது. அழைத்துப் போய் வேலையை முடித்துக் கொண்டு வந்தார்.

''டெல்லிங்கிறது ஒரு பெரிய ஹ்யூமன் மியூஸியம். எத்தனையோ மனங்களும் மன விகாரங்களும் அங்கு உண்டோ அத்தனைக்கும் பரிகாரங்கள் உண்டு'' என்பான் கோகிலாவின் கணவன்.

''சில பேர் பாட்டில் கேட்பான். சிலபேர் அழகைக் கேட்பான். சிலபேர் ஜோஸியம் கேட்பான். இன்னம் சிலபேர் 'ரெண்டு பாட்டில் தென்னமரக்குடி எண்ணெய் வேணுமே'ன்னு — ஏதாவது நாட்டு மருந்தாச் சொல்லி அனுப்புவான். ஸ்காட்ச் முதல் தென்னமரக்குடி எண்ணெய் வரை எல்லாமே காரியத்தைச் சாதிச்சுக் குடுக்கும். மலைக்கப் பிடாது. மிரளப்டாது. துணிஞ்சு ஈஸியா எடுத்துக்கிட்டு முயற்சி பண்ணினா எல்லாமே முடியும்'' என்று ஊர்திரும்பி வந்து கோகிலாவிடம் விவரித்துக் கொண்டிருப்பது அவள் கணவனின் வழக்கமான செயல்தான்.

''இது போருமே? மேலே மேலே வளரணும்னு என் நாயா அலையணும்'' என்று சில சமயம் கோகிலா அவனை நேருக்கு நேர் கேட்பாள்.

''எனக்கு இது போருது கோகி! என்னோடது மிருகப்பசி. அதாவது அனிமல் அப்பீடைட். என்னாலே முடியாததுன்னு எதுவும் இருக்கப்படாது'' என்பான் அவன். அந்த வெறிதான் அந்த வெற்றி வெறிதான் முடிவாக ஒரு தொத்து வியாதிபோல அவளையும் சேர்த்துப் பீடித்து விடும். சுலபாவின் இருபத்தெட்டாவது பிறந்தநாளை எப்படிக் கொண்டாடுவது என்று அவனுக்குத் தெரியவில்லை. பொதுவாக அவள் இருபத்தாறு, இருபத்தேழு, இருபத்தெட்டு என்று அடுத்தடுத்து வயது கூறியபோது கோகிலா கூட அதை நம்பவில்லை. வயதைக் குறைத்துக் கூறிக் கொள்வது நடிகைகளைப் பொறுத்தவரையில் ஒரு மரபாகவும் நாகரிகமாகவும் தகுதியாகவுமே கருதப்பட்டது. நடிகர்களில் கூடப் பலர் அப்படித்தான் செய்தார்கள். அதில் 'மார்க்கெட் ரகசியம்' இணைந்திருப்பதாகச் சொல்லப்பட்டது. அந்தரங்கமான இரண்டொருவரைத் தவிர யாரும் நடிகைகள் தங்கள் பிறந்த நாள் பற்றிச் சொல்லுவதே இல்லை. அதுவும் உண்மையைச் சொல்லுவதே இல்லை.

நடிகையைப் பெற்ற தாயால் கூட அவளது சரியான பிறந்த தேதியைச் சொல்ல முடியுமா என்பது கேள்விக்குறி தான்—என்று கூட வேடிக்கையாக ஒரு வசனம் சினிமா உலகில் உண்டு.

உயிர்த்தோழி கோகிலா சுலபாவிடம் எத்தனையோ உரிமைகளை எடுத்துக் கொண்டும் துணிந்து ஒருநாள்கூட, ''ஏண்டீ சுலபா! எனக்குத் தெரிந்தால் என்ன? உன் உண்மையான வயதே இருபத்தெட்டுத்தானா?''—என்று வினவக் கூட முயன்றதில்லை. ஒரு சினிமா நடிகையிடம் வயது விசாரிப்பது என்பது தயங்கி ஒதுங்க வேண்டிய 'சென்ஸிடிவ் இஷ்யூ' வாகக் கருதப்பட்டது.

'எனக்கு என்றும் பதினெட்டுத்தான்' என்பது போலவே பல நடிகைகள் நடந்துகொண்டார்கள். ஒரு நடிகை கற்பை இழப்பதை விட இளமையை இழப்பதையோ இழப்பாகக் காட்டிக் கொள்வதையோதான் அதிகம் வெறுத்தாள். அதாவது தமக்கு வயதானதாகக் காட்ட மனம் ஒப்பவில்லை.

சுலபாவின் வயது பற்றிக் கோகிலாவுக்கு மட்டுமின்றிக் கவிதாவுக்கும் கூடச் சந்தேகங்கள் உண்டு. இருவரும் எவ்வளவோ முயன்றும் சுலபாவின் உண்மை வயதைத் தெரிந்து கொள்ள முடியவில்லை. அதிகாரபூர்வமாகச் சுலபாவே அறிவித்த இருபத்தேழுதான் நம்பப்பட வேண்டியிருந்தது. இருபத்தெட்டு இப்போது வந்துகொண்டிருந்தது. பள்ளிச் சான்றிதழ்களை வைத்துத் துப்புத் துலக்க முடியாது. அவள் மழைக்குக்கூடப் பள்ளிகளில் ஒதுங்கியதில்லை, அதனால் சர்டிபிகேட்டுகளில் 'டேட் ஆஃப் பெர்த்' பார்க்க வழியில்லை. சுலபாவின் தாய் என்று அறிமுகப்படுத்தப்பட்ட நரசம்மாவுக்கும் வயது பற்றி எல்லாம் மூச்சுவிடக்கூடாது என்ற கடுமையான எச்சரிக்கை செய்யப்பட்டிருந்தது போலும். ஏனெனில் வயது பற்றி யாராவது பேச்சை ஆரம்பித்தாலே நரசம்மா வெதிர்விதிர்த்து நடுங்கினாள். இதனால் நம்பும்படியாக இல்லாவிட்டாலும் சுலபாவே அதிகாரபூர்வமாகச் சொல்லியிருந்த தேதியை வைத்துக் கணித்து அவளுடைய 28-வது பிறந்தநாள் இன்னும் சில வாரங்களில் வர இருப்பதைக் கோகிலா அநுமானித்தாள்.

ஆனால் நடிகை சுலபாவின் கற்பனைப் பிறந்தநாட்கள் கூட இரகசியமானவை. கோகிலாவுக்கு மட்டுமே தெரிந்தவை. ஒவ்வொரு பிறந்த நாளையும் ஒரு புதிய மகிழ்ச்சியும் அநுபவம் கிடைக்கிற மாதிரி எப்படிக் கொண்டாடுவது என்பதையே கோகிலாதான் திட்டமிடுவாள், பெரும்பாலும் அது சுலபாவுக்குப் பிடித்தமாதிரியே இருக்கும். கோகிலாவும் சுலபாவுமே அதில் சம்பந்தப்பட்டிருப்பார்கள். இதுகூட இரண்டு மூன்று வருடங்களாகத்தான். அதற்கு முன்போ கொண்டாட்டமே கிடையாது.

இருபத்து ஆருவது பிறந்தநாளை மேற்கு மலைத் தொடரில் நடுக்காட்டில் ஒரு கூடாரம் அமைத்துத் தங்கி விநோதமாகக் கொண்டாடினார்கள் அவர்கள். இருபத்து ஏழாவது பிறந்த நாளைக் காஷ்மீரில் ஸ்ரீநகரில் தால் ஏரியின் நீர்ப்பரப்பில் மிதக்கும் ஒரு படகு வீட்டில் கொண்டாடினார்கள். அந்த ஷிகாரா (படகுவீடு) ஒரு ஐந்து நட்சத்திர ஓட்டலின் வசதிகள் உள்ளதாயிருந்தது. கோகிலா மட்டுமே கூடப் புறப்பட்டுப் போயிருந்தாள்.

வரப்போகும் 28-வது (அதிகாரப்பூர்வமான) பிறந்த நாளை எப்படிக் கொண்டாடுவது என்று ஞாயிறன்று சுலபா வின் வீட்டில் டின்னருக்குப் போகும்போது அவளிடம் 'சஸ்பென்ஸாய்' அறிவிப்பதாக முடிவு செய்திருந்தாள் கோகிலா, சுலபா தன் வீட்டுக்கு முந்திய டின்னருக்கு வந்த போது தெரிவித்த சில ஆசைகளின் அடிப்படையில் கோகிலா அதை யோசித்து வைத்திருந்தாள். சுலபாவின் மனநிலையை— தவிப்பை — நீண்டநாள் 'காம்ப்ளெக்ஸ்'களைத் தெரிந்து கொண்டு அதற்கேற்பக் கோகிலா சிந்தித்து வைத்திருந் தாள். சுலபாவும் அதற்கிசைவாள் என்றே கோகிலாவுக்குத் தோன்றியது. இதில் சுலபாவை அவள் நம்பினாள். சுலபாவின் வீட்டுக்கு அந்த ஞாயிறன்று கோகிலா விருந்துக்கு வந்த போதே இரவு எட்டுமணி. முன்னெச்சரிக்கையாகக் கவிதாவை வீட்டுக்கு அனுப்பியிருந்தாள் சுலபா. நரசம்மா வீட்டில் இருந்தாள். மாடியில் சுலபாவின் ஏ.சி. செய்த தனியறையில் சந்திப்பு. "கீழே டைனிங் ஹாலில் பத்து மணிக்குச் சாப்பிட வருவோம்! இன்னின்ன அயிட்டங்கள் மெனு" என்று நரசம்மாவிடமும் வேலைக்காரியிடமும் உத்தரவு போட்டாயிற்று. எந்த ஃபோன் வந்தாலும் என்னைக் கூப்பிட்டுத் தொந்தரவு பண்ணாதே! நீயே பேசிக்கொள். யார் தேடிவந்தாலும் நீயே சமாளித்துச் சொல்லி அனுப்பிவிடு." என நரசம்மாவிடம் பொறுப்பை ஒப்படைத்திருந்தாள் சுலபா.

தானும் கோகிலாவும் சந்திக்கிற சந்திப்புக்கு எந்த இடையூறும் இருக்கக் கூடாதென்று திட்டமிட்டிருந்தாள்

சுலபா. அவளிடம் அதிகப் பணம் கொடுத்து வாங்கிய பிரெஞ்சு 'ஷாம்பைன்' சிக்கியிருந்தது. கோகிலாவுக்குப் படுகுஷி. அன்றிருந்த உற்சாகத்தில் கோகிலா சிகரெட்டும் பிடித்தாள். அவள் எவ்வளவோ வற்புறுத்தியும் சுலபா மறுத்து விட்டாள்.

"இது மட்டும் என்னாலே முடியாதுடீ! எனக்குச் சிகரெட்டுப் புகையின்னாலே பிடிக்காது! குமட்டிக்கிட்டு வரும். அந்தக் கிராதகன் குப்பையரெட்டி என்னை ஒரு விடுதிக்கு விலைபேசி வித்துட்டு ஓடினானே, அந்த விடுதியிலே வாயில் சிகரெட் நாற்றமும், பீடிவாடையுமுள்ள வேர்வைநெடியோடப் பல தடியன்கள் வருவாங்க. காசுக்காக அவங்களைச் சகிச்சுக்கிறப்ப எல்லாம், 'சிகரெட்குடிக்காத—புகையிலை போடாத—ஒரு கெட்டபழக்கமும் இல்லாத உடம்பு பூமாதிரி மணக்கிற ஒரு சின்ன வயசுச்சாமியாரையாவது நிம்மதியா அநுபவிச்சுட்டுச் சாகணும்'னு எனக்கு அப்பத் தோணும்டீ கோகிலா."

இதில் சுலபாவின் 'சப் கான்ஷியன்ஸ் மைண்ட்' புரிந்தது. அவள் உள் மனத்தில் என்ன அடங்கிக் கிடக்கிறது என்பது கோகிலாவுக்கு ஏற்கெனவே ஒரு தினுசாக விளங்கியிருந்தது. இப்போது அவளே பேசியதும் அது தெளிவாகவே புரிந்தது. இவள் படித்திருந்த பிராய்ட், யுங், ஆட்லர் முதலியவர்களின் கருத்துக்களைக் கொண்டு சுலபாவின் மனநிலையை விளங்கிக் கொள்ள முடிந்தது. அடக்கப்பட்ட ஒடுக்கப்பட்ட மனநிலைகள், காமம் சம்பந்தமான பழிவாங்கல் உணர்ச்சிகள் மிகவும் விநோதமானவை என்று படித்தும் கேள்விப்பட்டுமிருந்தாள் கோகிலா. அவற்றில் சில நம்பமுடியாதபடி இருந்தன. ஆனால் காரணகாரியங்களோடு சிந்திக்கத் தக்கவையாக இருந்தன. சுலபாவின் உள்ளடங்கிய ஆசை எங்கே எப்படி எதில் இருந்தது என்பதைக் கோகிலா மெல்ல மெல்லக் கண்டு பிடித்தாள். அநுமானித்தாள்.

பரிசுத்தமான கன்னிமை உடலும் அழகுத் தேவதையாகச் சினிமாவில் மின்னப் போகிறோம் என்ற ஆசையுமாகக் கிளம்பி வந்த அவளைப் பீடிவாடை குமட்டும் வாய் நாற்றமும், சிகரெட்

நெடி, சாராயவாடை, வியர்வை நாற்றமும் நிறைந்த மனிதர் களின் அழுக்கடைந்த முடை நாற்றமெடுத்த மலிவான படுக்கைகளில் தள்ளிவிடக் காரணமாயிருந்த குப்பைய ரெட்டியை அவள் இன்னும் மறக்கவில்லை.

ஆனால் இன்று அவள் இருக்கிற இடமே இண்டிமேட் ரெவ்லான் வாசனையில் மிதந்தது. இதற்கு அடிப்படைக் காரணமே அவள் குமட்டும் நாற்றங்களிலிருந்து மேலெழுந்து வந்தது தான்.

கோகிலா கேட்டாள்:

"உலகின் தலைசிறந்த இங்கிதமான ஆண்வேட்கை பற்றிய கவிதையை நம்மூர் ஆண்டாள்தான் பாடியிருக்கிறாள்... தெரியுமோ?"

"ஆண்டாள்ளை பக்தி மான்களிலே வைத்துப் பேசறது தானே வழக்கம்? நீ இப்படிச் சொன்னால் என்ன அர்த்தம்?"

"தான் விரும்புகிற ஆணுக்காகத் தொடுத்து வைத்த மாலையை முதலில் தன்மேல் சூட்டி அழகு பார்ப்பதும்—தான் விரும்புகிற ஆணின் அழகிய உதடுகள் கருப்பூரவாசனை உள்ளவையாயிருக்குமா? தாமரைப்பூ வாசனையுள்ளவையாயி ருக்குமா? இனிப்பாயிருக்குமா? என்றெல்லாம் அந்த வாயில் ஊதப்பட்ட சங்கிடம் விசாரிப்பதும்—காமத்தின் இங்கிதமான வெளிப்பாடல்லவா?"

"உன்னை மாதிரி— அதென்ன பிராடா— ஃப்ராய்டா என்னமோ அடிக்கடி ஒரு பேரு சொல்லுவியே— அவனைப் படிச்சிருக்கிற பொம்பிளைங்கள்ளாம் ஆண்டாளைப் பத்திப் பேசறதே பாவம்டீ கோகிலா..."

"கருப்பூரம் நாறுமோ, கமலப் பூ நாறுமோ திருப்பவளச் செவ்வாய் தான் தித்தித் திருக்குமோ... சொல்லாழி வெண் சங்கே"ன்னு பாடிருக்காளே ஆண்டாள் அதுக்கு வேற என்னடீ அர்த்தம்?"

''அர்த்தமோ, அனர்த்தமோ எல்லாம் வேண்டாம். ஆனு ரொம்ப அழகாப் பாடியிருக்காடீ! அந்த வரிகளைத் திருப்பி இப்பச் சொன்னால் கூட அதுதான் என் ஆசை டீ கோகிலா!''

''என்ன ஆசை...?''

''உடம்பில் பச்சைக் கருப்பூரம் மணக்கிற— வாயில் இதழ் களில் ஏலக்காய் வாசனையுள்ள சந்தன நிற மேனிச் சந்நியாசி ஒருத்தனையாவது நம் இஷ்டத்துக்கு அநுபவிச்சிட்டுச் சாகணும்.''

''இதில் ஏதோ பெரிய பழிவாங்கல் உணர்வு இருக்கிறது! எல்லா அழகிய பெண்களும் சந்நியாசிகளை— யாருமே அநு பவிக்காத அழகிய இளம் சந்நியாசிகளை வெறியோடு பார்க் கிறார்கள் என்பது ஒரு சைக்காலஜிடீ சுல்பா!''

''ஆண்களில் எத்தனை பணக் கொழுப்பும் உடல் கொழுப் பும் உள்ளவன் யாருமே தீண்டாத புதுப்பொண்ணு— இளசா வேணும்னு பயித்தியம் பிடிச்சு அலையிருங்க? உண்டா இல்லியா?''

''யாராலும் தொடப் படாத அழகுகள் முதலில் தன்னால் அநுபவிக்கப் படவேண்டுமென்று நினைக்கிற 'மேனியாக்'குகள் ஆண்களில் தான் உண்டு என்று நேற்றுவரை நினைத்திருந் தேன். பெண்களிலும் உண்டு என்று இப்போது புரிகிறதடீ சுல்பா...''

''இருந்தால் என்ன தப்பு? அப்படிப் புதுப் புது மலராக நாடித் தேனுண்ணும் உரிமை ஆண்களுக்கு மட்டுமே தனியுரி மையா என்ன?''

''நீ பெண்ணுரிமை இயக்கத்தில் இருக்க வேண்டியவள் சுல்பா!''

''எனக்கு இயக்கம் அது, இது, எல்லாம் புரியாது கோகிலா.. ஃப்ரிஜ்ஜிலிருந்து எடுப்போமே பாதம்கீர்— அந்த

நிறத்திற்குப் பளீரென்று இருக்கிற— பிறந்ததிலேயிருந்து பெண்களேயே அநுபவித்திராத ஓர் இளம் சந்நியாசியை அடை யும் துடிப்பு என்னுள் இடைவிடாமல் இருக்கிறது. இதைத் தவிர்க்கவோ தணிக்கவோ முடியவில்லை. இது தீயாக உள்ளே கனல்கிறது."

"அவன் உடம்பில் கர்ப்பூரம் மணக்க வேண்டும்! இதழ் களில் ஏலக்காய் சுவைக்க வேண்டும். தோள்களில் சந்தனம் கமகமக்க வேண்டும். அவன் சரீரம் தாமரைப் பூப் போல் இருக்க வேண்டும். இல்லையாடீ சுலபா?"

"நிச்சயமாக அப்படிச் சில இளம் சந்நியாஸிகளை நானே பார்த்து மோகித்திருக்கிறேன். முற்றிய தேங்காயின் நிறம் போல் கறையே இல்லாத தூய பல் வரிசையால் அவர்கள் சிரிக்கும் போது மோகத்தால் கிறங்கியிருக்கிறேன். ஆண்டாளைப் போல் பாடமுடிந்திருந்தால் என் உள்ளுணர்வு களைப் பாட்டாகவே அவர்களுக்கு நானும் எழுதி அனுப்பி யிருக்க முடியும்! என் தாபங்களும் தாகங்களும், அப்படியே மனத்துக்குள் நிற்கின்றன. பாட்டாக வரவில்லை! வேறுவித நெருப்பாய் உள்ளே குழைகிறது."

"எந்த அழகிய துறவியிடமாவது பாதபூஜை— காணிக்கை அது இது என்ற சாக்கில் நீ நெருங்கியிக்கிறாயா? ஜாடைமாடை யாகவாவது உன் அந்தரங்கத்தை நீ ஆசைப்படுகிற துறவிக்கு எட்ட விட்டிருக்கிறாயா?"

"என் ஆசைகள் ஒருதலைக் காமமாகவே உள்ளடங்கி விட்டன என்பதுதான் உண்மை. கணிசமாய் விரக்தியடையும் நிலைக்கு இந்த ஆசைகள் என்னைத் தள்ளியதுதான் உண்மை."

"நீ ஒரு விநோதமான பெண்ணடீ சுலபா."

"திருடனுக்குக் கன்னக்கோலை ஒளித்து வைக்க இடமில் லாதது போல் என்னுடைய இந்த அந்தரங்க வேட்கையை நான் யாரிடமும் இதுவரை வெளியிடக்கூட இல்லை. உன்

னிடம் தான் ஏற்கெனவே ஒரு தடவை ஜாடையாய்ச் சொன்னேன். இன்று வெட்கத்தை விட்டு வெளிப்படையாய்ச் சொல்லுகிறேன். சில பால சந்யாசிகளின் அருகே நிற்கிற போது அவர்கள் மேனியிலிருந்து துளசியும் சந்தனமும் மணப்பது போல் உணர்வேன். திருப்பதியில் போய் வெங்கடாசலபதிக்கு முன் கர்ப்பக் கிருகத்தில் தரிசனம் செய்கிற ஒவ்வொரு தடவையும் இப்படி வாசனையை உணர்ந்து என் நினைவுலகச் சந்நியாசியைத் தழுவியணைத்துக் கோவிலில் நினைக்கத் தகாததை எல்லாம் நினைத்துப் பரவசப் படுவேன். எவ்வளவோ முயன்றும் என்னால் இதைத் தவிர்க்க முடியவில்லையடீ கோகிலா.''

''உன்னை அடையக் கோடீசுவரன்கள் பலர் தவம் கிடக்கிறார்கள். நீயோ ஒரு சுத்தமான இதுவரை பிரம்மசரியம் கெடாத ஒரு புதுச் சாமியார் வேண்டும் என்கிறாய்!''

''அது என் ஆசையா அல்லது பழிவாங்கும் வேட்கையா என்று உடனே பிராய்டில் இறங்கிவிடாதே! என்னுள் ஒரு வெறியாகவே கனன்று வரும் விஷயம் இது.''

...இதற்குப் பதில் சொல்லாமல் சிறிது நேரம் யோசித்தாள் கோகிலா. சுலபாவின் முகத்தையே சிறிது நேரம் உற்றுப் பார்த்தாள், பின்பு நிதானமாக அவளை வினவினாள்.

''உன்னுடைய இருபத்தெட்டாவது பிறந்தநாள் வருகிறதே; அதற்குப் பரிசாக அன்றைய தினம் நீ விரும்புகிற வகையிலான களைபடாத—புத்தம் புதிய சாமியார் ஒருத்தரை உனக்கு நான் அளித்தால் நீ சந்தோஷப்படுவாயா?''

''அது எப்படியடீ சாத்தியம்?''

''இப்படியெல்லாம் கேள்வி கேட்காதே! உன் அந்தரங்க சிநேகிதியை நம்பு. உன்னுடைய இருபத்தெட்டாவது பிறந்த நாளில் உனக்குக் கர்ப்பூர வாசனையும், ஏலக்காய் நறுமணமும் சந்தன கமகமப்பும் கிடைக்கும்—''

# 16

ஷாம்பைன் பாட்டில் காலியாயிற்று. வழக்கம்போல் சுலபாதான் அதிக ரவுண்டு வந்திருந்தாள். கோகிலாவின் கட்டுப்பாடு சுலபாவிடம் எப்போதும் இருந்ததில்லை. அவள் எதிலுமே அளவாயிருப்பாள். சுலபாவால் அது முடிவதில்லை. எதையோ மறக்க முயல்கையில் அதிகம் குடிக்க நேர்ந்தது' எதையோ பேசத் துணிவதற்கான சூடு உடம்பில் இருக்க அதிகம் குடிக்க முடிந்தது. விருந்தளிப்பவளாக இருந்தாலும், விருந்து ஏற்பவளாக இருந்தாலும் இரண்டிலும் அதிகம் பருகுகிறவள் சுலபாவாகவே இருந்தாள்.

கீழே படியிறங்கிச் சாப்பாட்டு மேஜைக்குப் போகவே தடுமாறும் போலிருந்தது.

''சாப்பிட இன்னும் கொஞ்ச நேரமாகலாமா? உனக்கு ஒன்றும் அவசரமில்லியே? இன்னும் கொஞ்சநாழி பேசிட்டிருக்கலாமே?''—என்றாள் சுலபா.

கோகிலா சம்மதித்தாள், ''எனக்கு ஒண்ணும் அவசரமே இல்லே! டிரைவர் ப்ராப்ளமும் கிடையாது. நானே ஓட்டிக் கிட்டுப் போகப் போறேன், எங்க வீட்டுக்காரரும் ஊர்ல இல்லே, ஏதோ பிஸினஸ் விஷயமாகக் கல்கத்தா போயிருக் கிறார்,''

''நீ சொன்னதை நினைச்சால் கொஞ்சம் பதட்டமா இருக்கே? எப்பிடிடீ முடியும்? ஒரு சாமியாரை இங்கே கூப்பிட்டா வருவாங்களா? நாம தேடிக்கிட்டுப் போறதும்... நல்லா இருக்காது...''

''நீ இன்னும் அந்த விஷயத்திலேயே இருக்கியா சுலபா?''

''ஆசையைத் தூண்டிவிட்டிட்டு இப்படிக் கேள்வி கேட்டா என்னடீ அர்த்தம்? நான் கேட்கிறதுக்குப் பொறுமையாப்

பதில் சொல்லு...இல்லாட்டி எனக்கு ராத்திரி எல்லாம் தூக்கம் வராது..."

கோகிலா சிரித்தாள். கேட்டாள்!

"உன்னை நினைச்சு எத்தனையோ ஆம்பிளேங்க ராத்திரி எல்லாம் தூக்கமில்லாமத் தவிக்கிறாங்க! உனக்கு இன்னும் முகம் தெரியாத ஆம்பிளையை நினைச்சு நீயும்தான் தூக்க மில்லாமல் ஒருநாள் தவியேன்! அதிலே என்ன தப்பு."

"என் நிலையில் நீ இருந்தால்தான் என் தவிப்பு உனக்குப் புரியும்டீ கோகிலா."

"இன்னும் சில வாரங்கள் தான் இடையிலிருக்கின்றன. உன் தாபமோ, தாகமோ, தவிப்போ—நீ எப்படி விரும்பு கிறாயோ அதை எல்லாம்—ஒன்று சேர்த்து வைத்துக்கொள்! உன் இருபத்தெட்டாவது பிறந்த தினத்தன்று நீ விரும்பிய சுகத்தை உனக்குக் கிடைக்கச் செய்வது என் பொறுப்பு"—

"பொறுப்பு இருக்கட்டும்! அதில்தான் பல சிக்கல்கள் இருக்கின்றன. இங்கே நரசம்மா கவிதா யாருக்கும் இது பற்றித் தெரியக்கூடாது. இரகசியமாக இது நடக்கணும்.

"இதெல்லாம் படிச்சுப் படிச்சு நீ சொல்லணுமாடீ சுலபா? நான் பார்த்துக்கிறேன். எங்கிட்ட விட்டுடு. எனக்கு உன் தோது தெரியும்"—

தன் சிநேகிதியிடம் இந்த அந்தரங்கத்தைத் தான் பகிரங்கமாகப் பகிர்ந்து கொண்டு சொல்லியிருக்கக்கூடாதோ என்று சுலபா இப்போது இரண்டாவது எண்ணமாக யோசித்துத் தயங்கினாள்; இவள் ஒன்று கிடக்க ஒன்று செய்து அவமானமாகவோ, தலைக் குனிவாகவோ முடிந்துவிடக் கூடாதே என்று பயமாகவும் இருந்தது. அதே சமயம் கோகிலாவின் திறமையை ஒரேயடியாகக் குறைத்து மதிப்பிட வும் மனசு இடம் கொடுக்க வில்லை. வர்த்தகர்கள், சந்நியாசி கள், அரசியல்வாதிகள், எல்லாத் தரப்பிலும் கோகிலாவுக்கு நல்ல பரிச்சயம் உண்டு என்பதைச் சுலபா அறிவாள்.

ஏதாவது தாறுமாருக முடிந்து வெறும்வாயை மெல்லும் பத்திரிகைகளுக்குக் கிசுகிசு அவல் கிடைத்து, ''சாமியாருக்கு வலைவிரித்து நடிகை சுலபா ஏமாந்தாள்'' என்று கிண்டல் செய்தி ஆகிவிடக் கூடாதே என்றுதான் அவள் பயந்தாள். ஒவ்வொரு நிபந்தனையாகக் கோகிலா விடம் கூறினுள்.

''அந்த சந்நியாசிக்கு நான் யாரென்றே தெரிய வேண்டிய அவசியமில்லை கோகிலா! கூடியவரை லௌகீக உலகின் தொடர்புகளே அற்ற நைஷ்டிக பிரம்மசாரியாயிருந்தால் நல்லது! என்புகழும் பழியும் அவருக்குத் தெரிய வேண்டிய தில்லை.''

''சினிமாவுக்கும் தியேட்டருக்கும் போகாத சந்நியாசி என்றே வைத்துக் கொண்டாலும் கூட மூலைமுடுக்கு எல்லாம் வீடியோ உள்ள இந்த நாளில் உன்னை யாரென்று தெரியாத சாமியாரா இல்லையா என்று கண்டு பிடிப்பது சிரமம்.''

''தெரிந்தால் என்னை வெறுத்து ஒதுக்கி விடலாம். சே. என்று கேவலமாக நினைக்கலாம். எச்சிற்பண்டம் என ஒதுக்க நினைக்கலாம்! ஒரு சாமியாருக்கு என் அழகு மட்டும் போதாதே?''

''பழங்களில் அணிற்கடித்த எச்சில் ரொம்ப விசேஷம் என்று சிலர் விரும்பிச் சாப்பிடுவார்கள்! நீ அப்படி ருசியான வள் சுலபா.''

''பழங்களுக்கு அது சரியாயிருக்கலாம், மனிதர்களுக்கு ஒத்துவராது. அணில்கடித்த பழமும் நாமும் ஒன்ருகிவிட முடியாது கோகிலா''

''உனக்குத் தெரியாது சுலபா! சில பேருக்கு அணில் கடித்த பழங்கள் தான் ரொம்பப் பிடிக்கும்.''

மீண்டும் திரும்பத் திரும்பத் தோழி கோகிலா இப்படியே ஒப்பிட்டது சுலபாவுக்குப் பிடிக்கவில்லை. குற்றமுள்ள மனசு குறுகுறுப்பது போல் உள்ளே குறுகுறுத்தாலும் தன்னைக்

குத்திக் காட்டும் உள் நோக்குடன் கோகிலா பேசியிருக்க மாட்டாள் என்று சுலபா நன்றாக அறிந்திருந்தாள்.

எந்த ஓர் இளம் பெண்ணும் இன்னோர் இளம் பெண்ணுக்குச் செய்து தரக்கூடும் என்று கற்பனையில் கூட எதிர்பார்க்க முடியாத உதவியைத் தனக்கு வலுவில் முன் வந்து செய்யத் துணிந்திருக்கும் கோகிலாவின் செயலில் குறை காண முயலக் கூடாது என்று தன் மனத்தையே அப்போது சுலபா கடிந்து கொண்டாள். மேனியில் பொன் நிறம் ஒளிரும் சந்தனமும் பச்சைக் கருப்பூரமும் மணக்கக் கூடிய — ஊனைச் சதையில் லாத செதுக்கி எடுத்தது போல வைரம் பாய்ந்த ஒருவசீகர மான பிரம்மசாரியை — பெண் என்றால் என்ன என்று முதல் முதலாக இவள் மூலமே அறியப் போகிற ஒரு பிரம்மசாரியை —அந்த அநுபவத்தின் எல்லா த்ரில்களுடனும், கிக்குகளுடனும் அடையப் போகிறோம் என்ற உணர்வு நினைக்கும் போதே சுலபாவைப் புல்லரிக்கச் செய்தது. கடந்த காலத்தில் அழகற்ற அருவருப்பான வியர்வையும், பீடி, சிகரெட்டும் நாறுகிற குரூரமான பல ஆண் உடம்புகளை வியாபார ரீதியாகத் தான் மகிழாமல மிஷினைபோல அவள் மகிழச் செய்திருந்தாள். அதன் விளைவு இன்று நாற்றமும், வியர்வையுமே அவளுக்குப் பிடிக்கவில்லை. சுத்தமும நறுமணமுமே அவளுடைய இன்றைய இலட்சியங்களாயிருந்தன. அழுக்கடைந்து கசங்கிய ரூபாய் நோட்டுக்களை வைக்க வேறு இடமின்றி ஜாக்கெட்டுக்குள்ளும் இடுப்பிலும் வாங்கிச் சொருகி மேலும் அழுக்கடையச் செய்த பழைய நாட்கள் குமட்டிய காரணத்தால் இன்று புத்தம் புதுச் சலவை நோட்டுக்களை மட்டுமே அவள் கைகளால் தீண்டினாள்.

பரிசுத்தத்தை அநுபவித்து அழுக்குகளைப் பழிவாங்க விரும்பினாள். நறுமணங்களை நுகர்ந்து துர் நாற்றங்களை மறக்க விரும்பினாள். வீட்டில் ஏ.சி. அறைகள் மணமாக இருக்கக் கூடப் பம்பாயிலிருந்து வாசனையை இதமாக ஸ்பிரே செய்யும் ஒரு சிறிய அழகான எலெக்ட்ரிக் கைமிஷின் வாங்கி வைத்திருந்தாள்.

''சுலபா என்றால் சுகமான நறுமணம். சுலபா என்றால் சுத்தம். சுலபா என்றால் நறுவிசான துல்லியமான பழக்க வழக்கங்கள். சுலபா என்றால் கவர்ச்சி'' என்று பேரெடுத்திருந்தாள் அவள். இதை எல்லாம் கூர்ந்து கவனித்திருந்த தயாரிப்பாளர்கள் அவளுக்கு ரொக்கம் கொண்டு வந்தால் கூட உயர்ரக செண்ட் தெளித்துப் புத்தம் புதிய நோட்டுக் கட்டுக்களாகக் கொண்டு வந்து கொடுக்கப் பழகியிருந்தனர்.

ஸெட்டில் காபி, குளிர்பானம், பாதாம்கீர் கொண்டு வருகிற போது—கொண்டு வருகிற பையன், அவன் உடை, கொண்டுவருகிற கிளாஸ் எல்லாமே சுத்தமாயிருக்க வேண்டும். இவளைத் திருப்திப்படுத்த என்றே எஸ். பி. எஸ் பாலக்காட்டிலிருந்து நல்ல நிற முள்ள சுத்தமான பழக்க வழக்கமுள்ள ஒரு நாயர்ப்பையனை வேலைக்கு அமர்த்தியிருந்தார். ''அவங்களுக்குப் பசங்க நீட்டா ஜம்முனு இருக்கணும்ப்பா! இல்லாட்டி கிளாஸை அப்படியே மூஞ்சியிலே கடாசிடுவாங்க''—என்று புரொடக்ஷன் மேனேஜரிடம் அடிக்கடி எஸ். பி. எஸ். சுலபாவுக்காக அக்கறை எடுத்துக் கொண்டு பேசுவார். ஒரு தேவதையை வழிபடுவது போல் தயாரிப்பாளர்கள் அவளை வழிபட்டனர். அவளைப் பிரார்த்தித்தனர். வரம் வேண்டினர், மன்றாடினர். நைவேத்தியம் செய்தனர்.

அரைத்தச் சந்தன நிறம்தான் அவளுக்கு மிகவும் பிடித்த நிறம். வெளிர் நிறங்களில் தங்கமும் பாதாம் கீரின் வண்ணமும் அவளுக்கு மிக மிகப் பிடித்தமானவை. முதல் முதலாக அவளை ஏமாற்றிவிட்டு ஓடிய குப்பைய ரெட்டிகூட அந்த நிறம்தான். பாதாம்கீரைக் கையில் பிடித்தபடியே சுலபா அதன் நிறத்தில் என்னென்னவோ ஞாபகங்கள் வந்து அப்படியே இலயித்துப்போய் உட்கார்ந்து விடுவாள் சில சமயங்களில். பருகி முடித்துவிட்டால் அந்த நிறத்தைப் பார்த்து இரசிக்க முடியாதே என்று அப்படியே இலயித்துப் போய்ப் பிரமை பிடித்தவள்போல அதை நோக்கியபடி அவள் உட்கார்ந்துவிடுகிற மர்மத்தை நரசம்மாவினால்கூடக் கண்டு

பிடிக்க முடியவில்லை. "அம்மாவுக்குப் பாதாம்கீர்ணு ரொம்பப் பிடிக்கும்"—என்று மட்டும் வேலையாட்கள் ஸ்டுடியோ பணியாட்கள் அதைப் புரிந்துகொண்டிருந்தனர். கலப்படமில்லாத ஸ்வர்ணத் தாம்பாளத்தில் அங்கங்கே அடர்த்தியாக அரைக் கீரை விதையைத் தூவினாற்போல் மயிரடர்ந்த இளம் துறவிகளின் பரந்த மார்பும். புஜங்களும் அவள் உள்ளத்தைக் கிறங்கச் செய்பவை. ஒருநாள் நல்ல போதையில் தன் அந்தரங்கத்தில் சிறிதும் மறைக்காமல் "அப்படித் தங்கத் தாம்பாளம் போன்ற மார்பையும் முற்றிய மூங்கில் போல ஒளிமின்னும் புஜங்களையும் பிளேட்டில் இருக்கிற பாதாம் அல்வாவைச் சாப்பிடுவது போல் சாப்பிட வேண்டும்டீ கோகிலா" என்று சுலபா வர்ணித்த அடங்காத வெறியைக் கேட்டுக் கோகிலா அவளைக் கிண்டல்கூடச் செய்திருக்கிறாள்,

"வர வர நீ கன்னி பால்ஸ்-மாதிரிப் பேச ஆரம்பிச்சிட்டேடீ சுலபா!"—

"கன்னி பால்ஸ் ... அப்டீன்னா என்னடி அர்த்தம் கோகிலா..."

"நரமாமிச பட்சிணிகள்னு அர்த்தம்..."

"நரர்கள்னா அதுலே ஆண் பொண் எல்லாமே அடங்குமே, நான் சொல்றது அழகிய சுந்தரமான தேஜஸ் நிறைந்த ஆண்களை மட்டும் தானடீ!"

"நீ தேர்ந்தெடுத்த நரமாமுச பட்சிணி! உனக்கு அதுவே சாய்ஸ் இருக்கு. 'கஜாரண்ய சுவாமி' மாதிரி யாரையும் மோகிக்கச் செய்கிற ஓர் அழகிய இளம் சாமியார் உன் போன்றவர்களிடம் தனியே சிக்கினால் என்ன ஆவாரோ? பாவம்!"

மன்மதனைப் போல் அழகுள்ள கஜாரண்ய சுவாமிகளின் பெயரைக் கோகிலா சொன்னவுடன் தேஜஸ்வியான அந்த அழகரின் முகமும் பரந்த இறுகிய மார்பும்

புஜங்களும் நினைவு வந்து அவள் அப்படியே சொக்கிப் போய்ச் சித்தப் பிரமை பிடித்தவள் போல அமர்ந்து விட்டாள்.

''சந்தேகமே இல்லை! நீ ஒரு மேனியாக் தான்.''

''மேனியாக்னு...?''

சுலபாவுக்கு அந்த வார்த்தையைக் கோகிலா விளக்கி விவரித்தாள்.

உடன் சுலபாவிடமிருந்து பதில் வந்தது.

''இந்த கஜாரண்ய சுவாமிகள் மாதிரித் தேஜஸ்வியான சுந்தரபுருஷனை அனுபவிக்க முடியும்னு - அனுபவிச்சிட்டு அதுக்கு விலையா என் சொத்துச்சுகம் எல்லாத்தையும் ஈடு கொடுக்கக்கூட நான் தயார்.''

'''நீ நரகத்துக்குத் தான் போவாய்' என்று அவரது பக்தர்கள் உன்னைச் சபிப்பார்கள்.''

''அந்தப் பேரழகை ஒருமுறை அனுபவிப்பதே சுவர்க்க மாக இருக்கும். அப்படி அனுபவம் கிடைத்துவிட்டால் அதன் பிறகு நரகத்துக்குப் போகக் கூட நான் தயார்.''

''எல்லா ஆசாபாசங்களையும் மோக முனைப்புக்களையும் ஜெயித்துவிட்டுச் சிரிக்கிற ஒரு துறவியின் மேல் நீ மோகம் கொள்கிறாய்!''

''பலரை ஜெயித்தவனை ஜெயிப்பது தான் சுகம்! தோற்ற வர்களை ஜெயிப்பதில் ஜெயம் எங்கே இருக்கிறது?''

''ஸோ எல்லாவற்றையும் — எல்லாரையும் வென்ற ஒருவன் உனக்குத் தோற்க வேண்டும்! ரொம்பத்தான் பேராசைக்காரிடீ நீ! உன் பேராசை விநோதமானதுதான்.''

எப்போதோ நடந்திருந்த இந்தப் பழைய உரையாடலி லிருந்தும் இதில் உதாரணமாக இடம்பெற்ற கஜாரண்ய சுவாமி என்ற பேரழகரின் உருவத்திலிருந்தும் சுலபாவின்

கனவிலுள்ள பரிசுத்தமான ஆணழகு எது என்பதைக் கோகிலா அநுமானமாகவும், பேரளவு சரியாகவும் புரிந்து கொண்டிருந்தாள். இது அவளுக்கு நினைவிருந்தது.

கோகிலா பார்ட்டி முடிந்து வீடு திரும்பும் போது இரவு ஒருமணி. "கவலைப்படாதே! உன்னைத் தயாராக்கிக் கொள்! உன் இருபத்தெட்டாவது பிறந்த நாளன்று கஜாரண்ய யோகி மாதிரி ஒருவரிடம் உன்னைத் தனியே கொண்டு போய் விட்டு விட்டுத் திரும்பி விடுவேன் என்று நம்பிக்கையாக இரு! உனக்கு அப்படி ஒரு தனிமையில் அப்படி ஒரு பேரழகுடன் பன்னிரண்டு மணி நேரம் தங்க ஏற்பாடு செய்து விடுகிறேன். அதன் பின் உன் சாமர்த்தியம், பாதாம் அல்வாவை பிளேட்டில் முன்னால் வைத்து விடுகிறேன். சாப்பிடுவதும், ருசிப்பதும் ருசிக்காததும், பயன்படுத்திக் கொள்வதும் பயன்படுத்தாமல் போவதும் எல்லாம் உன் பாடு, விஷ் யூ குட்லக்" என்று உற்சாகமாக வாக்குறுதி யளித்து விடை பெற்ற கோகிலாவிடம் விவரமாக எல்லாம் சொல்லுமாறு தூண்டித் துருவினாள் சுலபா. "உரிய சமயத்தில் எங்கே எப்படி யார் என்பதெல்லாம் கூறப்படும்" என்று பூடகமாகப் பதில் கூறிவிட்டுப் போய்ச் சேர்ந்தாள் கோகிலா. சுலபாவின் இருபத்தெட்டாவது பிறந்த நாள் வர இன்னும் மூன்றே நாட்கள் தான் இருந்தன. அது ஒரு வெள்ளிக்கிழமையாகப் பார்த்து வந்தது. பிறந்தநாள் என்பதே கோகிலாவுக்கு மட்டும் தான் தெரிவிக்கப் பட்டிருந்தது.

"சொந்த விஷயமாகக் கோகிலாவும் நானும் சில காரியங்கள் கவனிக்க வேண்டியிருக்கு. வர்ர வியாழன், வெள்ளி, சனி மூணு நாளும் ஃபரீயா வை" என்று கவிதாவிடம் சொல்லி விட்டாள் சுலபா, அவளும் குறித்துக் கொண்டாயிற்று.

தான் பிறந்த பிறவிலேயே மிச்சமிருக்கும் ஒரே ஆனந்தம் என்று சுலபா நினைத்த வெள்ளிக்கு முன்பாக ஒரு நாளும், பின்பாக ஒரு நாளும் சேர்த்தே சொல்லியிருந்தாள்,

செவ்வாய்க்கிழமை காலையில் கோகிலா ஃபோன் செய்தாள்:

''சுலபா! உன் விஷயமாக இன்று போகிறேன். அநேக மாக வெற்றியோடு திரும்புவேன்.''

''எங்கேயடீ போகிறாய்? எப்போது திரும்புவாய்?''

''எங்கே என்பதெல்லாம் வந்து சொல்கிறேன். அநேகமாக இன்று மாலை அல்லது இரவில் திரும்புவேன். உன்னுடைய வர்ணனைப்படி சாமுத்ரிகா லட்சணமுள்ள ஓர் இளம் சாமியா ரைக் கண்டு பிடிச்சாச்சு. அவர் உன்னைச் சந்திக்குப்படி செய்யணும். அதுக்காகத்தான் போய்க்கிட்டிருக்கேன்.''

''ரொம்ப தூரமோடீ கோகிலா?''

''கொஞ்சம் தூரம்தான்: வந்து சொல்றேன் எல்லாம்.''

கோகிலாவின் பக்கமாக ஃபோன் வைக்கப்பட்டு விட்டது. இவளை மேலும் தொண தொணக்க விடாமல் ஃபோனை அவளே வைத்து விட்டாள். இவளுக்கானால் இங்கே மனசும் உடம்பும் நிலை கொள்ளவில்லை. பரபரத்தன. உடனே ஆகாயத்தில் பறக்க வேண்டும் போலவும், கடலில் முக்குளிக்க வேண்டும் போலவும் தோன்றியது சுற்றி இருந்த எல்லாமும், எல்லாரும் சின்னதாய்க் குறுகிப் போனாற் போலிருந்தது. தன் அழகைக் கண்ணாடி முன் நின்று பார்த்துக் கொண்டாள். நடிப்பதற்காக வசனம் பேசித் தன் முகபாவத்தைத் தானே சரிபார்த்துப் பழகும் விசேஷ முழு நீள பெல்ஜியம் கண்ணாடி அது. உணர்ச்சிகளைத் துல்லியமாகப் பிரதிபலிக்கும்; குளியலறையிலும் ஒரு பெரிய கண்ணாடி இருந்தது. குளிக்கும் போது பசு வெண்ணெயைத் திரட்டித் திரட்டிச் செய்தது போன்ற மிருதுவான தன் தந்த நிற முழு உடம்பை—அந்நிய மான அந்த யாரோ ஒரு சந்நியாசியின் பார்வையில் அது எப்படித் தோன்றும். எவ்வாறு படும் என்கிற எண்ணத்தோடு பார்ப்பதை அவளால் அன்று தவிர்க்கமுடியவில்லை. அணிந்து புனைந்து அலங்காரங்களுடன் அந்தப் புதியவருக்கு எப்படித்

தோற்றமளிப்போம் என்பதை வெளியே உள்ள கண்ணாடியில் பார்த்தாயிற்று. திருப்திகரமான விடையும் பெற்றாயிற்று. அணியாமல், புனையாமல் — அணிகளையும், புனைவுகளையும் கழற்றிய 'கைபுனைந்தியற்றாக்'கவின் பெறுவனப்பில் எப்படித் தெரிவோம் என்றதை இங்கே குளியலறையிலே பார்த்தா யிற்று. உறுதி செய்து கொண்டும் ஆயிற்று.

இப்படி எல்லாம் தன்னை அந்நியமாக ஆக்கி அந்நியனு டைய பார்வையிலே எப்படி அழகாயிருப்போம் என்று சமீப காலமாக அவள் பார்த்துக் கொண்டதே இல்லை. இப்படி யாரையும் புதிதாகக் கவர வேண்டிய அவசியமே அவளுக்கு ஏற்பட்டதில்லை. நீண்ட காலத்துக்குப் பின் இந்த 'ரிஹர்சல்' அவளுக்குத் தேவைப்பட்டது. அநுராக சௌந்தரிய ஒத்தி கையை இன்று தனக்குத் தானே அவள் செய்து பார்த்துக் கொண்டாள்.

ஒரு படை எடுப்புக்கு முன் படைகளையும், ஆயுதங்களை யும் சரிபார்க்கிற படைத்தலைவனுடைய நிலையில் இன்று இவள் இருந்தாள். புலன்களிலும், ருசிகளிலும் அவ்வப் போது தோற்கும் சராசரி மனிதர்களுக்கான படை எடுப்பில்லை இது. புலன்களை வென்றவர்களைத் தோல்விக்கு அழைக்கும் புதிய படை எடுப்பு இது. கோகிலாவிடம் சுலபாவே சொல்லிய யது போல—'இது தோற்றவர்களை வெல்லும் முயற்சியில்லை, வென்றவர்களைத் தோற்கச் செய்யும் முயற்சி. ஆகவே அவள் தன் அழகு என்ற இயற்கை அரணையும் புனைவுகள் என்ற சாதனங்களையும் சரிபார்த்து வைத்துக் கொண்டாள். எல்லாப் படைகளையும் வெல்வதற்கு ஆயத்தப்படுத்தி வைத்துக் கொண்டாள்.

'காதலில்...காமத்தில், சந்தோஷம் அடைய வேண்டு மானால் நன்றாகத் தோற்கவேண்டியிருக்கும்'—என்று கோகிலா சொல்லியிருந்தது நினைவு வந்தது.

கோகிலா காதலிலும் பக்தியிலும் எந்தத் தரப்பில் ஆணவமும் தன் முனைப்பும் விஞ்சி நிற்கிறதோ அந்தத் தரப்புத்

தோற்றுவிடுகிறது என்கிருள். தோற்கிற வெற்றி எது? வெல்கிற தோல்வி எது? என்பது பற்றிக் கோகிலாவின் விளக்கங்கள் சுலபாவுக்குப் புதுமையாகவும் புரியாதவையாக வும் இருந்தன. வருகிற வெள்ளிக்கிழமையன்று தானே வெல்லப்போவது போல் முயன்ருள் சுலபா. ஆனுல் தோற்கப் போவது போல் உணர்ந்தாள். உணர்வும் செயலும் முரண் பட்டன. ஒரு வேளை இந்த விவகாரத்தில் கோகிலா சொல்லு வது போல் தோற்பது தான் வெற்றியோ என்று எண்ணவும் தோன்றியது இவளுக்கு.

பிற்பகல் கழிந்தது. மாலையும் வந்தது. இரவு எட்டு மணிக்குத்தான் கோகிலாவிடமிருந்து அவள் எதிர்பார்த்த டெலிஃபோன் கால் வந்தது.

''என்னடீ ஆச்சு?''

''நேரிலே இதோ அங்கே புறப்பட்டு வந்துக்கிட்டே இருக்கேன்.''

''காயா? பழமா?''

''ஏறக்குறையப் பழம்தான்...நேரே வந்து எல்லாம் விவரமாச் சொல்றேன்''—

இருபது நிமிஷத்தில் கோகிலா நேரில் வந்து சேர்ந்தாள். சுலபா கேட்காமல் அவளே திட்டத்தை விவரித்தாள். வேக மாக அடித்துக் கொள்ளும் நெஞ்சுடன் ஆவல் பரபரக்கும் மனநிலையொடு செவிமடுத்தாள் சுலபா.

''காரியத்தை ஏறக்குறைய நமக்குச் சாதகமான எல்லை வரை கொண்டுவந்திருக்கேன்; மத்தது உன் சாமர்த்தியம்''—

''அப்பிடீன்னு...? கொஞ்சம் விவரமாத்தான் சொல்லேன். எனக்குப் புரியலியே?''

''விவரமாச் சொல்றேன். குறுக்கே பேசாமக் கேட்டுக்கோ! வெள்ளிக் கிழமை காலம்பர நாம ரெண்டு

பேரும் எங்க ஏ. சி. பென்ஸ் காரில் திருப்பதி போருேம். திருப்பதியிலே சகஸ்ரகலசாபிஷேகம் பண்ணிப் பெருமாளைத் தரிசனம் பண்ணிட்டுப் பகல் மூணு மணிவரை அங்கே ஒய்வு எடுக்கிருேம். அப்புறம் அங்கிருந்து மதனபள்ளி போற ரோட்டிலே ரிஷி வேலிக்கு முன்னுடி இருக்கிற 'திவ்ய சேவாசிரமம்' என்கிற ஆசிரமத்துக்குப் போகிருேம். அந்த ஆசிரமம் ஒரு காட்டாற்றின் கரையில் முந்நூறு ஏக்கர் பரப்புள்ள பெரிய மாந்தோப்புக்குள் குளு குளு என்று அமைந்திருக்கிறது. குளு குளு என்றிருக்கும் அதன் சூழ்நிலையே மிகவும் ரம்மியமானது. அதிலே இளம் வயதில் பலவிதமாகச் சீரழிந்து வாழ்வை இழந்து வழி தவறிய பெண்களுக்கு மறுவாழ்வு அளித்துக் கல்வி தொழிற்பயிற்சி எல்லாம் தரும் நிலையங்கள் உள்ளன. இன்னொரு பகுதியில் அதை நடத்தும் திவ்யானந்தர் என்ற அழகிய துறவியின் ஆசிரமம் ஆற்றங்கரையில் ஒதுக்குப்புறமாக இருக்கிறது. இந்தத் திவ்யானந்தர் பேரழகன். உன் கனவுகளில் நிரம்பியிருக்கும் எல்லா செளந்தரியங்களும் நிறைந்த சுந்தரபுருஷன். தூய பல் வரிசை மின்ன வெண்முத்துப் போல் சிரிக்கிருர். கொழுந்துவிட்டு எரியும் அக்னிபோல மேனிநிறம். பக்கத்தில் நின்ருல் வா வா என்று இழுக்கும் மல்லிகைப்பூ மணக்கிற சரீரம். ஒளி உமிழும் காந்தக் கண்கள். ஆனல் ஒரே ஒரு விஷயம் மட்டும் என்னல் ஏற்பாடு செய்ய முடியவில்லை. வழிதவறுகிற இளம் பெண்களுக்குப் புத்திமதி கூறும் அவரிடம் உன்னைக் கொண்டுபோய் நெருங்க வைப்பது சுலபம். வேறு விவரங்களை ஒரு துறவியிடம் பச்சையாகப் பேரம் பேசி முடிப்பது சிரமம் என்பதால், ''என் சிநேகிதி ஒருத்தி உங்கள் புத்திமதிகளைக் கேட்க விரும்புகிருள் சுவாமீ! நிரம்ப வசதியுள்ள பணக்காரி— இந்த ஆசிரமத்துக்கு லட்ச லட்சமாக உதவக்கூட அவளால் முடியும். பகலில் இங்கு வரவும் உங்களிடம் பேசவும் கூச்சப் படுகிருள். தயங்குகிருள். உங்களுடன் தங்கிப் பேசினல் அவள் திருந்தி மனம் மாறக் கூடும். வெள்ளியன்று மாலை அவளை இங்கே அழைத்து வருகிறேன். மறுநாள் அதிகாலையில் நானே திரும்ப வந்து

அவளைக் கூட்டிக் கொண்டு போய் விடுவேன். உங்கள் அருட் பார்வையில் அவள் திருந்தி விடுவாள் என்பது என் நம்பிக்கை'' என்றேன்.

நான் கூறியதைக் கேட்டு அவர் சிரித்தார். அந்தச் சிரிப் பில் நானே மயங்கிச் சொக்கிப் போனேன்.

''அவள் பகலில் வந்தால் என்ன? இதில் ஒளிவு மறைவு எதற்கு?'' என்று கேட்டார்.

''பெரிய வசதியுள்ள குடும்பத்து யுவதி! பகலில் வழுக்கி விழுந்தோரைத் திருத்தி வாழ்வு தரும் இந்த ஆசிரமத்திற்குத் தேடிவரக் கூச்சப் படுகிறாள் சுவாமீ! உங்களைப் போல் ஒரு மகானுக்கு அருள்புரிய எந்த நேரமானால் என்ன? நீங்கள்தான் பெரிய மனசு பண்ணி அவளைத் திருத்த வேணும்'' என்றேன். வேண்டியபடியே ''சரி! அழைத்துவா!''—என்றார் திவ்யானந் தர்.''

சுலபா கோபமாகக் குறுக்கிட்டாள்.

''மொட்டைத் தாதன் குட்டையில் விழுந்தான் என்பது போல இப்படி ஏற்பாடு பண்ணி விட்டு வந்திருக்கியேடீ கோகிலா! விடிய விடிய உட்கார்த்தி எனக்கு உபதேசம் பண்ணிக் காலையில் விபூதி குங்குமம் கொடுத்துத் திருப்பி அனுப்பிவிடப் போகிறார்.''

''அதுவரை உன் சாமர்த்தியங்கள் எங்கேடி போயிருக்கும்? பிறந்ததிலிருந்து புலன்களை அடக்கிய ஓர் இளம் வயதுச் சாமி யாருடன் கிறங்க அடிக்கும் போதை யூட்டுகிற பேரழகுள்ள நீ ஓரிரவு தனியே விடப்படப் போகிறாய். வேறு யாரும் உங்கள் இருவரைத் தவிர அங்கு இருக்கப் போவதில்லை. பன்னிரண்டு மணி நேரம் உபதேசம் கேட்கிற அளவு படுமந்தமானவளாடீ நீ?''

''என்னை என்ன செய்யச் சொல்கிறாய்?''

"சொல்லித் தெரிவதில்லை மன்மதக் கலை! தண்ணீரில் தூக்கிப் போட்டபின் இப்படித்தான் நீந்தணும்னு மீன் குஞ்சுக்கு யாரும் சொல்லித்தர மாட்டார்கள் சுலபா."

"பாதிக் கிணறு தாண்டின மாதிரி ஏற்பாடு பண்ணிவிட்டு வந்திருக்கிருய்?"

"ரொம்ப 'டெலிகேட்டான' விஷயம் இது! என்னைப்போல ஒரு பெண் உன்னைப் போல ஒரு பெண்ணுக்கு இது வரைதான் ஏற்பாடு பண்ண முடியும் இந்த விஷயத்தில். என் கணவர் எத்தனையோ வியாபார நண்பர்களுக்கு ஹோட்டல்—ஹோஸ் டஸ்—எல்லாம் ஃபோனிலேயே ஏற்பாடு பண்ணிப் பேசறப்போ நானே கேட்டிருக்கேன். அது ஈஸி. வசதியுள்ள ஆண்களுக்கு உபசரணைப் பெண்கள் அரேஞ்ஜ் பண்றது சுலபம். வசதியுள்ள உன்போன்ற ஒரு பெண்ணுக்கு நீ சொல்கிற வர்ணனைகளுக்கு உட்பட்ட ஓர் ஆண்மகனை ஏற்பாடு செய்யிறதுங்கிறது முடியாத காரியம். விபரீதமான முயற்சியும்கூட. அதனல் என்னமோ சொல்லி எப்படியோ பேசி உள்ளே நுழைந்து அந்தத் திவ்ய சேவாசிரமத்துக்கு ஐயாயிரம் ரூபாய் டொனேஷன்வேறு தந்து நான் என் மேல் நம்பிக்கை வரச் செய்ய வேண்டியிருந்ததடீ சுலபா! என் மேலும் நான் சொன்ன ஏற்பாட்டின் மேலும் சந்தேகமே ஏற்படாமல் பெருந்தன்மையாக அந்தத் திவ்யா னந்தர் ஒப்புக் கொண்டதே பெரிய விஷயம். வெறும் படத் தில் சிரிக்கிற சிரிப்பு ஆடுகிற ஆட்டம், தோன்றுகிற தோற்றத் தின் மூலமே பல லட்சம் மக்களை மயங்க அடித்துப் பைத்தியமாக்கியிருக்கிற நீ பெண் வாடையே படாமல் வறண்டு — காய்ந்து போயிருக்கிற ஒரு சாமியாரை வசப்படுத்துகிற வேலை கூட மீதமில்லாமல் நீ அங்கே போன வுடன் தயாராகச் சொம்பிலிருந்து தண்ணீர் படுகிற மாதிரி முடியணும்னு நெனைச்சா நான் ஒண்ணுமே பண்ண முடி யாதுடீ!"

"நீயே இப்படித் தயங்கிஞல் நான் என்னடீ பண்ணுவேன் கோகிலா!"

''மேயப்போகிற மாட்டுக்குக் கொம்பிலே புல்லைக் கட்டி விடமுடியாது என்பார்கள்...''

''நான் மாடா?''

''இல்லை பசு? காளையைத் தேடிப் போகிறாய். தேடிவருகிற பசுவைப் பெரும்பாலும் காளை கைவிடுவதில்லை.''

கோகிலா கிண்டல் செய்கிறாளோ என்று பட்டது சுலபாவுக்கு. பதில் சொல்லாமல் இருந்தாள். கோகிலாவே மேலும் பேசலானாள்:—

''உன் சக்தி உனக்குத் தெரியாதுடீ சுலபா! விசுவாமித்திர முனிவனே மேனகையிடம் மயங்கிப் பல்லிளித்திருக்கிறான். திவ்யானந்தர் உன்னிடம் எந்த மாத்திரம்? உன் அழகுக்கு இந்தச் சாமியார் ஒரு சவால் என்று நினைத்துக் கொண்டு போ. உன்னால் அவரை ஜெயிக்க முடியும்.''

''ஜெயிப்பதில் சந்தோஷமில்லை என்று நீயே சொல்லியிருக்கிறாய்!''

''இந்தமாதிரி ஓர் ஆண்பிள்ளையை ஜெயிப்பதே அவனிடம் எல்லாவற்றையும் தோற்பதற்குத் தானே?''

''பணம் ஏதாவது கொண்டுபோக வேண்டுமா?''

''கொண்டுபோனால் தப்பில்லை! நல்ல காரியம் செய்கிறார். ரொக்கம்தான் வேண்டும் என்பதில்லை. 'செக்'காகவே தரலாம். இன்கம்டாக்ஸ் விலக்கு உத்தரவுகூட வாங்கியிருக்கிறார்.''

''நானும் டொனேஷன் தரத்தான் போகிறேன். எவ்வளவு என்று அங்கே போன பிறகுதான் முடிவு செய்ய வேண்டும் கோகிலா!''

''உன்னையே இழக்கப் போகிறாய்! பணத்தை இழப்பதா பெரிய காரியம்?''

# 16

வெள்ளிக்கிழமை விடிந்தது. அதிகாலை மூன்றரை மணிக்கே எழுந்து நீராடித் தயாரானாள் சுலபா. சரியாக நாலில் இருந்து நாலேகாலுக்குள் காருடன் வருவதாகக் கோகிலா முதல் நாளிரவே ஃபோனில் சொல்லியிருந்தாள். தாங்கள் இருவரும் எங்கே போகிறோம் என்பது யாருக்கும் தெரிய வேண்டாம் என்றும் சுலபாவிடம் எச்சரித்திருந்தாள் கோகிலா.

சுலபா மிக எளிமையாகவும் அதே சமயத்தில் கவர்ச்சியாகவும் தன்னை அலங்கரித்துக் கொள்வதற்கு ஏற்ற சாதனங்களை உடன் எடுத்துக் கொண்டிருந்தாள், வாசனைப் பொருள்கள் உயர் ரக செண்ட், சந்தன அத்தர், புனுகு ஜவ்வாது என்று அள்ளிக்கொண்டு போனாள். செக் புஸ்தகம் எடுத்துக் கொண்டாள். குறும்புக்காரக் கண்ணனை நாடிப் போகும் ஒரு இளம் கோபிகையைப் போன்ற மனநிலையில் இருந்தாள் சுலபா. மனத்தில் ஒரே சிருங்கார அவஸ்தை.

அன்று அவள் தன்னைக் கண்ணாடியில் பலமுறை அழகு பார்த்துக் கொண்டாள். சமீப காலத்தில் இப்படி ஓர் அழகுப் பரபரப்பை அவள் அடைந்ததே இல்லை. தான் அழகு என்பதில் அவளுக்குச் சந்தேகமோ, இரண்டாவது அபிப்பிராயமோ கண்ணாடியில் பார்த்து உறுதி செய்துகொள்ளும் அவசியமோ இதுவரை ஏற்பட்டதே இல்லை, இன்றுதான் முதல் முதலாக அந்த இனிய பதற்றமும், பரபரப்பும் அவளுக்கு ஏற்பட்டன. அதை அவளே உணர்ந்தாள், அநுபவித்தாள், அவஸ்தைப்பட்டாள்.

மெய்சிலிர்க்கும் ஓர் அநுபவத்தை இதுவரை வேறு பெண்களையே தீண்டியறியாத ஒரு பரிசுத்தமான ஆண்மகனைத் தீண்டப் போகிறோம் என்ற எண்ணத்தைத் தாங்கி இதயமே சுகமாகக் கனத்து வீங்கியிருந்தது.

மூன்றாவது மனிதருக்கு இந்த நாசூக்கான விஷயம் பரவிவிடக்கூடாது என்பதனால் அத்தனை பெரிய ஏ. சி. பென்ஸ் காரில் கோகிலாவும் சுலபாவும் மட்டுமே பயணம் செய்தார்கள். கோகிலா எக்ஸ்பர்ட் டிரைவர், பெண் பயில்வான் மாதிரிக் கோகிலாவுக்கு நல்ல கட்டுமஸ்தான உடம்பு. இலேசில் சோர்ந்து விடமாட்டாள். "நீயே ஓட்டறதாலே நிறுத்தி நிறுத்தி வேணுமானப் போகலாம். சிரமப் படாதே... அவசரம் ஒண்ணுமில்லே—"

என்று சுலபா வீட்டை விட்டுக் கிளம்பும்போது சொன்னாள். "கையிலே லேடஸ்ட் பென்ஸை வச்சுக்கிட்டு அதையே என்னாலே கட்டை வண்டி மாதிரி ஓட்ட முடியாது. சகஸ்ர கலசாபிஷேகத்துக்கு நேரம் ஃபிக்ஸ் பண்ணியாச்சு. கோயிலைத் தரிசனம் பண்ண வர்ரவங்க உன்னைத் தரிசனம் பண்றமாதிரி ஆயிடப்படாது. அஞ்சேமுக்கால் ஆறுக்குள்ளே போயிட்டம்னுக் கூட்டம் சேராமே எல்லாம் காதும் காதும் வச்சாப்ல முடியும்"

என்றாள் கோகிலா. சுலபா மறுத்துச் சொல்லாமல் கேட்டுக் கொண்டாள்.

"இங்கே திருப்பதியிலே சாது தரிசனம் முடிஞ்சு ஊர் திரும்பறோம்கிறதுதான் மத்தவங்க கிட்ட நாம சொல்ல வேண்டியது. ஆனால் பகல் முழுதும் இங்கேயே ஏ. சி. சூட்டில் தங்கிவிட்டு இருட்டியதும் இரகசியமாக மதனபள்ளி ரோட்டிலுள்ள திவ்யசேவாசிரமத்தில் உன்னைக் கொண்டுபோய் திவ்யானந்தர் உன்னை எதிர்பார்த்துத் தனியாகக் காத்திருப்பார்."

"நீ என்ன செய்வதாக உத்தேசம்டீ கோகிலா—"

"நானா? நான் உன்னை அங்கே டிராப் பண்ணியதும் நேரே திருப்பதி திரும்பி ஏற்கனவே நாம் ரிஸர்வ் செய்த அதே ஏ. சி. சூட்டில் ஓய்வு கொண்டுவிட்டு மறுநாள் அதாவது நாளைக்காலையில் உன்னைப் பிக் அப் செய்ய ஆசிரமத்துக்கு மீண்டும் வருவேன்—"

''என்னை நிராயுதபாணியானவளாக நிர்ப்பலமான வளாகத் தனியே அந்த இளம் சாமியாரிடம் விட்டுவிட்டு நீ போய்விடுகிறாய்?''

''மோக யுத்தத்தில் ஆணோ, பெண்ணோ நிராயுத பாணிகள் ஆவதில்லை- அவர்களுடைய தாபங்களே அவர்களுக்குப் போதுமான ஆயுத பலங்கள்—''

''பல விஷயங்களைத் திவ்யானந்தரிடம் மனசு விட்டுப் பேச முடியாமல் போயிற்று என்றாய்! அவர் என்னைச் சந்திக்கும் போது தனியாயிருக்க வேண்டும் என்ற நிபந்தனையை மட்டும் நீ எப்படி விதித்தாய்?''

''நீ மனசு விட்டுப் பேசக் கூச்சப்படுவாய் என்று சொல்லி அவருடைய சம்மதத்தைப் பெற்றேன். அந்த நிர்மலமான இளைஞர் சந்தேகம், பயம், ஆகிய உணர்வுகளுக்கு அப்பாற் பட்டவராயிருக்கிறார். கள்ளம் கபடமே தெரியவில்லை. உடனே சம்மதித்தார். இளம் பெண்ணை ஓர் அழகியை இரவில் தனியே சந்திக்கச் சொல்லி மற்றோர் பெண்வந்து வேண்டு கிறாளே, இது என்ன சதியோ என்றெல்லாம் நினைக்கிற வராகவே அவர் தென்படவில்லை.''

''உடம்பு மட்டுமின்றி மனசும் கறைபடாதது என்று சொல்.''

''நிறையப் படித்தவர். சீரழிகிற பெண்களைத் திருத்திப் புது வாழ்வு அளிக்கும் நற்பணிக்காகவே தம் வாழ்வை அர்ப் பணித்திருக்கிறார்.''

''குப்பைய ரெட்டி போல் பெண்களைச் சீரழிப்பதற்கு வாழ்க்கையையே செலவழிப்பவர்கள் உள்ள இதே உலகில் தான் இந்தத் திவ்யானந்தரும் இருக்கிறார்.''

''குப்பைய ரெட்டி கூழாங்கல்! இது மாணிக்கம்.''

கோகிலா படுவேகமாகக் காரைச் செலுத்தினாள். பலபல வென்று விடிகிற நேரத்துக்குக் கார் திருமலையில் இருந்தது.

சந்நிதியில், தரிசனம் செய்கிறபோது உணர்ந்த சந்தனம் பச்சைக் கருப்பூர வாசனை அவளது வழக்கமான ஞாபகங்களைக் கிளரச் செய்தன. அதே புனித வாசனைகளும் பிரம்மசரியத்தின் காந்தியும், தேஜஸும் அழகும் உள்ள ஓர் உடல் அன்றிரவு தனக்கு விளையாடக் கிடைக்கப் போகிறது என்ற உணர்வும் ஏற்பட்டது. அது அநுராகச் சுவையாக உள்ளே தங்கியது.

சகஸ்ர கலசாபிஷேகம் முடிந்து பிரசாதங்களைப் பெற்றுக் கொண்டு அறைக்குத் திரும்பினார்கள். பகல் உணவும் அறைக்கே வந்தது. நேரம் நெருங்க நெருங்கச் சுலபாவுக்குப் பரபரப்பும் பூரிப்பும் ஆவலும் கிளர்ந்தன. மனசு நிலை கொள்ளாமல் தவித்தது.

'என்ன உடுத்திக் கொண்டு போவது? எதை எதை அணிவது?'-என்று சுலபா அதிகமாக அலட்டிக் கொள்வதைப் பார்த்துக் கோகிலா அவளைக் கிண்டல் செய்தாள்.

''கோவில் திருவிழாவுக்காக அம்மன் விக்கிரகத்தை ஓவராக அலங்கரிக்கிற மாதிரி ஒரேயடியாக அலங்கரித்துக் கொண்டால் உன் இயற்கையான வசீகரமே தெரியாது. சிம்பிளாக - உன் அழகே அதிகம் தெரிகிறமாதிரி - நகைகள்—புடைவை பவுடர் முதலியவை உன்னைவிட அழகாகத் தோன்றி அதிகப் பிரசங்கித்தனம் பண்ணாத வகையில் போய் நில்! வெள்ளைவாயில் புடைவை. உன் தங்க நிறக் கழுத்தின் பொன் வண்ணத்தை எடுத்துக் காட்டுகிற மாதிரி ஒரு மெல்லிய கருகமணிமாலை, தோடு, மூக்குத்தி — நீ விரும்பினால் காலில் கொலுசு கைகளுக்குக் கருநிறக் கண்ணாடி வளையல்கள். இவை போதும்.''

''பட்டுப் புடைவை வேண்டாமென்கிறாயா?''

''வேண்டவே வேண்டாம்! உன் உடம்பே மழமழப்பான வெண்பட்டுக் குவியல் மாதிரி! ஒரு பட்டில் இன்னொரு பட்டு நிற்காது.''

''செண்ட்! லிப்ஸ்டிக்...''

''வாசனை தெளித்துக் கொள்! உதட்டுச் சாயம் வேண்டாம். ஏற்கெனவே செர்ரிப்பழம் போல மின்னும் உன் உதடுகளுக்குச் சாயம் வேண்டியதில்லை.''

''எல்லாம் சரி! நீயோ எதையும் வெளிப்படையாக விட்டுப் பேசிக் கொள்ள வில்லை என்கிறாய். சந்திக்க மட்டும் ஏற்பாடு பண்ணியிருப்பதாகச் சொல்கிறாய்! அவரிடம் நான் எப்படியடி ஆரம்பிப்பேன்? எப்படி மயக்கி எப்படி வசப்படுத்தி எப்படி...?''

''செக் புத்தகம் கொண்டு போ! திவ்ய சேவாசிரமத்தின் சேவைகளைப் பற்றி நாலு நல்ல வார்த்தை சொல்லு. குப்பைய ரெட்டி மாதிரி எவனோ ஒருத்தன் உன் வாழ்வைப் பாழாக்கி விட்டான் என்பதைச் சொல்லு... உங்கள் உபதேசம்தான் என்னைக் கைதூக்கிவிடும் என்று சொல். அழு. கால்களைத் தொட்டு வணங்கு-மன்றாடு! மெல்ல மெல்ல வசப்படலாம்.''

''நான் திர்ப்பலமாக உணர்கிறேன்.''

''இந்த நிர்ப்பலமே உன் பலம் சுலபா! நீ ஒரு சௌந்தரியப் படையெடுப்பு நடத்தப் போவது புரியாமல் இப்படிப் பேசாதே.''

''பயமாயிருக்கிறதடீ.''

''நீ ஒன்றும் பச்சைக் குழந்தையில்லை. முதலிரவுக்குப் போகிற பேதைக் கன்னிப் பெண்ணுமில்லை. பலரை நொடியில் வென்ற வெற்றியரசி என்பதை நினைத்துக் கொள்!''

''இதுவரை நான் ஆண்களை வென்றிருப்பது உண்மை! ஆனால் என் தாபங்கள் தீர வேணுமானால் நான் இங்கே தோற்க வேண்டுமேடீ கோகிலா!''

''கவலைப் படாதே! எந்தப் பஞ்சும் நெருப்பில் எரியும் சுலபா!''

''இதில் யார் நெருப்பு? யார் பஞ்சு?''

"காமம் கனிந்து திரண்ட எல்லாப் பேரழகுமே எரியும் நெருப்புத்தான்! இங்கு உன் அழகுதான் அக்னி."

"நான் நீறு பூத்த நெருப்புத்தான் கோகிலா! என்னால் எரிக்க முடியுமா?"

"உன்னால் முடியுமோ முடியாதோ; உன் அழகால், சிரிப்பால் விழியால், அங்க வனப்பால் எதிரே நிற்கிறவனின் பிரம்மசரி யத்தை எரித்துப் பொசுக்கி விடமுடியும்."

ஜல்லிக்கட்டுக்குப் போசிற பந்தயக் காளையைக் கொம்பு சீவி எண்ணெய் பூசி முட்டுவதற்கான வெறியூட்டி அனுப்புகிற மாதிரிச் சுலபாவைத் தயாராக்கினாள் கோகிலா.

மாலை மணி ஐந்து. சுலபா மறுபடி நீராடினாள். கோகிலா சொல்லியிருந்தபடி எளிமையாக அலங்கரித்துக் கொண்டாள். வந்து நின்றாள். பார்த்துவிட்டுக் கோகிலா சொன்னாள்.

"சபாஷ்! இப்படியே வரியணைத்துக் கொள்ளணும் போலி ருக்கிறாய்! இப்படி வெண்மை நிறம் சந்நியாசிகளுக்கு எப் போதுமே பிடிக்கும்."

"எனக்குக் காவி நிறம் ரொம்பக் கவர்ச்சிடீ கோகிலா."

"ரொம்பப் பொருத்தம்! வெண்மையில் காவி சேர்ந்தால் சரியாக ஒட்டிக் கொள்ளும்."

"என்னென்ன எடுத்துக் கொள்ளணும்? கோகிலா!"

"முதலில் நீ மறந்து விடாமல் உன்னை எடுத்துக் கொள்! கைப்பையில் கையெழுத்திட்டுத் தேதி போட்டுத் தொகை போடாத ஒரே ஒரு செக் லீஃப் மட்டும் வைத்துக் கொள்! வேறு எதுவும் வேண்டாம்! எல்லாவற்றையும் இங்கே அறையி லேயே விட்டு விடு. வீண் சுமை எதுவும் வேண்டாம்."

"மாற்றுப் புடைவை ஒன்று வேண்டாமா?"

இதைக் கேட்டு கோகிலா குறும்புத்தனமாகச் சிரித்தாள். அவள் விழிகளில் குறும்பு மின்னியது.

"நல்ல ஞாபக சக்தியடி உனக்கு! மாற்றுப் புடவை கொண்டு வந்திருந்தால் எடுத்துக்கொள். எனக்கு ஆட்சேபணை இல்லை."

சுலபா உள்ளே போய்ப் பெட்டியை எல்லாம் குடைந்து விட்டுத் திரும்பி வந்து, "இந்த வெள்ளை வாயில் புடவையைத் தான் மாற்றுப் புடைவையாகக் கொண்டு வந்தேன். கட்டிக் கொள்ளப் பட்டுப் புடைவை என்று எண்ணி இதைக்கூட மாற்ருக எடுத்து வைத்தேன். இப்போது இதையே மெயின் ஆகக் கட்டிக் கொண்டாயிற்று... வேறு மாற்றுப் புடை வைன்ஞ 'சில்க்' தான் இருக்கு."

"அப்படியானுல் விடு! மாற்றுப் புடைவையே வேண்டாம்! நீ ஆசைப்பட்ட சந்தனமும் பச்சைக் கருப்பூரமும், ஏலமும் மணக்கிற பரிமள சுகந்தங்களின் உஷ்ண மூச்சுக்கள் படிகிற அதே புடைவையே உன் உடம்பை அலங்கரிக்கட்டுமே."

சுலபா இதைக் கேட்டுப் புதுமணப் பெண் போல வெட்கப் பட்டாள். தப்பு வராமல் கவனமாகத் தன் செக் புத்தகத் திலிருந்து ஒரு லீஃபை எடுத்துத் தேதி போட்டுக் கை யெழுத்திட்டுக் கைப்பையில் பேஞவுடன் வைத்துக் கொண் டாள்.

மாலை ஐந்தே முக்கால் மணிக்கு அவர்கள் கார் மலையிலி ருந்து கீழே இறங்கியது. ஏ.சி. காராகையிஞல் சுலபாவின் இங்கிதமான பரிமள நறுமணங்களால் காரே சாந்தி முகூர்த்த அறை போல் கமகமத்தது. காரை ஓட்டியபடியே கோகிலா சொன்ஞள்:

"நீ சாதுரியமாகப் பேசித்தான் அவரைக் கவர வேண்டு டும்! இப்படிச் சந்நியாசிகளிடம் மனசைக் கவராமல் உடம் பைக் கவர்வது கஷ்டமான காரியம். வழி சொல்லி அழைத்து வாயிற்படிவரை கொண்டு போய்விட மட்டுமே என்ஞல் முடியும்!படை எடுப்பை வெற்றிகரமாக முடிப்பது உன் கையில் தான் இருக்கிறது."

''நான் என்ன பேச முடியும்? இந்த மாதிரிப் படித்த ஞானியிடம் நான் பேச என்ன அகப்படும் கோகிலா!''

''உன் கஷ்டங்களைச் சொல்! அறிவுரை கேள். பிரமாத மான காதல்களை இரக்கம்தான் உண்டாக்குகிறது.''

## 19

வெகு சுந்தரமாக மண்டிக்கிடந்த அந்த மாந்தோப்புக்குப் பிரதான சாலையிலிருந்து விலகிய செம்மண் புழுதி படிந்த கிளைச்சாலைக்குள் இவர்களது பென்ஸ் திரும்பியபோது மாலை ஆறேமுக்கால் மணி- காட்டுக்கே உரிய பச்சை வாசனையும், சிள் வண்டுகளின் 'கீங் கீஸ்' ஒலியும் ஆரம்பமாகிவிட்டன- சுலபாவின் நெஞ்சு படபடவென்று அடித்துக் கொண்டது. ஏதோ ஒரு சுகமான தவற்றைச் செய்யத் துணிந்து விட்டா லும் அதைச் செய்யக்கூடாது என்று ஒரு கணமும் செய்து சுகம் காணவேண்டும் என்று மறு கணமுமாக மாறி மாறித் தோன்றின. மாந்தோப்பின் அருகே ஓடை நீர் சலசலக்கும் ஒலி ஜலதரங்கமாய் ஒலித்தது. ஆகாயம் நீலப்படுதாவாய் மேலே விரிந்து கிடந்தது. ஒரு கர்மயோகி போல் காரை மாந்தோப்பின் முகப்பில் நிறுத்தி விட்டு எந்தப் பதற்றமும் இல்லாத குரலில்,

''சுலபா வா! வலது காலை முன் வைத்து இறங்கு''— என்று மணப்பெண்ணுக்குச் சொல்வது போல் சொல்லி அவளை இறக்கி அழைத்துக் கொண்டு உள்ளே ஒற்றையடிப் பாதையில் சென்றாள் கோகிலா.

இவர்களது கார் நின்ற இடத்திலிருந்து பத்து நிமிஷம் ஒற்றையடிப் பாதையில் நடக்க வேண்டியிருந்தது. அந்த ஒற்றையடிப்பாதை கொஞ்சம் மேடாயிருந்த பகுதியிலிருந்த ஒரு குடில் போன்ற சிறிய கட்டிடத்துக்கு இட்டுச் சென்றது. கீழே சற்றுப் பள்ளத்தாக்கான பகுதியில் ஹாஸ்டல் போலத்

தெரிந்த விளக்குகள் மின்னும் ஓர் நீண்ட கட்டிடத்தைக் காட்டி, ''அதுதான் வழுக்கி விழுந்த பெண்களின் மறுவாழ்வு விடுதி! பக்கத்தில் தெரிவது அவர்களுக்குப் பல்வேறு தொழில் களைக் கற்பிக்கும் பயிற்சி நிலையம். எதிரே தெரிவது திவ்யா னந்தர் தங்கும் குடில்''—என்று மெல்லிய குரலில் சொன் ஞள் கோகிலா. அதில் மின் விளக்கு இல்லை. அகல் விளக்கின் ஒளியில் அமர்ந்து தியானத்தில் இருந்த திவ்யானந்தர் காலடி ஓசை கேட்டுக் கண் திறந்தார். இளஞ்சூரியனைப் போல் அழகாயிருந்தார் திவ்யானந்தர். திருப்பதியில் கர்ப்பக் கிருகத்தில் உணர முடிந்த அதே சந்தனம் கருப்பூரம் இணைந்த நறுமணம் நிலவியது குடிலில். இருவரும் வணங்கினார்கள். கோகிலா சொன்னாள். "சுவாமி! நான் அன்னிக்கு வந்து சொன்னேனே என் சிநேகிதி...அது இவதான்! உங்க புத்தி மதிதான் இவளுக்குப் புதுவாழ்வு காண்பிக்கணும்—''

சுலபா மீண்டும் அவரை வணங்கினாள். "உங்கள் உபதேசம் இவளை நல்வழிக்குக் கொண்டு வரும்னு நம்பிக்கை யோடப் போறேன் சுவாமி! காலையில் வருகிறேன்''—என்று கோகிலா புறப்பட்டு விட்டாள். உபசாரத்துக்காகக் கூட திவ்யானந்தர் 'நீயும் இரேன்' என்று கோகிலாவைக் கேட்க வில்லை. சுலபா அப்படியே கட்டுண்டு உட்கார்ந்திருந்தாள். கீழே கார் ஸ்டார்ட் ஆகித் திரும்புகிற ஓசை கேட்டது. கோகிலா புறப்பட்டுவிட்டாள்.

எதிரே மாயக் கண்ணனே துறவியாக அமர்ந்திருப்பது போல் ஒரு தேஜஸ். ஒரு காந்தி, ஒரு தெய்வீகப் புன்னகை.

"உன் மனசில் இருப்பதை ஒளிக்காமல் சொல்லம்மா?''

சுலபாவுக்கு முதலில் பேசவரவில்லை, பொய்யும் சொல்ல வரவில்லை! நிஜம் பேசவும் முடியவில்லை.

''உன்னைப் பார்க்கும்போது சாட்சாத் சரஸ்வதியே மனக் கஷ்டத்தோடு என் எதிரே வந்து உட்கார்ந்திருப்பது போல் தோன்றுகிறது.''

சுலபா மெல்ல விசும்பினாள். கண்களில் நீர் சுரந்து சுரந்து வெளிப்பட்டது. காணாமல் போன தாயைக் கண்ட குழந்தை போல் திடீரென்று அழ ஆரம்பித்தாள்.

"பெண்ணே! நீ அழுவது தவறில்லை! அழுகையில் தான் துயரங்கள் கரையும். அழாமல் எந்தப் பெண்ணும் இங்கே வருவதில்லை. ஆண்களின் பொறுப்பற்ற ஆசைகளில் நைந்த பல இளம் பெண்களை மீட்டுத் தற்கொலை செய்து கொள்ளாமல் தடுத்து வாழ்வில் நம்பிக்கையூட்டி வழிகாட்டி அனுப்பும் பணியைத்தான் இந்த ஆசிரமத்தில் செய்து வருகிறோம்! நீயும் இங்கே நம்பிக்கை பெறமுடியும்."

"உங்கள் பணியைக் கேட்டு என் இதயம் கரைந்து உருகுகிறது சுவாமி—"

டயலாக் மாதிரி எப்படியோ ஒரு வாக்கியம் பேசிவிட்டாள் சுலபா. ஞாபகம் வந்து 'செக்'கைக் கைப்பையிலிருந்து எடுத்து எழுந்து வணங்கி அவர் காலடியில் வைத்தாள்.

தங்கத்தில் வடித்து மெருகிட்ட மாதிரி எத்தனை அழகான திருவடிகள். அந்தக் கால்களையே ஆசைதீர முத்தமிடலாம் போலிருந்தது சுலபாவுக்கு.

"இது என்ன?"

"உங்கள் சேவையில் என் பங்கும் இருக்கட்டும் என்று.."

"நீ மிகவும் பெரிய வசதியுள்ள குடும்பத்துப் பெண் என்று உன் சிநேகிதி சொன்னாள்."

"............"

"ஏழைகளை விட வசதியுள்ளவர்கள் தான் அதிகம் வழி தவற நேரிடுகிறது."

"ஒரு படுபாவி என் வாழ்வையே சீரழித்துவிட்டான் சுவாமீ! என்னை ஆசைகாட்டி மோசம் செய்து எங்கோ எப்படியோ கூட்டிச் சென்று கடைசியில் ஒரு விபசார விடுதியில் விற்றுவிட்டு ஓடிவிட்டான்."

''உன்னைப் போன்ற பெரிய குடும்பத்துப் பெண்கள் எப்போதும் பண உதவி செய்ய முன்வருகிறீர்களே ஒழிய இப்படி விடுதியில் நேரடியாக ஈடுபட்டுச் சேவை செய்ய முன் வருவதில்லை. உன் தோழியும் அன்று ஒரு தொகை டொனேஷன் கொடுத்தாள், நீயும் தொகை போடாமல் ஒரு செக் கொடுத்திருக்கிறாய்!''

''என் மாசு நீங்க எப்படிப்பட்ட சேவையைச் செய்யும்படி நீங்கள் கட்டளையிட்டாலும் நான் செய்யத் தயாராயிருக் கிறேன்—''

''திருந்துவதற்கு விரும்புகிற யாரும் தவற்றை உணர வும், ஒப்புக்கொள்ளவும் துணிய வேண்டும். ஏழைப் பெண்கள் தவறுகளை உணர்ந்து ஒப்புக் கொண்டு திருந்துகிறார்கள். உங்களைப் போன்ற வசதியுள்ள குடும்பத்துப் பெண்கள் தவறு களை மறைத்துக் கொண்டு வாழப் பழகுகிறீர்கள். இதுபோன்ற இடங்களுக்கு வரக்கூடப் பிறர்பார்க்காத நேரம், பிறர் பார்க் காத தனிமை எல்லாம் உங்களுக்கு வேண்டியிருக்கிறது.''

''...............''

''வழுக்கிவிழுந்த பெண்களின் இல்லத்தில் நம்மைப் பார்த்ததாக யாரும் யாரிடமும் பேசிவிடக்கூடாது என்ற பயம் பாசாங்காக உருவாகிவிடுகிறது—''

சுலபாவுக்குச் சரியென்று உரைத்தது.

''எளியேனைப் பொறுத்தவரை பாசாங்கு எதுவுமில்லை சுவாமி! வீடு வாசல், பணம், சுகம், எல்லாவற்றையும் நான் மதிக்கவில்லை. நீங்கள் இடும் கட்டளையைச் சிரமேற் கொண்டு செய்யத் தயாராயிருக்கிறேன்.''

''இப்படிப் பெண்களுக்குப் புனர்வாழ்வளிக்கும் ஆசிர மத்தை என்போல் ஒரு துறவி நடத்துவதில் சில தர்ம சங்கடங்கள் இருக்கின்றன. இந்தப் பணியில் எனக்கு உதவியாக லட்சுமீகரமான முக அமைப்புள்ள— பார்த்தால்

விரசமான எண்ணமே வராத தெய்வீக முக ராசியுள்ள ஒரு பெண் மணி எனக்குத் தேவை. உன்னைப் பார்த்தால் அப்படி முகராசி தெரிகிறது. என்னோடு இந்தப் பணியில் ஈடுபடும் துணிவு உனக்கு வருமா? எந்த ஒரு பெண்ணின் முகத்தைப் பார்த்தால் எனக்கே என் தாயின் முன் நிற்பது போன்ற உணர்வு வருகிறதோ அப்படி ஒரு முகம் உனக்கு இருக்கிறது!''

''சுவாமி! நிஜமாகவா? ஆண்களின் சபலங்களில் நைந்த முகத்தைப் பார்த்தா இப்படிச் சொல்கிறீர்கள்...''

''உன் முகத்தில் ஓர் ஆசிரமத்தின் அன்னையைப் பார்க்கிறேன். இந்தத் திவ்யசேவாசிரமம் இதன் அன்னையாக உன்னை அழைத்தால் நீ வருவாயா பெண்ணே?''

''நானா?... இந்தப் பாவ ஜென்மமா?''

''வீணாகச் சுயநிந்தனை செய்து கொள்ளாதே! எந்த நிமிஷம் இந்த ஆசிரமத்தின் அன்னையாக வரச் சம்மதிக்கிறாயோ அந்த நிமிஷமே உன் கோலம் மாறவேண்டும். எளிய காவிநிறச் சேலை. இங்கேயே இந்த அலமாரியில் அப்படிச் சேலைகள் நிறைய வாங்கி வைத்திருக்கிறோம். சேருகிற பெண்களுக்கு இங்கே அது தான் யூனிஃபாரம். நீயும் அதை அணிய வேண்டும். நகைகள், ஆடம்பரங்கள் கூடாது! இந்தப் பணியை விடத் தொகை போடாத உன் செக் கூட எனக்குப் பெரிதில்லை.''

''யோசிக்க நேரம் கொடுங்கள்.''

''பணக்காரர்களால் யோசிக்காமல் நல்லது கூடச் செய்ய முடியாது. காரை விட்டுவிட, பங்களாவை விட்டுவிட பணத்தை விட்டுவிட மமதையை விட்டுவிட எல்லாவற்றுக்கும் யோசிக்க வேண்டும். யோசித்தபின் விட முடியாது. விட்டபின் யோசித்துப் பயனில்லை. நான் கூட விஜயவாடாவில் ஒரு கோடீசுவரனின் ஒரே மகனாகப் பிறந்தேன். யோசிக்காமல்

திடீரெனக் கல்லூரிப்படிப்பு முடிந்ததும் ஒரு நாள் இப்படிச் சாமியாரானேன்.'' ஐந்து நிமிஷ மௌனத்தின்பின் மீண்டும் அவரே கூறினர்:—

''நல்லது செய்ய யோசிப்பதற்குள் சிலசமயம் நம் வாழ்வே முடிந்து போய் விடுகிறது! முடிவதற்குள் ஆரம்பிக்க வேண்டும் நாம்.''

சுலபாவுக்குத் தான் எதற்காக அங்கே வந்தோம் என்பதே வேகமாக மறந்து கொண்டிருந்தது. எதிரே இருந்த தீப்பிழம் பின் வேகத்தில் உள்ளே சில எரிந்தன. பொசுங்கிப் பொடிப் பொடியாயின.

அவர் பேசிக் கொண்டிருந்தபோதே குழந்தைபோல் தூங்கி விட்டார் அங்கே. வெறும் தரையில்-அப்படியே வலது கையை மடித்துவைத்துக் கொண்டு தூங்கும் அந்தச் சுந்தர புருஷனின் அருகே நெருங்கி நடுங்கும் கைகளினுல் தன் மடியில் தலையை எடுத்து வைத்துக் கொண்டாள் அவள்.

சாட்சாத் திருப்பதிப் பெருமாளேயே எடுத்து மடியில் கிடத்திக் கொள்வது போலிருந்தது.

# 20

பொழுது விடிவதற்கு இன்னும் சில நாழிகைகள் இருந்தன. 'கருப்பூரம் நாறுமோ, கமலப் பூ நாறுமோ, திருப் பவளச் செவ்வாய்தான் தித்தித்திருக்குமோ?'- என்று பாவித்தபடியே அந்தச் சந்தனம் மணக்கும் சிரசைத் தன் மடியிலிருந்து தரையில் அலுங்காமல் எடுத்துவிட்டு உறங்கச் செய்து பின் சுலபா எழுந்திருந்தாள். இப்போது அவள் மனசில் பாரமோ பரிதவிப்போ இல்லை. வெளியேயும் அவளுள்ளேயும் விடிந்து கொண்டிருந்தது. அங்கே குடிலி லிருந்தே பின்புறமாக ஓடைக்கு இறங்குவதற்கு வழி

இருந்தது. கை வளைகள், கழுத்துமணி, மோதிரம், தோடு, மூக்குத்தி எல்லாவற்றையும் ஒவ்வொன்றாகக் களைந்து குடிலினுள் வைத்து நீராடி வரச் சென்றாள். திரும்பி வந்து அவர் முந்திய இரவில் சுட்டிக் காட்டியிருந்த அந்த அலமாரியைத் திறந்து அந்த ஆசிரமப் பெண்கள் கட்டும் யூனிஃபாரமான சிவப்பு நிறச் சேலையில் ஒன்றை எடுத்துத் தானும் அணிந்தாள். கருமை மின்னும் ஈரக் கூந்தல் பிடரியில் புரண்டது.

அப்போது திவ்யானந்தர் கண்விழித்து எழுந்திருந்தார். இன்னும் இருள் முழு அளவில் பிரியவில்லை. மங்கிய விளக்கொளியில் காவிஉடையில் அவளைப் பார்த்த அவர் இதமான குரலில் மெல்ல வினவினார்:

"யோசித்து ஒரு முடிவுக்கு வந்து விட்டாய் என்று நினைக்கிறேன்."

"யோசித்து முடிக்கவில்லை! முடிவதற்குள் யோசித்து விட்டேன்."

"உனது தொகை போடாத செக்கை விடப் பெரியது இது. பணதானத்தை விட சிரமதானம் எனக்குப் பிடிக்கும்."

அவர் நீராடச் சென்றார்.

கோகிலா வருகிற நேரமாயிற்று. சுலபா அவளை எதிர் கொள்ள முகப்பை நோக்கி ஒற்றையடிப் பாதையில் நடந்தாள். இப்போது அவள் மனம் பூப்போல் மிருதுவாயிருந்தது. சுற்றிலும் அங்கங்கே மலர்ந்து கொண்டிருந்த பவழமல்லிகைப் பூக்கள் இவளுடைய இருதயத்துக்குள் முந்திய இரவே மலர்ந்திருந்தன. மணம் பரப்பின.

அந்த மாந்தோப்பு, அதன் குளிர்ச்சி, அதன் சமுதாயப் பணி, அதன் தொண்டுகள் எல்லாமாகத் திடீரென்று அவளுடைய மனத்தில் மரியாதைக்குரியதொரு மூப்பையும், தாய்மையையும் கொண்டு வந்திருந்தன. திடீரென்று ஒரே ஒரு

ராத்திரியில் பல அநாதைப் பெண் குழந்தைகளுக்கும் ஒரே ஒரு விவரம் தெரிந்த ஆண்குழந்தைக்கும் அவள் தாயாகி இருந்தாள். தூரத்தில் ஓடை நீர்ப்பரப்பில் மூழ்கும் தீக் கொழுந்தாய் மின்னிய அந்தத் துறவியின் உடம்பை நோக்கி, 'மற்றை நம் காமங்கள் மாற்று'—என்று பிரார்த்தித்தாள் சுலபா. அவளது காமங்கள் மாறியிருந்தன. தகனமாகியிருந் தன.

அவள் யாரையோ எரிக்க வந்தாள். எரிந்து போயிருந் தாள். ஜெயிக்க வத்தாள். தோற்றுப் போயிருந்தாள். ஏதோ ஒரு சக்தி வாய்ந்த மின்னல் தாக்கி அவள் உள்ளே யிருந்த அசுரகுணங்கள் சாம்பராகி விட்டிருந்தன.

இருபத்தெட்டு வயது பிறந்தவுடன் அந்த இருபத்தெட்டு வயதின் மொத்தமான பாவச் சுமைகளையும் அழுக்குகளையும் இப்படி ஒரு அதிகாலையில் ஒரு காட்டு ஓடையில் நீராடிக் களைந்து விட்டு புதிதாக முதல் வயதிலிருந்து மறுபடி பிள்ளையார் சுழி போட்டு ஆரம்பித்த மாதிரி மனசு இந்த விநாடியில் சத்துவகுணமே திரம்பிச் சாந்தமாயிருந்தது. 'ஏன் இப்படி மாறினோம்? எந்த நொடியில் மாறினோம்? எதற்காக மாறினோம்?'—எல்லாமே மாயம்போல் நடந்து முடிந்திருந்தன. நம்பமுடியாத மாற்றம். இனி மாறவே முடியாத புது நம் பிக்கை. கார் வருகிற ஓசை கேட்டது. கோகிலா தனது இந்தக் கோலத்தையும் இந்த முடிவையும் எப்படி எதிர் கொள் வாள் என்று நினைத்துக் கற்பனை செய்ய முயன்றாள் சுலபா.

ஒற்றையடிப் பாதையில் இருவரும் சந்தித்துக் கொண் டார்கள். கோகிலாவின் முகத்தில் ஒரே வியப்பு.

''இதல்லாம் என்னடி வேஷம் சுலபா! மாற்றுப் புடவைக் காக இந்த யூனிஃபாரத்தை எடுத்துக்கிட்டியா?''

''நேற்றுவரை வாழ்விலும், படங்களிலும் நான் போட்ட வைதான் வேஷம் கோகிலா! இன்றும் இனியும் இதுதான் நிஜம்!''

அவள் குரலிலிருந்த உண்மையையும், உருக்கத்தையும் பார்த்துப் பதறிய கோகிலா, "என்னடீ ஆச்சு உனக்கு?" என்று அருகில் வந்து கைகளைப் பற்றினாள்.

"ஒன்றும் ஆகவில்லை! இந்தா! இதை நீ எடுத்துக் கொண்டு போ."

கோகிலா அந்தப் பொட்டலத்தைக் கை நீட்டி வாங்கினாள். பிரித்துப் பார்த்தாள். சுலபாவின் விலையுயர்ந்த வைரத் தோடுகள், மூக்குத்தி, மோதிரம், மாலை, வளைகள் எல்லாம் அதில் இருந்தன.

"இதுவரை பழகிய நமது சிநேகிதத்தின் அடையாள மாக இவற்றை இனி நீ வைத்துக் கொள்."

"விளையாடாதேடீ! இதெல்லாம் இந்த வயசிலே உன்னாலே முடியாது. நான் என்னமோ நெனைச்சு இங்கே உன்னை இட்டுக்கொண்டு வந்துவிட்டேன். பிள்ளையார் பிடிக்கக் குரங்காப் போச்சே? இதென்னடீ விபரீதம்?... பாதி நிற்கிற படம் எல்லாம் என்ன ஆறது? வீடு வாசல், சொத்துச் சுகத்தை எல்லாம் விட்டு இங்கே இந்தக் காட்டில் சாமியாரிச் சியா இருக்கணுமா நீ? நான் விடமாட்டேன். இந்தக் கோர வேஷத்தைக் களைந்துவிட்டு என்னோடு உடனே புறப்படுடீ!"

கோகிலா உணர்ச்சி வசப்பட்டுப் பதறினாள், இன்னும் சிறிது நேரத்தில் அழுதுவிடுவாள் போலிருந்தது. அவளால் சுலபாவின் இந்த 'மெடமார்பஸைத்' தாங்க முடியவில்லை.

சுலபாவிடமோ கோகிலாவின் இந்த வார்த்தைகள் எந்த உணர்வையும், எந்தச் சலனத்தையும் உண்டாக்கவில்லை. தெளிவான—நிதானமான குரலில் கோகிலாவுக்குப் பதில் சொன்னாள் அவள்.

"இனி என்னால் நடிக்க முடியாது! நான் வாழவேண்டும். வாழப் போகிறேன். ஒப்பந்தம் உள்ள புரொட்யூஸர்களுக்குப் பணத்தைத் திருப்பிக் கொடுத்து விடு. ஆடிட்டரையும்,

கவிதாவையும் உரிய ஏற்பாடுகளுடன் இங்கே அனுப்பிவை. கணக்குகளை ஒழுங்கு செய்து என் சொத்துக்களை இந்த ஆசிரமத்துக்கு எழுதி வைக்கணும்—''

''சுலபா! இதென்னடீ விபரீதம்...? அடி பாவீ!''

இதற்குப் பதில் சொல்லாமல் கோகிலாவைக் கும்பிட்டு விட்டு ஒற்றையடிப் பாதையில் ஒரு மௌன நிழலாய்த் திரும்பி நடந்தாள் சுலபா.

'தனது 28-வது பிறந்த நாளில் திரைவானிலிருந்து ஒரு புகழ்பெற்ற நட்சத்திரம் தனது எல்லாப் பிரகாசங்களுட னும் அழகுடனும் ஆன்மீகத் தோட்டத்துக்குள் உதிர்ந்து விட்டது'— என்று தேடிவருகிற பத்திரிகைக்காரர்களுக்குத் தான் சொல்லவேண்டிய வாக்கியத்தை யோசித்தபடியே காரை நோக்கித் திரும்பி நடந்தாள் கோகிலா.



# பார்கவி லாபம் தருகிறாள்

## 1

பையன்கள் மேல் சிவவடிவேலுவுக்கு நம்பிக்கை இல்லை. அவருடைய அணுகுமுறைகள் பையன்களுக்கு அறவே பிடிக்கவில்லை. இருவருக்குமிடையே தகராறு முற்றி, மூத்தவன் தனியே போய்விட்டான். மூத்த மகன்தான் இப்படி என்றால் இளையவன் பாகவதர் தலையும் கிருதாவும் வைத்துக் கொண்டு பட்டி மண்டபம், கவியரங்கம் என்று அலைந்து கொண்டிருந்தான். மகள் சாது. வாயில் விரலை வைத்தால் கடிக்கத் தெரியாது. கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தாள். மகன்கள், மகள், மனைவி யாரையும் பெரியவர் நம்பவில்லை. பெரியவரை அவர்களும் நம்பவில்லை. ஒரு கூடை செங்கல்லும் பிடாரி என்பார் அவர்.

இதன் விளைவு? கிட்டத்தட்ட ஒரு கோடி ரூபாய் முதலீடு செய்து தொடங்கிய தொழில் முழுகிவிடும் போலிருந்தது. தொட்டதெல்லாம் நஷ்டப்பட்டது. ஆடிட்டர் எச்சரிக்கை செய்தார்:

''இதை இப்படியே விடக்கூடாது. நஷ்டம் பயங்கரமாக இருக்கிறது. திவாலாகி விடும். வாங்கின கடனுக்கும் முதலீட்டுக்கும் வட்டிகூடக் கட்ட முடியாமே இதை நடத்தற திலே பிரயோசனமில்லே. ஏதாவது நடவடிக்கை உடனே எடுத்தாகணும்.''

பெரியவர் சிவவடிவேலுவுக்குக் கண்களைக் கட்டி நடுக் காட்டில் கொண்டு போய் விட்ட மாதிரி இருந்தது. விவசாயம், எஸ்டேட் நிர்வாகம் எல்லாம் அவருடைய குடும்பத்துக்குப் பரம்பரையாகப் பழக்கமானவை. ஹோட்டல் நிர்வாகம் புதிது. அந்த நிர்வாகத்துக்கு அவரும் அவருக்கு அந்த நிர்வாகமும் புரிபடவில்லை. முன்னே போனால் இழுத்தது. பின்னே போனால் உதைத்தது. சரிப்பட்டு வரவில்லை.

அவர் மகன்களில் மூத்தவன் தண்டபாணி அவரோடு கோபித்துச் சண்டை போட்டுக் கொண்டு தனியே போய் டில்லியில் உத்தியோகம் பார்க்கிறான். இளையவன் குமரேசன் பகல் எல்லாம் வீட்டில் படுத்துத் தூங்கிவிட்டு மாலையில் பட்டி மண்டபம், கவியரங்கம் என்று அலைந்துவிட்டு அகாலத்தில் புத்தம்புதுக் கைத்தறித் துண்டுகளும், கசங்கிய மாலையும், இருபது முப்பது என்று கவரில் வைத்துக் கொடுக்கப்படும் அழுக்கு ரூபாய் நோட்டுக்களுமாக வீடு திரும்புகிறான். ஓட்டல் நிர்வாகத்துக்கு அவர்களால் ஒருவிதமான ஒத்தாசையுமில்லை. எதிலும் சந்தேகமும், அவநம்பிக்கையும் உள்ள அவரை நெருங்கவே அஞ்சினார்கள் அவர்கள். அவர் ஒரு தனித் தீவாக ஒதுக்கி விடப்பட்டிருந்தார்.

விவசாய சமூகத்திலிருந்து தொழில் சமூகத்துக்கு மாறிய காலகட்டத்தில் உச்சவரம்பு காரணமாக அதிக நிலங்களை விற்று வந்த பணத்தில் இருந்தும் மேற்கொண்டு கடனாக வாங்கிய தொகையிலிருந்தும் ஒருவழியாக ஓட்டல் பார்கவி போர்டிங் அண்ட் லாட்ஜிங்கைக் கட்டி முடித்துத் திறந்தும் ஆயிற்று. திறந்த பின்புதான் பிரச்னைகளே ஆரம்பமாயின, நஷ்டமும் ஆரம்பமாயிற்று.

ஓட்டல் பார்கவி போன்ற ஒரு பெரிய ஓட்டலைத் தாங்கும் அளவிற்கு ஜமீன் குருபுரம் பெரிய ஊரும் இல்லை. ஆனால் அதன் கேந்திரத்தன்மை காரணமாக ஓர் ஓட்டலுக்கு அவசிய மும் தேவையும் இருந்தன.

நாட்டில் அந்த வேளையில் உச்சவரம்புச் சட்டம் வர இருந்தாலும் ஆடிட்டர் யோசனை சொன்னதாலும்தான் சிவ வடிவேலு இந்த முடிவை எடுத்தார். ஓட்டல் கட்டினார்.

ஜமீன் குருபுரத்திற்கு அருகே ஒரு மலைத் தொடரில் வரப் பிரசாதியான ஆஞ்சநேயர் கோயில் ஒன்று இருந்தது. அடி வாரத்தில் இருந்த பெரிய ஊரான குருபுரத்துக்கு வந்துதான் அங்கே செல்ல முடியும். மலையடிவாரத்திலிருந்து வளைந்து நெளிந்து சுற்றிச் சுற்றி மலை மேல் ஏறும் 'காட்செக்ஷன்' சாலை யில் முப்பது கிலோமீட்டர்பயணம்செய்துதான் ஆஞ்சநேயரைத் தரிசிக்க முடியும். மலை மேல் தங்க வசதிகள் எதுவும் கிடை யாது. குருபுரத்தில் வந்து தங்கித்தான் போயாக வேண்டி யிருந்தது. மிளகாய், காய்கறி, நெல், ஏலக்காய் ஆகிய மொத்த வியாபாரத்துக்கான மண்டிகள் பல இருந்ததனால் கொள்முதலுக்காகத் தமிழ்நாடு முழுவதிலுமிருந்து மட்டுமின்றி அண்டை மாநிலங்களிலிருந்தும் வியாபாரிகள் அடிக்கடி வந்து போனார்கள். அவர்களுக்கும் ஒரு நல்ல ஓட்டல் தேவை யாயிருந்தது. ஊரைச் சுற்றிலும் முந்திரிக் காடு. மலை மேல் ஏலம், கிராம்பு, ஜாதிக்காய், தேயிலை, காப்பி என்று வாசனைப் பொருள்களும் ஏற்றுமதி அயிட்டங்களும் விளைந்தன. பணப் புழக்கம் உள்ள பிரதேசமாகத்தான் இருந்தது.

பெரியவர் சிவவடிவேலுவுக்கும் மலை மேல் எஸ்டேட் இருந்தது. எஸ்டேட்டை அப்படியே வைத்துக் கொண்டு நிலங்களில் சட்டத்திற்கு அதிகமாக இருந்ததை விற்று, மேற் கொண்டு கடனும் வாங்கித்தான் ஓட்டல் பார்கவியைக் கட்டி யிருந்தார். கொஞ்சம் தாராளமாகவே செலவழித்துக் கட்டி விட்டார்.

ஆனால் 'போர்டிங்' வகையிலும் நஷ்டம், 'லாட்ஜிங்' வகையிலும் நஷ்டம். என்ன செய்வதென்று புரியவில்லை. ஒரு விரக்தியில், கிடைத்த விலையை வாங்கிக் கொண்டு 'பார் கவி'யை விற்றுவிடலாம் என்று கூட முடிவு செய்தார். மதுரை யிலோ, கோவையிலோ, இப்படி ஓர் ஓட்டல் விலைக்கு வரு

கிறது என்றால் போட்டி போட்டுக்கொண்டு நான் முந்தி நீ முந்தி என்று வாங்க முன்வருவார்கள். குருபுரத்தில் அப்படி யாரும் வரவில்லை. நஷ்டத்தில் நடக்கிறது என்று வேறு பேராகி விட்டதால் பயந்து ஒதுங்கினார்கள். அருகில் வரவே அஞ்சினார்கள், அவரே தொடர்ந்து நடத்தியாக வேண்டி வந்தது.

இந்தப் பிரச்சினைக்குத் தானாகவும் தீர்வு காண முடியாமல், பிள்ளைகளுடைய ஒத்தாசையும் கிடைக்காமல் திண்டாடினார் சிவவடிவேலு. ஆடிட்டரிடம் போய் அழுது புலம்பாத குறையாக மன்றாடினார்.

''இந்த மாதிரி என்னன்னு புரியாமே நஷ்டத்திலே நடக்கிற தொழில்களைச் சரிப்படுத்தற வேலையைச் செய்யற துக்கே டெல்லியிலே ஒருத்தர் இருக்கார். 'சந்திரஜித் குப்தா'ன்னு பேர், சார்ட்டட் அக்கௌண்டெட் மட்டுமில்லே. ஹாவர்டு யூனிவர்சிடியிலே எம். பி. ஏ. பண்ணியிருக்கார், 'பிஸினஸ் கிளினிக்'னு வச்சிருக்கார், தன்னையும் 'பிஸினஸ் டாக்டர்'னு சொல்லுகிறார். தொழில் நிர்வாகத்திலே 'ஸிக் இண்டஸ்ட்ரி ரெஸ்க்யூ மெத்தட்ஸ்' (நோய்வாய்ப்பட்ட தொழில்களை மீட்கும் முறைகள்) என்று தனிப் பிரிவை மட்டும் ஆராய்ச்சி பண்ணிப் படிச்சிட்டு வந்திருக்கார். அவரு வந்து பார்த்து யோசனைகள் சொன்னப்புறம் எத்தனையோ நஷ்டப் பட்ட தொழில்கள் மீண்டும் லாபம் அடைஞ்சிருக்கு, பதினைஞ்சு நாள் அல்லது அதிகமாகப் போனால் ஒரு மாசம் நம்ம கூடவே தங்கினார்னா எங்கே கோளாறுன்னு கண்டுபிடிச்சிடுவார். அவரை வரவழைக்கலாமா?'' ஆடிட்டர் கேட்டார்.

ஆடிட்டர் சொன்ன விஷயம் கொஞ்சம் புதுமையாகவும் புரியாததாகவும் இருக்கவே சிவவடிவேலு யோசித்தார். வருகிறவர் எவ்வளவு செலவு வைப்பாரோ, என்ன கேட் பாரோ என்று எண்ணித் தயங்கினார்.

"ஆடிட்டர் சார்! எனக்கு என்னமோ இதெல்லாம் அவசியம்தானான்னு சந்தேகமா இருக்கு. ஆனல் நீங்க சொல்றப்போ நான் தட்டிச் சொல்ல முடியாது. பல வருஷமா எங்க குடும்பு வரவு செலவு உங்களுக்கு நல்லாத் தெரியும். நீங்க எது சொன்னலும் அது என் நன்மைக்காகத்தான் இருக்கும்னு ஒப்புக்கறேன். ரொம்பச் செலவு இழுத்து விட்டு டாமப் பார்த்துக்குங்க. சிக்கனமா இருந்து லாபம் சம்பாதிக்க வழி என்னன்னு ஒருத்தனைக் கூப்பிட்டு யோசனைக் கேட்கப் போய் அதைக் கண்டுபிடிக்க அவனும் நாமுமாக ஊதாரிச் செலவு பண்ணின கதையா ஆயிடக்கூடாது" என்று கவலைப்பட்டார் சிவவடிவேலு.

"அப்படி எல்லாம் ஒண்ணும் ஆகாது. கவலைப் படாதீங்க. நான் இன்னிக்கே குப்தாவுக்கு லெட்டர் எழுதிடறேன். சீக்கிரமா அவனை வரவழைச்சிடலாம்" என்றார் ஆடிட்டர்.

## 2

பிஸினஸ் டாக்டர் சந்திரஜித் குப்தாவுக்குச் சிவவடிவேலுவின் ஆடிட்டர் கடிதம் எழுதினர். மூன்றே நாட்களில் குப்தாவிடமிருந்து பதில் வந்துவிட்டது. சாதகமான பதில் தான்.

தான் அப்போது பம்பாயில் ஒரு ஸிக் இண்டஸ்ட்ரி—அதாவது நொடித்து நோய்வாய்ப்பட்ட தொழிலைச் சரிசெய்ய ஆப்ஸர்வேஷனுக்காகப் போய்க் கொண்டிருப்பதாகவும் இந்த மாதம் முழுவதும் அது சம்பந்தமாகச் செலவு செய்ய வேண்டியிருக்கும் என்றும் அடுத்த மாதம் முதல் வாரத்தில் தான் குருபுரம் வர முடியும் என்றும் குப்தா பதில் எழுதியிருந்தான். தன்னோடு தன் மனைவியும் வரக்கூடும் என்று அவன் கடிதத்தில் குறிப்பிட்டிருந்தான். விமானப் பயண டிக்கெட்டுக்கு ஏற்பாடு செய்யவும் கேட்டுக் கொண்டிருந்தான்.

"விமானத்திலேயா? ரொம்பச் செலவு ஆகுங்களே?" என்று இழுத்தார் சிவவடிவேலு.

சிவவடிவேலுவின் வெகுளித்தனத்தை ஆடிட்டர் வியந்தார். "வேற வழியே இல்லே. முழுக்க இரயில் பிரயாணமே பண்ணுல் பிரயாணத்திலேயே எட்டு ஒன்பது நாள் ஆகி விடும். குப்தா ரொம்ப பிஸி மேன். இன்னிக்குக் காலையிலே கல்கத்தா, மத்தியானம் அஹமதாபாத், மறுநாள் பம்பாய், அடுத்த நாள் டில்லின்னு அலையறவன். அவனோட வேலே அப்படி. நாம நேரே போய் அழைச்சிட்டு வரணும்." என்று ஆடிட்டர் வற்புறுத்திஞர்.

"நாம எதுக்குப் போகணுங்க? மதுரையிலேர்ந்து அந்த ஆளேயே ஒரு டாக்ஸி பிடிச்சுக் குருபுரம் வரச் சொல்லிறலாம். அல்லது என் டாட்டர் பார்கவி மதுரையிலே ஹாஸ்டல்லே தங்கிக் காலேஜ்லே படிக்குது. அது போய் அவங்களே ஏர் போர்ட்டிலே சந்திச்சு ஒரு டாக்ஸி பேசி இங்கே அனுப் பிடலாமே? இங்கேயிருந்து நாம போற ஒரு டிரிப் பெட்ரோ லும், டயர் தேய்மானமுமாவது மிச்சம் ஆகுமே? இப்போ இருக்கிற நஷ்டத்திலே அதையாவது மிச்சப் படுத்தலாமே?"

ஆடிட்டருக்கு அழுவதா சிரிப்பதா என்று புரியவில்லே. கல்ச்சர், மேனர்ஸ் இவற்றையெல்லாம் பற்றிச் சிவவடி வேலுவுக்கு எப்படிப் புரியவைப்பதென்று தெரியாமல் ஆடிட் டர் அனந்த் திணறிஞர். "நீங்க அப்படிச் செய்வது நல்லா இருக்காதுங்க. நம்ம வேலேயா டில்லியிலிருந்து வருகிற ஒரு விருந்தினரை நாமே போய் அழைச்சிட்டு வர்றதுதான் முறை."

"அப்படி நீங்க நினேக்கிறதா இருந்தால் சரி. நான் என்ன சொல்றதுக்கு இருக்கு?" என்று வேண்டா வெறுப்பாக இணங்கிஞர் சிவவடிவேலு.

ஆனல் குப்தாவும் அவன் மனேவியும் மதுரை வருவதற்கு நான்கு நாட்கள் முன்னதாகவே அவர் மகள் சூட்கேஸூம்

யையுமாகக் குருபுரத்துக்கு வந்து சேர்ந்தாள். ஏதோ போராட்டம் காரணமாகக் கல்லூரியையும் ஹாஸ்டலையும் இரண்டு வாரங்களுக்கு இழுத்து மூடிவிட்டார்களாம்!

''இப்போ அதுவும் நல்லதுதான். மிஸஸ் குப்தாவுக்கு உதவியாக இவளை இருக்கச் சொல்லிடலாம்'' என்றார் ஆடிட்டர்.

துணைக்கும் உபசரணைக்கும் ஓர் ஆள் தேவைப்படுகிற அளவு இருந்தால், மிஸஸ் குப்தா இன்னும் என்னென்ன செலவு வைக்கப் போகிறாளோ என்று செலவைப் பற்றி எண்ணிக் கவலைப்படத் தொடங்கினார் சிவவடிவேலு. நடுவில் கல்லூரி மூடப்பட்டு மகள் ஊர் வந்ததில் அவருக்கு ஏகப்பட்ட வருத்தம். 'போராட்டம் கீராட்டம் என்று அடிக்கடி படிப்புப் பாழாகிறதே?' என்று கவலைப் பட்டார் அவர்.

குருபுரம் மிராசுதார் சிவவடிவேலு அதிகப் படிப்பறிவு இல்லாத ஒரு நாட்டுப்புறப் பணக்காரர். தழும்பேறிய கன்ஸர்வேடிவ் மனப்பான்மையும் கஞ்சத்தனமும் உள்ளவர், எதையும் துணிந்து செய்யாதவர். தயங்கித் தயங்கி அடி எடுத்து வைப்பவர். பத்துக் காசு செலவழிப்பதற்கு ஐம்பது ரூபாய் பெறுமானமுள்ள கவலையைப் படுகிறவர்.

தந்தையின் முதலீட்டில் அவரோடு கூட இருந்து தொழில் நடத்தாமல் மூத்த மகன் தண்டபாணி, தனியே உத்தியோகத்துக்குப் புறப்பட்டுப் போனது இதனால்தான் என்பது ஆடிட்டருக்கே நன்றாகத் தெரியும்.

இப்படி ஒரு குடும்பத்தில் பிறந்தும், இரண்டாவது பிள்ளை குமரேசன், 'முதலாளித்துவத்தின் முதுகெலும்பை முறித்து'—என்று பட்டி மன்றங்களில் முழங்கிக் கொண்டிருந்தான். பெண் 'பார்கவி' மட்டும் சாதுவாய் அப்பாவுக்கு அடங்கிய குழந்தையாகக் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தாள். சிவவடிவேலுவுக்குப் பார்கவி செல்லப் பெண். அதனால் தான் தாம் கட்டிய ஓட்டலுக்குப் 'பார்கவி' என்றே பெயர்

சூட்டியிருந்தார். 'குடும்ப நிர்வாகம், சொத்து, எஸ்டேட் நிர்வாகம் இவைகளைப் பையன்களிடம் பிரித்து விட்டு விட்டு நிம்மதியாக மனைவியோடு காசி, இராமேஸ்வரம் என்று க்ஷேத்ராடனம் சென்று வாருங்கள்! உங்கள் மனசு நிம்மதியா யிருக்கும்,' என்று ஆடிட்டர் அனந்த் பல முறை இதமாக எடுத்துச் சொல்லியும் சிவவடிவேலு அதைக் காது கொடுத்துக் கேட்டதே இல்லை. எல்லாவற்றையும் தாமே கட்டிக் கொண்டு அழுதார், சுமைகளைத் தாங்கினார்.

''இந்நாளில் உங்களுடைய அணுகுமுறைகள் கிழடுதட்டிப் போனவை. 'ஆண்டே!' என்று விவசாயக் கூலி வாசற்படிக்குக் கீழே பத்தடி விலகி நின்று கை கூப்பிய காலத்துப் பண்ணை யார் மனப்பான்மையோடு இன்று தொழிலை ஆள முடியாது. நிறைய விட்டுக் கொடுத்துப் பழகும் தோழமை இன்று வேண்டும்,'' என்று சொற்பொழிவுகளில் பேசுவது போலவே அவரிடமும் இளைய மகன் குமரேசன் ஒருநாள் உணர்ச்சி வசப்பட்டுப் பேசியிருந்தான்.

''உன்னை மகனாகப் பெத்த குற்றத்துக்காக நீ இந்த வீட்டிலே இருக்கிறதைச் சகிச்சுக்கறேன். ஆனால் நீ என்னை மாத்தமுடியாது'' என்று சிவவடிவேலு கறாராக அவனுக்குப் பதில் சொல்லியிருந்தார்.

இப்படி மூத்த மகன், இளைய மகன் இருவருமே இரண்டு வேறு கோணங்களில் நவீனமான சிந்தனைகள் உள்ளவர்களாக இருந்தும் அவர்களை நம்பி எதையும் கொடுக்காத காரணத் தாலேயே அவர்களுடைய சிந்தனை துருப்பிடித்துப் போகும்படி செய்துவிட்டார் சிவவடிவேலு. மூத்தவன் விழித்துக் கொண் டான். அந்த வீட்டிலேயே இருந்து சீரழியாமல் தனக்குப் பிடித்த ஓர் அழகிய படித்த ஏழைப் பெண்ணைத் தேடிக் கல்யாணம் பண்ணிக் கொண்டு டில்லியில் போய் உத்தியோகம் பார்த்தான். அவனது திருமணம்கூட அவரது விருப்பத்துக்கு மாறாகத்தான் நடந்தது. சின்னவன் தூங்குவதற்கு மட்டும் வீட்டுக்கு வந்து போய்க்கொண்டிருந்தான். மகள் பார்கவிக்

கும் அவருக்கும் சண்டையோ வாக்குவாதமோ ஏற்படாத தற்குக் காரணம் அவள் அப்பாவை எதிர்த்துப் பேசுவதில்லை. கடைக்குட்டியானதால் அவளிடம் அவருக்குப் பிரியமும் அதிகம். பாசமும் நிறைய இருந்தது.

குடும்ப ஆடிட்டர் அனந்த் அந்தக் குடும்பத்துக்கு மிகவும் நெருக்கமாக வேண்டியவர், என்றாலும் சிவவடிவேலுவைப் பற்றி அவருக்கும் உள்ளூர விமரிசனங்கள் உண்டு. பட்டும் படாமலும்தான் இருப்பார். ஆனால் ஓட்டல் பார்கவி விஷயத் தில் அவரால் அப்படி இருந்துவிட முடியவில்லை. காரணம், அது அவர் கூறிய யோசனைப்படி கட்டப்பட்டது.

ஆடிட்டர் அனந்த், சிவவடிவேலு, அவர் மகள் மூவரும் மதுரை விமான நிலையத்தின் அரைவல் லவுஞ்சில் குப்தாவை யும் திருமதி குப்தாவையும் வரவேற்கக் காத்திருந்தார்கள். விமானம் தரையிறங்க இன்னும் அரைமணி நேரம் இருந்தது. ஆடிட்டர் வற்புறுத்தியதால் வாங்கப்பட்ட இரண்டு மல்லிகை மாலைகள் தயாராயிருந்தன,

''மாலை எல்லாம் எதுக்கு? நாம நஷ்டத்திலே சிரமப் பட்டுகிட்டிருக்கோம்னு வர்றவனுக்குப் புரியட்டுமே? மாலை கீலென்னு தடபுடலாப் பண்ணிட்டம்னு செழிப்பா இருக் கோம்னு நினைச்சுடப் போறாங்க'' என்றார் சிவவடிவேலு.

ஆடிட்டர் இதைக் கேட்டுச் சிரித்தார். சிவவடிவேலுவின் தழும்பேறிப்போன கட்டுப்பெட்டித்தனத்தைப் போக்கவே முடியாது போலிருந்தது.

''கஷ்டநஷ்டங்கள் வேறே. கர்டஸி வேறே. நாம நஷ்டப் படறோம்கிறதுக்காக இருபத்து நாலு மணி நேரமும் அழுது கிட்டே இருக்கணும்னு அவசியம் இல்லே. நாமும் சந்தோஷ மாயிருக்கணும், அடுத்தவங்களையும் சந்தோஷப்படுத்தணும்'' என்றார் ஆடிட்டர். இப்படி ஒவ்வொன்றிலும் சிவவடிவேலுவை ஒழுங்குபடுத்தித் தயாராக்க வேண்டியிருந்தது.

## 3

ஆறடி உயரத்துக்கு வாட்டசாட்டமாய்க் கம்பீரமாகத் தோற்றமளித்த குப்தாவைப் பார்த்ததும் சிவவடிவேலுவுக்கு ஒருவகைத் தாழ்வு மனப்பான்மையே உண்டாகிவிட்டது. அவன் மனைவி பச்சைக் கிளிபோல் அழகாயிருந்தாள். பஞ்சாபிப் பெண்கள் போல குர்த்தா—சூரிதார் அணிந்திருந் தாள். இருவருமே சிரிக்கச் சிரிக்கப் பேசினார்கள். கலகலப் பாகப் பழகினார்கள். புதியவர்கள், அன்னியர்கள்—வேற்று மொழி வேற்றுப் பிரதேசக்காரர்கள் என்ற சங்கோசங்களையும் தற்செயலாகக் கடப்பதுபோல் இயல்பாகத் தவிர்த்துவிட்டுப் பழகினார்கள். ஆடிட்டரும், அவர் மகளும் அத்தனை வேகமாக இல்லாவிட்டாலும் சிறிது நேரத்திலேயே அந்த மெல்லிய உணர்ச்சிக் கோடுகளைத் தாண்டிவிட்டுச் சுபாவமாகக் குப்தா வுடனும் திருமதி குப்தாவுடனும் பழகத் தொடங்கிவிட்டார் கள். கிணற்றுத் தவளையாகவே இருந்துவிட்ட சிவவடிவேலு தான் திணறினார். சிரமப்பட்டார். ஒட்டாமல் கஷ்டப்பட்டார். ஒதுங்கி ஒதுங்கி நின்றார்.

ஒரு பட்டிக்காட்டான் யானையைப் பார்த்தது போல அந்தப் புதியவர்களை மருள மருளப் பார்த்தார். மதுரையிலி ருந்து குருபுரத்திற்குப் புறப்படுமுன் எங்காவது அவர்களுக்குக் காப்பி சிற்றுண்டி அருந்த ஏற்பாடு செய்ய வேண்டுமென்றார் ஆடிட்டர்.

"அதுக்கென்ன? நம்ம கான்சா மேட்டுத் தெரு ராயர் தண்ணீர்ப் பந்தலிலே பிரமாதமா இட்லி, வெண்பொங்கல் ஆமவடை எல்லாம் கிடைக்கும்" என்றார் சிவவடிவேலு.

இதைக் கேட்டு ஆடிட்டருக்குச் சிரிப்பு வந்தது. ராயர் தண்ணீர்ப்பந்தல் என்பது நவீன ஓட்டல் நாகரிகம் பரவு வதற்கு முன் காலத்து மதுரையில் ஏற்பட்டிருந்த ஒரு பத்துக் கடை. அங்கே உட்கார டேபிள் நாற்காலி கிடையாது. நின்றபடியே இலையைக் கையில் ஏந்தி ராயரிடம் வாங்கிச்

சாப்பிட்டு விட்டுப் பணம் கொடுத்துவிட்டு வரவேண்டும். எல்லாமே ராயர்தான்.

குப்தாவுக்குத் தாம் கடிதம் எழுதி வரவழைத்திருந்ததால் அவனுடைய சௌகரியங்களைக் கவனிக்கும் பொறுப்புத் தமக்கு இருப்பதாக ஆடிட்டர் எண்ணினார். சிவவடிவேலு ஹில்டன் ஓபராய்க்குச் சமமாக வர்ணித்த அந்த ராயர் தண்ணீர்ப் பந்தலுக்கு அவரது மகன் குமரேசன் போன்றவர் கள் சூட்டியிருந்த செல்லப் பெயர் 'கையேந்தி பவன்' என்பது,

குருபுரம் மிராசுதார் சிவவடிவேலுவின் 'நோய்கள்' என்னென்ன என்று ஆடிட்டர் அனந்துக்கே நன்றாகத் தெரியும் என்றாலும் தம்மைப் போல் பல ஆண்டுகளாக அவரோடு நெருங்கிப் பழகுகிற ஒருவரால் அவரை மாற்ற முடியாது என்பதால்தான் பிஸினஸ் டாக்டர் என்ற பெரிய பெயரெடுத்த ஆள் ஒருவரை டில்லியிலிருந்து வரவழைத்திருந்தார். நில உச்சவரம்பிலிருந்து சொத்துக்களையும் பணத்தையும் காப்பாற் றிக் கொள்ள அவசர அவசரமாக ஓட்டல் 'பார்கவி'யை நவீனமாகக் கட்டி விட்டார். ஆனால், அதில் நவீனமான ஏற்பாடுகள் அறவே இல்லை. நாட்டுப்புறத் தன்மையே அதிகமாக இருந்தது அங்கே.

ஜமீன் குருபுரம் செங்கழுநீர் விநாயகர் கோயில் தெருவில் இருக்கும் 'ஆதிகாலத்து அசல் சைவாள் போஜன சாலை' என்ற அழுக்கடைந்த போர்டுடன் கூடிய—காலையில் வெந்நீர்ப் பழையதும், வடுமாங்காய் ஊறுகாயும், மாலையில் இடியாப்ப மும் தேங்காய்ப் பாலும் கிடைக்கிற ஒன்றாக ஓட்டல் பார்கவி இருக்க முடியாது, கூடாது என்பது ஆடிட்டரின் திடமான கருத்து. சிவவடிவேலுவின் பிள்ளைகளும் ஆடிட்டரைப் போலவே நினைத்தார்கள். ஆனால் சிவவடிவேலு மட்டும் பழையபடியே இருந்தார். 'பார்கவி'யில் பயங்கர நஷ்டம் வந்தது. தாம் படு சிக்கனமாக எல்லாக் காரியங்களையும் பார்த்துப் பார்த்துச் செய்தும் எப்படி நஷ்டம் வருகிறது என்று அவருக்குப் புரியவில்லை.

நஷ்டத்தின் காரணம் புரியாமல் குழம்பினார் சிவ வடிவேலு.

அங்கேயே சாப்பாடும் தங்க இடமும் கொடுத்து மாதம் பத்துப் பதினைந்து ரூபாய் ரொக்கச் சம்பளத்தில்தான் பரிமாறுகிறவர்கள், மேஜை துடைக்கிறவர்கள் அமர்த்தியிருந்தார். மலையடிவாரத்து ஊராகையினால் விறகும், கரியும் படு மலிவாகக் கிடைத்தன. அதனால் 'காஸ்' அடுப்புச் செலவே இல்லை. தங்குகிறவர்களைத் தவிர ரெஸ்டாரெண்ட்டில் வந்து சாப்பிடுகிறவர்களுக்குப் பில்கூடக் கிடையாது. ரெண்டு 'ரூபாய் இருபது காசு,' என்று ஏலம் போடுகிற குரலில் பரிமாறுகிற பையன்களே சொல்லிவிடுவார்கள். ஸ்டேஷனரி அச்சிடுதல் செலவுகளே குறைவு.

ஓட்டல் பார்கவியின் ஒவ்வொரு சின்ன விஷயத்திலும் அவரே முன்னின்று கவனித்ததால் ரொம்பச் சிக்கனமாகவே எல்லாம் நடந்தது.

தம்மிடம் வேலை பார்த்த பழைய விவசாயிகள் வசிக்கும் பட்டி தொட்டிகளிலிருந்து அதிகம் படிப்பு வராமல் வீட்டோடு தங்கிப் போன பையன்களை மூன்று வேளைச் சாப்பாடு, கையில் ரொக்கம் என்று பேசி மிகமிகக் குறைந்த சம்பளத்துக்கு ரூம் பாய்ஸ் ஆகவும், சர்வர்களாகவும் நியமித்திருக்கும் தைரியத்தில் மாதாமாதம் கணிசமாக லாபம் எதிர்பார்த்தார் அவர். ஆனால் லாபம் வராததோடு நஷ்டம் வந்தது.

அங்கே நகர்ப்புறங்களில் த்ரீ ஸ்டார், ஃபைவ் ஸ்டார் என்று ஓட்டல்களுக்கு ஸ்டார் வேல்யூ அளித்து நடத்துகிறவர்கள் பணத்தை வாரி இறைக்கும் ஓட்டல்கள் கூட லாபத்தை அள்ளித் தருகையில் தாம் சிக்கனமாகவே நடத்தும் ஓட்டல் ஏன் லாபம் தரவில்லை என்பது அவருக்குப் புரியாத புதிராகவே இருந்தது. குழம்பினார். இராப்பகல் தூக்கமின்றித் தவித்தார்.

அவரோடு முதலிலேயே கருத்து வேறுபாடு கொண்டு ஒதுங்கி விட்டதால் மகன்கள் இதில் அவருக்கு உதவ முன்

வரவில்லை. மகள் படிக்கிற வயதில் இதையெல்லாம் பற்றிக் கவலைப்பட முடியாது. செல்லப்பெண்ணாய் அப்பாவிடம் நல்ல பேர் வாங்கினாள்.

ஆடிட்டர் அனந்துதான் சிவவடிவேலுவின் ஃப்ரெண்டு, ஃபிலாஸபர், கைடு ஆக மீதியிருந்தார். ஆனால் அவர் சொல்வதை அப்படியே கண்ணை மூடிக்கொண்டு ஏற்கவும் சிவவடிவேலு தயாராயில்லை. ஆடிட்டர் கூறுவதையே சிவவடிவேலு கேட்டு நடக்கத் தயாராயிருப்பார் என்று தெரிந்திருந்தால் டில்லியிலிருந்து'வியாபார வைத்தியர்' அல்லது தொழில் நலிவுச் சிகிச்சை நிபுணரான குப்தாவையும் அவன் மனைவியையும் இத்தனை அரும்பாடுபட்டு வரவழைத்து இருக்க வேண்டியதில்லை. நிறையப் பணச்செலவு வைத்து பாஷையும் பழக்கவழக்கமும் புரியாத வெளி ஆள் ஒருவனை வரவழைத்துத் தான் சிவவடிவேலுவுக்குச் சிகிச்சையளித்தாக வேண்டும் போலிருந்தது. நாட்டு வைத்தியமும். கை மருந்துகளும் அவரைக் குணப்படுத்தப் போதாதென்று ஆடிட்டர் விமானத்தில் 'மருந்தை' வரவழைத்திருந்தார். டில்லியிலிருந்து வரவழைத்திருந்தார்.

பாண்டியனில் முதலில் ஃப்ரூட் ஜூஸ், அப்புறம் ஆரஞ்சு மர்மலேட், கார்ன் ப்ளேக் மில்க், பிரட் டோஸ்ட், ஸ்கிராம்பிள்டு எக், காப்பி என்று குப்தாவும், மிஸஸ் குப்தாவும் ஆர்டர் செய்தார்கள். ஆடிட்டரும் அதே அயிட்டங்களைச் சொன்னார். பார்கவி. மசால் தோசையும் காப்பியும் என்றாள். சிவவடிவேலு வெறும் காப்பி மட்டும் போதும் என்று தம்மைச் சிக்கனமாக நிறுத்திக் கொண்டார். பில்லைப் பற்றிய பயம் அவருக்கு.

மொத்தமாக பில் சர்வீஸ் சார்ஜ் உட்பட 167 ரூபாய் எழுபது காசு வந்தது. ஐந்து ரூபாய் டிப்ஸ் கொடுத்தார் ஆடிட்டர். பில்லை ஆடிட்டர்தான் கொடுத்திருந்தார் என்றாலும் பின்னால் மொத்தச் செலவுக் கணக்கையும் சிவவடிவேலுதான் ஏற்கவேண்டியிருக்கும்.

"என்ன மிஸ்டர் அனந்த்? மிஸ்டர் சிவவடிவேலு ஏன் வெறும் காப்பியோடு நிறுத்திக் கொண்டார்? அவருக்குப் பசி இல்லையா?" என்று குப்தா ஆங்கிலத்தில் ஆடிட்டரைக் கேட்க, ஆடிட்டர் ஒரு கணம் தயங்கி யோசித்து, "ஹி இஸ் ஆல்வேஸ் எ புவர் ஈட்டர்..." என்று சமாளித்தார். வேறு என்ன சொல்வது?

ஆனால் அதே சமயத்தில் மிஸஸ் குப்தா தணிந்த குரலில் பார்கவியைச் செல்லமாகக் கடிந்து கொண்டாள். "நீ எக், ஃபிஷ் எல்லாம் சாப்பிடணும் அம்மா! இருபது வயசுக்கு மேல் என்கிறாய்! ஆரோக்கியமான வளர்ச்சியே இல்லையே. எலும்பும் தோலுமாகச் சோனிப் பெண்ணாய்க் காட்சியளிக்கிறாயே? இதே பதினெட்டு இருபது வயசில் வடக்கே ஒரு பஞ்சாபிப் பெண் பளபளவென்று அரபிக் குதிரை மாதிரி வாளிப்பாய் மின்னிக்கொண்டிருப்பாள், நாலைந்து வாலிபப் பையன்கள் அவள் பின்னால் பைத்தியமாய்ச் சுற்றிக் கொண்டிருப் பான்கள். நீ என்னடா என்றால்...நோயாளிப் பெண் மாதிரி இருக்கிறாயே?" என்று கூறிக் கன்னத்தைச் சிமிட்டினாள். மேலும் கிண்டலில் இறங்கினாள். "உங்கப்பா பார்கவின்னு பேர் வச்ச நீயும் ஆரோக்கியமாயில்லே, உன்னைப் போலவே பார்கவின்னு பேர் வைக்கப்பட்ட ஓட்டலும் ஆரோக்கியமா இல்லே. ரெண்டையுமே சரிப்படுத்தியாகணும்."

பார்கவியின் முகம் சிவந்து அவள் வெட்கப்பட்டாள்.

இந்தக் குப்தாவும் இவன் மனைவியும் எப்படி பார்த்த மறு வினாடி சொந்த மனிதர்களிடம் பழகுகிற மாதிரி அன்னியர் களிடம் பழகி ஒட்டிக் கொண்டு உறவாட முடிகிறது என்ற வியப்பிலிருந்து சிவவடிவேலுவால் இன்னும் மீளவே முடிய வில்லை.

அவர்கள் பாண்டியனில் சிற்றுண்டி காப்பியை முடித்துக் கொண்டு காரில் குருபுரம் புறப்பட்டார்கள். பிரயாணத்தின் போதே அந்த ஊர் சுற்றுப்புறம் விவசாய நிலைமை பற்றி

எல்லாம் ஆடிட்டர் குப்தாவுக்கு விவரித்துக் கொண்டுவந்தார். சிவவடிவேலு எப்போது எந்த நிர்ப்பந்தம் காரணமாக நிலங்களை விற்று ஒட்டலில் முதலீடு செய்ய நேர்ந்தது என்பதையும் விவரமாகக் கூறினார்.

''எங்கு பார்த்தாலும் பச்சப்பசேல் என்றிருக்கிறது. இயற்கை அழகும் ஓசை ஒலிகளற்ற. நாய்ஸ் பொல்யூஷன் இல்லாத அமைதியும் எனக்கு மிகவும் பிடிந்தமானவை. இந்த மாதிரிச் சூழ்நிலையில் மலையடிவாரத்தில் ஓர் ஒட்டல் இருந்தால் அது ஸ்விட்ஜர்லாந்தில் தங்கின மாதிரிச் சுகமளிக்கக் கூடிய விஷயம். 'ஹாலிடே ரிஸார்ட்' என்று இப்படி இடங்கள் ஐரோப்பாவில் பிரமாதப்படுகின்றன. ஹனிமூன் வருகிற இளம் தம்பதிகள் வரலாம். 'வீக் எண்ட்'டை என்ஜாய் பண்ண வருகிறவர்கள் இந்த இடத்தைத் தேர்ந்தெடுக்கலாம், சினிமாவில் கிராமாந்தர-ரூரல்- அவுட்டோருக்காக — லொகேஷன் தேடி வருகிறவர்கள் இங்கே வரலாம். எவ்வளவோ வாய்ப்பு இருப்பதாகத் தெரிகிறது. அப்படி இருந்தும் உங்கள் கிளையண்ட் சிவவடிவேலு இங்கு ஒரு நவீன ஓட்டலை நஷ்டத்தில் நடத்துவது வேடிக்கைத்தான். நீங்கள் மட்டும் ஒத்துழைத்தால் எல்லாம் ஸெட்ரைட் பண்ணிவிடுவேன்'' என்று உறுதியாகச் சொன்னான் குப்தா.

அவன் ஆங்கிலத்தில் கூறிய இந்த விவரங்களை அருகே இருந்த சிவவடிவேலுவுக்குத் தமிழில் சவிஸ்தாரமாக மொழி பெயர்த்துச் சொன்னார் ஆடிட்டர். உடனே சரிப்படுத்தக் குப்தா ஏதாவது மந்திரவாதியா என்ன என்று ஆச்சரியப் பட்டார் சிவவடிவேலு.

## 4

ஆருபுரத்திற்குள் நுழைந்ததும் கார் நேரே சிவவடிவேலுவின் பங்களாவிற்குள் போயிற்று.

ஆடிட்டர் அனந்த், ''இங்கேதான் நீங்கள் இருவரும் தங்கப் போகிறீர்கள். இது மிஸ்டர் சிவவடிவேலுவின் பங்களா...அவருடைய மகள் பார்கவி உங்கள் தேவைகளைக் கவனித்துக் கொள்வாள்'' என்று குப்தாவிடம் சொன்னார்.

குப்பா அதை ஏற்கவில்லை. உடனே மறுத்துவிட்டான்.

''நோ...நோ...நான் இங்கே தங்கறதிலே அர்த்தமே இல்லே. ஆன் த ஸ்பாட் ஸ்டடி பண்ணணும்னு நான் ஓட்டல் பார்கவியிலேயே தங்கியாகணும்'' என்றான் அவன்.

ஓட்டல் பார்கவியில் அவனுக்கு வேண்டிய சௌகரியங்களும் உபசரணையும் கிடைக்குமா என்று யோசித்துத் தயங்கினார் ஆடிட்டர்.

பார்கவியில் அங்கே மானேஜர் முதல் மேஜை துடைக்கிறவன் வரை யாருக்கும் ஆங்கிலமோ இந்தியோ சுட்டுப் போட்டாலும் ஒரு வார்த்தை கூட வராது.

இதற்கிடையே திருமதி சிவவடிவேலு, ''வாங்க ஐயா! வாங்கம்மா.'' என்று எதிர்கொண்டு இருவரையும் வரவேற்றாள்.

''மிஸ்டர் குப்தா! ஷீ இஸ் மிஸிஸ் சிவவடிவேலு. இவள் உங்களுக்கும் உங்கள் மனைவிக்கும் நல்வரவு கூறுகிறாள்,'' என்று குப்தாவிடம் கூறினார் ஆடிட்டர்.

சந்திரஜித் குப்தாவும் திருமதி குப்தாவும், ''நமஸ்தேஜீ'' என்று அந்தம்மாளைக் கைகூப்பி வணங்கினர்.

உடன் வந்த பார்கவி மாடியில் அவர்களுக்கான விருந்தினர் அறையைத் தயார்ப்படுத்துவதற்குப் போயிருந்தாள். ஆடிட்டருக்குத் தர்மசங்கடமாயிருந்தது. திருமதி சிவவடிவேலுவுடன் அவர்களை விட்டு விட்டுப் போகலாமென்றால் மூவரும் ஒருவருக்கொருவர் பேசிக் கொள்ளாமல் உட்கார்ந்திருக்க வேண்டும். சிவவடிவேலுவிடம் விட்டுச் செல்வதென்றாலும்

அதே கதிதான். தானோ, பார்கவியோ குப்தா தம்பதிகளுடன் கட்டாயமாக உடன் இருந்தாக வேண்டிய நிர்ப்பந்தத்தை இப்போது ஆடிட்டர் உணர்ந்தார், பார்கவியைக்கூப்பிட்டு அவள், அவளுடைய அம்மா, குப்தா தம்பதிகள் நால்வரையும் வீட்டு முன் ஹாலில் உட்கார வைத்துவிட்டு சிவவடிவேலுவை அழைத்துக் கொண்டு பங்களா முகப்பில் இருந்த தோட்டத் துக்கு ஆடிட்டர் வந்தார்.

"அவன் இங்கே தங்க மாட்டானும், பார்கவியிலே தங்கினல்தான் அதன் பிரச்சினைகளை ஸ்டடி பண்ண முடியு மாம்."

"அடி ஆத்தாடீ! அங்கே சரிப்பட்டு வராதே. இங்கே தங்கிக்கிட்டுப் போய்க் கவனிக்கட்டுமே?"

"இல்லே! அவன் அப்படிச் செய்ய ஒத்துக்க மாட்டான்னு தோணுது. அங்கேயே மாடியில் நல்ல டபிள் பெட் ரூம் பார்த்து ஒண்ணு குடுத்துடுங்க."

சிவவடிவேலு கையைப் பிசைந்தார். அவர் முகத்தில் பதற்றம் தெரிந்தது. வியர்த்தது.

"அப்ப ஒண்ணு செய்யலாம். இவங்க இங்கயே கொஞ்ச நேரம் பேசிக்கிட்டு இருக்கட்டும். அதுக்குள்ள நாம ரெண்டு பேரும் போயி ஒரு ரூமை ஒழுங்கு பண்ணிட்டு வந்திருவோம்" என்றார் சிவவடிவேலு.

அவர் பதறுவதிலிருந்து பார்கவியில் குப்தா தங்குவதற்கு ஏற்ற தரத்தில் ரூம்கள் எதுவும் இராது என்று புரிந்தது. திறப்பு விழாவுக்குப் பின் ஆடிட்டர் இரண்டு வஷருங்களாக அந்தப் பக்கம் எட்டிப் பார்க்கவே இல்லை. சிவவடிவேலு கொடுத்த கணக்கு வழக்கு விவரங்கள் சிட்டைகள், டேபுக், லெட்ஜர்களிலிருந்து பேலன் ஷீட் போட்டுக் கொடுத்ததோடு சரி.

ஆனால் இப்போது போய்ப் பார்த்தால் உண்மை நிலை பரிதாபமாயிருந்தது. வாஷ்பேசின் உடைந்து போய்ச் சில ரூம்கள், கண்ணாடி உடைந்து சில ரூம்கள், லெட்ரீன் பீங்கான் உடைந்து சில ரூம்கள். ஜன்னல் கொக்கி உடிந்து சில ரூம்கள் என்று தாறுமாருகி இருந்தன.

வெளியூர் ஆட்கள் அதிகம் வராததாலும் அக்கம்பக்கத்துக் கிராமத்து ஆட்கள் தங்கியதாலும் அறைகளை நாற அடித்திருந்தார்கள். சுவரெல்லாம் ஒரே குங்குமக் கறை. மூலைகளில் தாம்பூலம் போட்டுத் துப்பிய வெற்றிலைச் சாற்றுக் கறை, ஒட்டடையும் நூலாம்படையும் காடு மண்டியிருந்தன. அறைக்குள் புகை படிந்திருந்தன. இருந்தும் எப்படியோ சிரமப்பட்டு மலைத் தொடரைக் காண்கிற மாதிரி வியூ இருந்த ஒரு காற்ரேட்டமான அறையைச் சுத்தம் செய்து ஒழுங்கு படுத்திக் குப்தாத் தம்பதியினருக்குத் தயார்ப்படுத்திஞர்கள்.

மிராசுதார் சிவவடிவேலுவுக்குச் சொந்தமாக இருந்த ஓர் ஐம்பது ஏக்கர் தென்னந் தோப்பில் நடுவாக அந்த ஒட்டல் கட்டப்பட்டிருந்தது. ஊரிலிருந்து கொஞ்சம் ஒதுக்குப்புறமாக இருந்தது. இயற்கையழகு கொஞ்சும் இடமாக இருந்ததால் ஓர் ஒட்டலுக்கு ஐடியலான லட்சணங்கள் கொண்டிருந்தும் சரியாக மெயின்டெயின் பண்ணாமல் கெட்டிருந்தது, சீரழிந்து போயிருந்தது.

இப்படி இங்கே குப்தா தம்பதிகளுக்கு அறையயைச் சுத்தம் செய்து தயாராக்க வேண்டியிருந்ததால் அவர்கள் நீராடி உடை மாற்றிப் பகலுணவை முடிக்கச் சிவவடிவேலுவின் பங்களாவிலேயே தற்காலிகமாகத் தங்க ஏற்பாடு செய்யப்பட்டது. குப்தா தயக்கத்துக்கும் ஆட்சேபணைக்கும் பின்பே தற்காலிகமாக அதற்கு இணங்கிஞன்.

"மிஸ்டர் குப்தா! இன்று பிற்பகலில் நீங்கள் விரும்புகிறபடி ஒட்டல் பார்கவியிலேயே தங்கிக் கொள்ளலாம். வீடு தேடி வந்தவர்களை ஒருவேளை சாப்பிடச் சொல்லாமல்

அனுப்ப முடியாது என்று திருமதி சிவவடிவேலு பிடிவாதம் பிடிக்கிருள். அந்தம்மாளுடைய வேண்டுகோளுக்காகவாவது நீங்கள் இன்று பிற்பகல் வரை இங்கே வீட்டில் தங்கியாக வேண்டியது அவசியம்,'' என்று மன்ருடி ஆடிட்டர் குப்தாவைச் சம்மதிக்க வைக்க வேண்டியதாயிற்று.

''மரணப்படுக்கையில் சாகக் கிடக்கிற ஒரு நோயாளிக்கு வைத்தியம் செய்ய வருகிற டாக்டர் நடுவழியில் தங்கவோ ஓய்வு எடுக்கவோ, உபசரணைகளை ஏற்கவோ முடியாது. நோயாளியை எவ்வளவு விரைந்து காப்பாற்ற முடியுமோ அவ்வளவு விரைந்து காப்பாற்றுவதே அவரது முதல் வேலை யாக இருக்க வேண்டும். எனக்கும் அது பொருந்தும். எனது நோயாளியை நான் முதலில் அட்டெண்ட் செய்து தீரவேண் டும். மற்றதெல்லாம் அப்புறம்தான்,'' என்று கருராக வாதித் தான் குப்தா. ஆடிட்டருக்கும் அவன் சொல்வது நியாய மென்றே பட்டது.

ஆனுல் குப்தா வைத்தியம் செய்ய வேண்டிய நோயாளி ஒட்டல் பார்கவியா, அல்லது மிஸ்டர் சிவவடிவேலுவா என்பதைத்தான் ஆடிட்டரால் தீர்மானமாகத் தெரிந்து கொள்ள முடியாமல் இருந்தது.

ஒட்டல் பார்கவி என்ற தாவர ஜங்கம சொத்துக்கு மருந்து கொடுத்து வைத்தியம் செய்ய முடியாது. சிவவடிவேலுவோ மருந்து சாப்பிட மறுத்து அடம் பிடிக்கும் முரட்டுக் குழந்தை போன்றவர். என்ன செய்வது?

குப்தா எவ்வளவுக்கெவ்வளவு ஓட்டல் பார்கவியின் ஆரோக்கியக் குறைவைப் பற்றிக் கவலைப்பட்டாரோ, அவ்வளவுக்கவ்வளவு திருமதி குப்தா குமாரி பார்கவியின் ஆரோக்கியத்தைப் பற்றிக் கவலைப்பட்டாள். அவளுக்குச் சிவவடிவேலுவின் மகள் பார்கவியை மிகவும் பிடித்து விட்டது.

''இந்த வயசிலே நீ இப்படி நோயாளித் தோற்றத்தோடு முடங்கிக் கிடக்கக் கூடாதடி பெண்ணே! புள்ளிமான் போல்

உற்சாகமாகத் துள்ளித் திரிய வேண்டும். பாலோடு காட்லிவர் ஆயில் கலந்து சாப்பிடு. சிக்கன் எஸென்ஸ் அல்லது சூப் எடுத்துக் கொள். எக்ஸர்ஸைஸ் பண்ணு ஸ்லிம்மா இருக்கணும். அதோட அழகா லட்சணமாவும் இருக்கணும். நாலு பேரோட கலகலப்பா சிரிச்சுப் பேசப் பழகணும். தலைக்கு 'எக்' ஷாம்பு யூஸ் பண்ணு. இன்ன சோப்பு ஃபேர் காம்ப்ளெக்ஷன் தரும்,'' என்றெல்லாம் சொந்தப் பெண்ணுக்குச் சொல்வது போல் சொல்லிக் கொண்டிருந்தாள் திருமதி குப்தா. பார்கவிக்கு அவளையும் அவளுக்கு பார்கவியையும் ரொம்பவும் பிடித்துப் போயிற்று.

குப்தாவும், திருமதி குப்தாவும் ஓட்டலுக்குப் போய்த் தங்கிய பின்பும் பார்கவி பெரும் நேரத்தைத் திருமதி குப்தாவுடனேயே செலவழித்தாள். இரவில் தூங்கும் நேரத்துக்கு மட்டும்தான் வீட்டுக்கு வந்தாள் அவள்.

பார்கவி மலைமேலிருந்த ஆஞ்சநேயர் கோவிலுக்குத் திருமதி குப்தாவை ஒருநாள் அழைத்துச் செல்ல விரும்பினாள். ஆஞ்சநேயர் டெம்பிள், அனுமார் டெம்பிள் என்று சொல்லிப் பார்த்தும் அது என்ன கோவில் என்று குப்தாவின் மனைவிக்குப் புரியவே இல்லை. அப்புறம் இந்தியில் அதை எப்படிச் சொல்வதென்று ஆடிட்டர் மாமாவைக் கேட்டாள்.

''இந்தியிலே 'பஜ்ரங்பலின்'னு ஆஞ்சநேயர். பஜ்ரங்பலி மந்திர்னு சொல்லு. புரியும். என்றார் ஆடிட்டர்.

குப்தா கருமமே கண்ணாக, வந்த வேலையில் மூழ்கி விட்டான். குப்தாவோடு கூட ஆடிட்டர் இருந்தார். தேவையான போது சிவவடிவேலுவையும் உடன் வைத்துக் கொண்டார்கள். மற்ற வேளைகளில் அவரைத் தவிர்த்தார்கள்.

வந்த முதல் ஐந்து நாள் ஆப்ஸர்வேஷனுக்காகச் செலவழித்தான் குப்தா. நல்ல கூட்ட நேரத்தில் ரெஸ்டாரெண்டில் போய் உட்கார்ந்து கவனித்தான். பரிமாறும் பையன்களில் சிலர் வேட்டியை மடித்துக் கட்டியிருந்தனர்.

வேறு சிலர் இடுப்பில் கைலியும் பனியனுமாகப் பரிமாறினர். தலையைச் சொறிந்தனர். மூக்கு நோண்டினர். உண்ணும் பிளேட்டுகளில் பண்டங்களை 'ணங்'கென்று ஓசையெழ வைத்தனர். கொண்டு வந்து வைக்கிற வேகத்தில் தண்ணீர், காப்பி எல்லாம் கஸ்டமருடைய வேட்டி சட்டையில் தெறித்து விடும்போலிருந்தது சில சமயங்களில்.

விலை அதிகமான இரண்டு ஸ்வீட், ஒரு மசாலா தோசை காப்பி ஐஸ்க்ரீம் இத்தனையும் சாப்பிட்ட ஒரு கஸ்டமரின் பில் ஒன்றரை ரூபாய் என்று அவருக்குப் பரிமாறிய சர்வர் குரல் கொடுத்தான். போகிற போக்கில் அந்தக் கஸ்டமர் டிப்ஸ் போல் சர்வரிடம் ஒரு முழு ஒரு ரூபாய்த் தாளைக் கொடுத்து விட்டுப் போவதைக் குப்தா கவனித்தான். விலை விவரங்களை விசாரித்து அந்தக் கஸ்டமர் சாப்பிட்டதற்கு உண்மையில் என்ன பில் ஆகுமென்று பார்த்தால் கிட்டத்தட்ட ஆறு ரூபாய்க்கு மேல் ஆயிற்று. சர்வருக்கு ஒரு ரூபாய் லஞ்சம் கொடுத்ததால் மொத்தம் ரெண்டரை ரூபாயில் அந்தக் கஸ்டமர் சகலத்தையும் முடித்துக் கொள்ள முடிந்தது.

ஓட்டல் பார்கவி ஸ்டோர் கீப்பர்—சரக்கு மாஸ்டரிடம் சாமான்கள் கொடுக்கும்போது ஒருநாள் கவனித்துக் குறித்துக் கொண்டான் குப்தா. பாதாம் கீருக்காக ஓர் எடையளவு பாதாம் பருப்புத் தரப்பட்டது. பகலில் தன் அறையிலிருந்து குப்தாவே ஒரு பாதாம்கீர் வரவழைத்துச் சாப்பிட்ட போது நிலக்கடலைப் பருப்பை அரைத்துக் கேஸரிப் பவுடரால் நிறமூட்டப்பட்டுக் கூளிரப் பண்ணிய கீராக இருந்தது அது. ஸ்டோர் கீப்பரும் உடந்தை என்று புரிந்தது.

அங்கே சரக்கு மாஸ்டருக்கு என்ன சம்பளம் என்று விசாரித்ததில் மிகவும் குறைவாக இருந்தது. ஆடிட்டருடன் குப்தா மெல்ல மெல்லத் துப்பறிந்ததில் எந்த மளிகைக் கடை 'பார்கவி'க்கு மளிகைச் சாமான்கள் சப்ளை செய்ததோ அதே கடைக்குப் பாதாம் பருப்பு திரும்பிப் போவது தெரிந்தது.

சரக்கு மாஸ்டருக்கு நிலக்கடலைப் பருப்பையும் அந்தக் கடையே வழங்கி வந்தது. மளிகைக் கடைக்காரர் தனியே ஒரு தொகை ரகசியச் சம்பளமாகச் சரக்கு மாஸ்டருக்கும் ஸ்டோர் கீப்பருக்கும் கொடுத்து வந்ததையும் கண்டு பிடித்தார்கள். துப்புத் துலங்கியது.

பார்கவி லாட்ஜில் செக்ஷனை நிர்வகித்து வந்த கரும்பாயிரம் என்ற ஆள், தங்க வருகிற ஆட்களிடம் எல்லாம் கடுகடுப்பாகப் பேசினான். ரிஜிஸ்தர்—பில்—ரசீது இல்லாமலே அக்கம்பக்கத்துக் கிராமங்களிலிருந்து குருபுரத்துக்கு செகண்ட் ஷோ சினிமா பார்க்க வந்து இரவே ஊர் திரும்ப முடியாமல் அதிகாலை முதல் பஸ்ஸுக்கு ஊர் திரும்புகிற பலரிடம் ஐந்து, பத்து என்று ரொக்கம் வாங்கிக் கொண்டு அறைகளில தங்க விட்டான். அவனுடைய சம்பளமும் மிக மிகக் குறைவு என்பதைக் குப்தா கவனித்தான். ஆப்ஸர்வேஷன் முடிகிறவரை இதையெல்லாம் பரம ரகசியமாக வைத்துக் கொள்ளும்படி குப்தா ஆடிட்டரிடம் கேட்டுக் கொண்டிருந்தான். சிவவடிவேலுக்குக்கூட அவர்கள் எதையும் சொல்லவில்லை.

## 5

ஹோட்டல் பார்கவியின் போர்டிங் லாட்ஜிங் நடவடிக்கைகளை 'ஆப்ஸர்வ்' செய்ததோடு விடாமல் ஆடிட்டரிடம் சில வருடக் கணக்கு விவரங்கள், பாலன்ஸ் ஷீட் எல்லாவற்றையும் வாங்கிப் பார்த்தான் குப்தா. துருவித் துருவிப் பார்த்தான்.

அங்கே ஹோட்டல் பார்கவி ஆரம்பித்தது முதல் ஒன்றரை வருடத்திலேயே மின்விசிறிகள், ஹீட்டர்கள் முதலிய எலெக்ட்ரானிக் சாமான்கள் ரிப்பேர் வகையில் நம்ப முடியாத செலவுத் தொகைக்குப் பில்கள், ரசீதுகள் இருந்தன. புதிய மின்விசிறி

கள். புதிய வாட்டர் ஹீட்டர்களில் முதல் வருடமே ரிப்பேர் ஆக வாய்ப்பில்லை. ஆனால் ரிப்பேர் பில்கள் ரசீதுகள் சரியா யிருந்தன.

ரிப்பேர் பில்கள் ரசீதுகளில் ஒரே குறிப்பிட்ட எலெக்ட்ரிகல் சப்ளேயரின் பெயர் இருந்தது. எப்படி எப்படியோ உளவறிந்த தில் அந்தக் கம்பெனி வெறும் பில்கள் ரசீதுகள் மட்டுமே கொடுத்து ஹோட்டல் பார்கவி மானேஜருடன் தொகையைப் பங்கிட்டுக் கொண்டிருப்பது தெரிந்தது. இந்த வகையில் பயங்கர மோசடி இருந்தது.

தம் சொந்த மகன்களைக் கூட நம்ப மறுத்த சிவவடிவேலு விசுவாசமான ஆட்கள் என்று நம்பிக் குறைந்த சம்பளத்துக்கு வேலைக்கு வைத்திருந்த அதிகப் படிப்பில்லாத ஆட்கள் புகுந்து விளையாடியிருந்தனர்.

"சிவவடிவேலு நிலங்கரைகளைக் கவனித்து வந்த தமக்குப் பழக்கமான விவசாயக் குடும்பத்து ஆட்களை நம்பி எல்லாம் விட்டிருக்கிறார். அவருடைய குருட்டுக் கணக்கு தெய்வ பக்தியுள்ள அதிகப் படிப்பில்லாத, நடுத்தரக் குடும்பத்து ஆட் கள் தப்புத் தண்டாவுக்குப் போக மாட்டார்கள் என்பது, அந்த நம்பிக்கையிலேயே ஏமாந்து விட்டார். சரியான முறையில் அவர் கணிக்கவில்லை," என்றார் ஆடிட்டர்.

உடனே குப்தா, சிவவடிவேலுவின் மூத்த மகனைப் பற்றி விசாரித்தான்.

"தண்டபாணி—தங்கமான பையன். நல்லசுறுசுறுப்பு. பி.காம். படிச்சு ஃபர்ஸ்ட் கிளாஸ் பாஸ் பண்ணினான். இவ ரோட பிசுநாறித்தனங்கள் பிடிக்காமல் காதல் கல்யாணம் பண்ணிக் கொண்டு டில்லியில் போய் உத்தியோகம் பார்க் கிறான்," என்று ஆடிட்டர் கூறியவுடன், "மற்றொரு பையனைப் பற்றியும் சொல்லுங்கள்," என்று குப்தா ஆவலாக விசாரித் தான். ஆடிட்டர் குமரேசனைப் பற்றியும் அவனுக்குச் சொன் னார்.

எல்லாவற்றையும் கேட்டுவிட்டுக் குப்தா கூறலானான். ''ஹோட்டல் தொழில், விவசாயம் மாதிரி இல்லே. இப்ப விதைச்சோம். நாளை அறுப்போம்னு முடிச்சிடக் கூடியதும் இல்லே. விவசாயத்திலே எப்பவாவதுதான் களை எடுக்கணும். இதுலேயோ தினசரி களை எடுத்துக்கிட்டே இருக்கணும், இல்லேன்னா புதர் மண்டிப் போயிடும். சிவவடிவேலு தம்முடைய கஞ்சத்தனத்தினாலே குறைஞ்ச சம்பளத்துக்கு ஆள் தேடறதா நெனைச்சுக்கிட்டுக் கிம்பளம் பண்ணிக்கிற ஆளா உள்ளே விட்டிருக்கார். இதே ஆட்களை வச்சிக்கிட்டு இனிமே இந்த ஒட்டலை உருப்படியா வளர்க்க முடியும்னு எனக்குத் தோணலே. என்னதான் இனிமேல் சம்பளத்தைக் கூடக் கொடுத்தாலும் கிம்பளம் பண்ற வழிகள் இவங்களுக்குப் பழக்கமாயிட்டதாலே இனிமே இவங்க அதிகச் சம்பளம் கிடைச்சாலும் அந்தப் பழைய கிம்பளப் பழக்கத்தைக் கைவிடமாட்டாங்க. சம்பளத்தையும் அதிகமாகக் கொடுத்து இதே ஆளுங்களை வச்சுக்கிறது ரெட்டை நஷ்டம் ஆயிடும்?''

''என்னதான் செய்யலாம்? ஒரு வழி தெரிஞ்சாகணுமே இப்போ.''

''ஒட்டலைக் குளோஸ் பண்ணணும்.''

''அதுக்காகவா இத்தனை சிரமப்பட்டு டில்லியிலிருந்து உங்களைக் கூப்பிட்டோம்? இந்த யோசனையை நானே சிவவடிவேலுவுக்குச் சொல்லியிருப்பேனே?''

''சொல்லி முடிக்கிறதுக்குள்ளேயே அவசரப்படறீங்களே மிஸ்டர் அனந்த். முழுக்கக் கேளுங்க, குளோஷர் நோட்டீஸ் ஒட்டி இப்போ இருக்கிற ஆட்களை முழுக்கக் கணக்குத் தீர்த்து அனுப்பிடணும் முதல்லே அதைச் செய்தாகணும்.''

''அப்புறம்...''

''ரெண்டு மூணு மாசம் சீரமைப்புப் பணிகளைச் செய்து முடிச்சு மறுபடியும் புது ஆட்களை நல்ல சம்பளத்திலே வேலைக்கு

வைத்தபின் திறக்கணும். அதுக்குள்ளே ஹோட்டல் லுக், தரம், சர்வீஸ் வசதிகள் எல்லாத்தையும் முதல்தரமா மாத்தி 'ரெனவேட்' பண்ணிடணும்.''

''மூணு மாசம் கழிச்சுத் திறக்கறப்போ இதிலேயே நாலேஞ்சு வம்புக்கார ஆளுங்க டிஸ்பியூட் கிளப்பினுங்கன்னு என்ன செய்மறது மிஸ்டர் குப்தா?''

''புதுசாத் தொடங்கறப்போ எல்லாத்தையுமே புதுசாப் பண்ணிடணும். பேரைக் கூட 'ஒட்டல் நியூ பார்கவி'ன்னு மாத்திடனும்.''

''சிவவடிவேலு சென்டிமெண்டல் பேர்வழியாச்சே பேரை மாத்தச் சம்மதிப்பாரோ இல்லையோ? எத்தனையோ யோசனை பண்ணி அவரோட ஆஸ்தான ஜோசியரைக் கலந்து பேசி வச்ச பேர் இது.''

''எனக்கும் 'நியூமராலஜி' கொஞ்சம் தெரியும் மிஸ்டர் அனந்த். 'ஹோட்டல் பார்கவி' என்பது (Hotel Bargavi) 12 எழுத்து. ஹோட்டல் 'நியூ பார்கவி' என்பது 15 எழுத்து. பன்னிரண்டைக் கூட்டினுல் மூன்று; பதினைந்தைக் கூட்டினுல் ஆறு. இரண்டும் ஒரே மாதிரி வகுபடுகிற நம்பர்தான். முதலில் இருந்த பேரைப் போலத்தான் இதுவும். சிவவடி வேலுவோ அவரோட ஜோஸ்யரோ இந்தப் புதுப் பெயரை ஆட்சேபிக்க மாட்டாங்க'' என்றான் குப்தா.

அவன் வெறும் பிஸினஸ் டாக்டராக மட்டும் இல்லை. சராசரி மனிதர்களின் பொதுவான பலவீனங்களை எதிர்பார்த்து அதை ரெடிமேடாகச் சந்தித்து உடனே சரிப்படுத்தும் பொது அறிவு அவனுக்கு இருந்தது. சிவவடிவேலுவின் நியூமரா லிஜிக்கும் சேர்ந்து இடம் வைத்தே புதுப் பெயரைத் தேர்ந் தெடுத்திருந்தான் அவன்.

''சும்மா ஒரு 'நியூ'வை நடுவிலே நுழைக்கச் சட்டரீதி யாகப் புது ஹோட்டல்னு பேர் பண்றதுக்காக மட்டும் இல்லே

மிஸ்டர் அனந்த். புதுப் பார்கவியிலே எல்லாமே அப்டு டேட்டாக இருக்கிறதோட ஏற்பாடுகள் எல்லாம் ஃபூல்ப்ரூஃபா—பக்காவாவும் புதுசாகவும் இருக்கணும். டாக்ஸ் கட்டினாலும் பரவாயில்லே! பில் போடணும். ஒரு சர்வர் கிச்சன்லேர்ந்து எடுத்திட்டு வர்ற அயிட்டங்களைக் குறித்துக் கொள்ளக் கிச்சன் வாசல்லேயே பில் போடற ஆள் உட்காரணும், ராத்திரி ஓட்டலை மூடறபோது இந்தக் கிச்சன்கேட் பில் ஆள் கொடுக்கிற கணக்கும் கேஷ் டேபிள் ரெவின்யூவும் சரியாக இருக்கணும், இல்லாட்டி ரெஸ்டாரண்ட் உருப்படாது.''

''அதாவது ஒரு சர்வர் கிச்சன்லேயிருந்து எடுத்துட்டு போகிற பண்டங்களை ஆர்டர் மாதிரி இந்தக் கிச்சின் கேட் பில் மேக்கர் கிட்டச் சொல்லி எடுத்துட்டுப் போகணும். அப்புறம் அந்த பில் மேக்கரே எடுத்துப் போன பண்டங்களுக்குத் தக்கபடி பில்லைப் போட்டுச் சர்வர் மூலம் கஸ்டமர் டேபிளுக்கு அனுப்புவார், இல்லையா? அதாவது ஒரு புது உத்தியோகம் கிரியேட் பண்றீங்க?''

''பார்கவிக்கு வேண்டுமானால் இது புதுசா இருக்கலாம். பம்பாய், டில்லி, கல்கத்தா, சென்னையில் ஏற்கனவே பல பெரிய ஹோட்டல்களில் இது நடைமுறையிலே இருக்கு. பைதி பை, இன்னொன்றும் முக்கியம். இப்ப உங்க சிவ வடிவேலு சர்வருங்களா வச்சிருக்கிற ஆளுங்க எல்லாம் ஒண்ணு ஆஸ்பத்திரியிலே டைப்பாய்டிலே கிடந்து பிழைச்சு வந்தவங்க மாதிரி இருக்காங்க, சர்வருங்க ரிஸப்டிவ்வா இருக்கணும். கத்தாமல் இரையாமல் மெதுவா கனிவாப் பேசணும். கஸ்டமரை விரட்டக்கூடாது. டேபிள் மேனர்ஸ் தெரியணும். தண்ணீரையோ, காப்பியையோ, டிபன் பிளேட்டையோ கஸ்டமருக்கு முன்னாலே வைக்கிறபோது ஒரு நைஸிட்டி—இங்கிதம் வேணும். மேஜையை உடைக்கிற மாதிரி டொக்குன்னு வைக்கப்படாது. இங்கே இருக்கிற சர்வர்கள் கராத்தேயிலே செங்கல் உடைக்கிற மாதிரி டேபிள்லே பிளேட்டை வைக்கிறதை நானே பார்த்தாயிற்று. பரிமாறு

கிறவர்கள் பார்க்கச் சுத்தமாக இருக்கணும். சாப்பிட வருகிறவர்கள் கஸ்டமர்கள் கண் காண மூக்கை நோண்டறது, தலையைச் சொறியறது, காது குடையறது இதெல்லாம் பண்ணிட்டு அப்புறம் அதே கையாலே காப்பி கொண்டார்ந்து கொடுக்கிறதுன்னு வந்தால் எவருக்குச் சாப்பிட மனசு வரும்? மூணு நாள் தாடியும் இடுப்பிலே லுங்கியும் மார்பில் முண்டா பனியனுமாக ஆஃப் டிராயரிலே ஆடு வெட்டற ஆள் மாதிரிச் சில சர்வர்களை இங்கே பார்த்தேன். அப்படி ஆளுங்க வர்ற கஸ்டமர்சைக் குறைச்சிடுவாங்க. வேட்டியைத் தூக்கிக் கட்டிக்கிட்டு உள் அண்டர்வேரும், புஸு புஸுவென்று மயிரடர்ந்த முழங்காலும் தெரிகிற மாதிரிச் சில பேர் பரிமாறுகிறாங்க. ஃபேமிலியோட வர்ற ஒரு கஸ்டமர் இந்த மாதிரி ஆளுங்களைப் பார்த்தா அடுத்த தடவை இந்த ஹோட்டலுக்கு வரவே மாட்டார். ஐரோப்பாவிலே பல ரெஸ்ட்டாரெண்டுகளிலே பேசுகிற சத்தமே அடுத்த டேபிளுக்குக் கேட்காது. பரிமாறியது போதும், மேலும் வேண்டும் என்பதை எல்லாம்கூடக் கஸ்டமருடைய சைகையிலேயே புரிஞ்சுப்பாங்க. ஃபோர்க்கையும், கத்தியையும் இணைகோடு மாதிரி பிளேட்டிலே வச்சா இன்னும் சாப்பிட ஏதோ மீதமிருக்கிறது என்றும் சேர்த்து வைத்துவிட்டால் முடித்தாயிற்று என்றும் அர்த்தப் படுத்திக் கொள்கிறார்கள். இங்கேயோ ஹோட்டல் முழுவதும் ஒரு போர்க்களம் போலக் கூப்பாடு மயமாயிருக்கிறது."

"இதையெல்லாம் சரிப்படுத்த உங்க சிகிச்சை என்னன்னு சொல்லுங்க, மிஸ்டர் குப்தா! நோய்களையே விவரிச்சிட்டுப் போனால் எப்படி? சரிப்படுத்தறது எப்படின்னு சொல்லுங்க."

"பொறுங்க சார்! இதை முதல்லே நாம கலந்து பேசி முடிவு பண்ணிட்டு அப்புறம் உங்க சிவவடிவேலுவுக்குச் சொல்லணும். நேரடியாச் சொன்னால் அதிர்ச்சி தாங்காது. அதனாலே முதல்லே உங்ககிட்டே கொஞ்சம் விவரமாகவே சொல்றேன் மிஸ்டர் அனந்த்!"

"நீங்க சொல்றது நூற்றுக்கு நூறு சதவிகிதம் சரி. சிவவடிவேலுவுக்கு இதெல்லாம் புரியறதே கஷ்டம். முதல்லே நாம பேசி முடிவு பண்ணி அப்புறம் அவருக்குப் பக்குவமா எல்லாம் சொல்லணும், நீங்க மேலே சொல்லுங்க. கேரி ஆன். ப்ளீஸ்!"

"நீட்நெஸ்—சுத்தம். இதுக்காகச் சர்வருங்களுக்கு நாமே வொயிட் ஃபுல் பாண்ட்டும் சட்டையும் சீருடையாகத் தைத்துக் கொடுத்துவிட வேண்டும். செலவானாலும் பரவாயில்லே. செலவாகுமேன்னு பயந்தால் லாபம் சம்பாதிக்க முடியாது. ஹோட்டல் தொழிலிலேயும் சினிமாத் தயாரிப்புத் தொழிலி லேயும் எவ்வளவுக்கு எவ்வளவு தாராளமாகச் செலவழிக் கிறோமோ அவ்வளவுக்கவ்வளவு லாபம் எதிர்பார்க்கலாம். சிக்கனமாகச் செலவழிச்சா லாபமும் சிக்கனமாகத்தான் இருக்கும். 'இஃப் யூ வாண்ட் டு கெய்ன் மோர், யூ ஹாவ் டு லூஸ் மோர்,' என்பதுதான் புதிய யுகத்தின் பிஸினெஸ் கான்ஸெப்ட். கேட்டரிங் டிப்ளமா உள்ளவங்களாகப் பார்த்து வேலைக்கு எடுக்கணும். சம்பளம் கூட ஆகுமேன்னு பார்த்தால் முடியாது. ஹோட்டல் இண்டீரியர் டெகரேஷன் எக்ஸ்பெர்ட் ஒருத்தரை நானே டில்லியிலிருந்து அனுப்பறேன்."

"புதிதாக மணி இன்வால்வ்மெண்ட் இருக்குமானால் சிவவடிவேலு தயங்குவார். ஏற்கெனவே கடன் இருக்கிறது."

"துணிந்து இறங்கப் பயப்படுகிறவன் வியாபாரம் பண்ண முடியாது. ரிஸ்க் எடுத்துக் கொள்ளத் தயங்குகிறவன் பிஸினஸுக்கு லாயக்கில்லே. என் சிகிச்சை முறைகளை ஏற்றுச் செயல்பட்டால் ஒரு வருஷத்திலேயே பயங்கர லாபம் பார்க்கலாம். அதோடு இன்னொரு விஷயம். சிவவடிவேலுவின் இரண்டாவது மகனைப் பற்றிய விவரங்கள் எனக்குத் தேவை. அவன் ஏதாவது இதில் நமக்கு உதவ முடியுமா என்று பார்க்க வேண்டும்."

''பி.ஏ. ஆங்கில இலக்கியம் படித்து முடித்துவிட்டு மேடைகளில் தமிழில் பிரசங்கம் பண்ணிக் கொண்டிருக்கிருன். முற்போக்குவாதி தந்தையோடு அறவே ஒத்துப் போகாது.''

''கொயட் இண்ட்ரெஸ்டிங். அவனை நான் சந்திக்க வேண்டுமே?'' என்ருன் குப்தா.

குமரேசனை இவர் சந்தித்து என்ன ஆகப் போகிறது என்று ஆடிட்டர் தயங்கிஞலும் அதை வெளிக்காட்டிக் கொள்ளாமல் அவனை அழைத்து வருவதாகக் கூறிவிட்டுக் கிளம்பிஞர்.

# 6

குமரேசனைக் குருபுரம் முத்தமிழ் மன்ற மேடையில் பட்டிமன்றப் பேச்சின் நடுவே போய்ப் பிடித்தார் ஆடிட்டர் அனந்த். மனித வாழ்க்கைக்கு முக்கியம் பொருளா அருளா என்ற பட்டிமன்றத்தை அரை மணி நேரம் உட்கார்ந்து பொறுமையோடு கேட்பது பொருள்தான் முக்கியம் என்பதைப் புரிந்து கொண்டு விட்ட ஒரு சார்ட்டர்ட் அக்கவுண்டெண்டுக்குச் சிரமமாகத்தான் இருந்தது. அருள்தான் முக்கியம் என்று பேசிய முதல் பேச்சாளனை எதிர்த்துப் பொருள்தான் முக்கியம் என்று வற்புறுத்திய பின் குமரேசனைச் சந்தித்து அழைத்தார் ஆடிட்டர். அவன் தயங்கிஞன்.

''எதுக்கு இவ்வளவு அவசரம்? பொதுவாகப் பட்டி மன்றங்களில் தீர்ப்பு வழங்குவதற்கு முன் நான் கிளம்பிப் போகிற வழக்கமில்லையே?''

''அட ரொம்ப அவசர விஷயம் அப்பா! தீர்ப்பை நாளைக்குக் கேட்டுத் தெரிஞ்சுக்கலாம் இப்போ என்கூடப் புறப்படு! சொல்றேன்.''

தட்டிச் சொல்ல முடியாமற் போகவே முத்தமிழ் மன்றச் செயலாளரிடம் போய் விடை பெற்றுத் தனக்குச் சேர

வேண்டிய தொகையைப் பெற்றுக் கொண்டு வந்து சேர்ந் தான் குமரேசன்.

''அந்த டில்லி பிஸினஸ் டாக்டர் உன்னைப் பார்க் கணும்னாருப்பா!'' என்று காரைச் செலுத்திக் கொண்டே அருகில் அமர்ந்திருந்த குமரேசனிடம் தெரிவித்தார் ஆடிட்டர்.

''இதுக்கா கூப்பிட்டீங்க? எங்கப்பா காலம் வரை அவர் சொத்திலோ வியாபாரங்கள், தொழில்களிலோ எங்கண்ணனோ, நானோ தலையிட மாட்டோம்னு நீங்களே அந்த ஆளுக்குச் சொல்லியிருக்கலாமே, சார்?''

''எதுக்குன்னு தெரியலே. ஆனால் அவர் உன்னைப் பார்த்தே ஆகணும்கிறார்.''

''எதுக்கு வீண் வேலை? எங்கப்பா காலம்வரை கொக்குக்கு ஒண்ணே மதின்னு பழைய மிட்டா மிராசு மனப்பான்மை யிலேயே எதையாச்சும் சும்மா பண்ணிட்டிருப்பார். நீங்க ஒருத்தருதான் வேலை மெனக்கெட்டு அவரைக் கட்டி மாரடிக் கிறீங்க! அவரை நம்பி இந்த மனுஷனை வேற டில்லியிருந்து வரவழைச்சிருக்கீங்க! இந்த ஆளு சொல்ற எதையும் அவர் கேட்கப் போவதில்லை. ஹோட்டல் பழைய குருடி கதவைத் திறடின்னு நஷ்டத்திலே தான் நடக்கப் போவுது.

''இப்ப என்கிட்டே சொல்ற இதையே அந்த டில்லி ஆசாமி கிட்டேயும் சொல்லேன். உண்மை நிலை என்னென்று வது அந்த ஆளுக்குப் புரியட்டும்?''

''இதை நான் வந்துதான் அவர்கிட்டே சொல்லணுமா என்ன? நீங்களே இதுக்குள்ளே சொல்லியிருக்கணுமே?''

''என்ன இருந்தாலும் நான் மூணாவது மனுஷன்தானே அப்பா!''

''நீங்களாவது மூணாவது மனுஷனாவது? நீங்கதானே எங்கப்பாவுக்கு ஃபிரெண்டு, ஃபிலாசபர், கைடு எல்லாம்?''

"உங்கப்பா செய்கிற தப்புக்கெல்லாம் நான்தான் காரணம்னு குத்திக் காட்டறியா?"

"நான் அப்படிச் சொல்லவில்லே, இவர்தான் என்னோட நண்பர், நல்லாசிரியர், வழிகாட்டி. என்று எல்லோரிடமும் உங்களைக் கையைக் காண்பிச்சிட்டுப் பண்ற தப்பை எல்லாம் எங்கப்பா அவராகவே பண்றாருங்கறேன்."

இதைக் கேட்டு ஆடிட்டர் சிரித்துக் கொண்டார். இவனுக்கு இருக்கிற வாய்ச் சவடாலுக்குச் சிவவடிவேலு மட்டும் சுதந்திரம் கொடுத்து உரிமையுடன் ஹோட்டல் நிர்வாகத்தைக் கவனிக்க விட்டால் பிரமாதமாயிருக்கும் என்று தோன்றியது.

பிஸினஸ் மட்டும் குப்தாவுக்கும் குமரேசனுக்கும் அறிமுகம் செய்துவிட்டு ஆடிட்டர் ஒதுங்கி அமர்ந்து கொண்டார். குப்தா ஜோவியலாகப் பேச்சைத் தொடங்கினான்.

குமரேசனும் குஷியாக உரையாடினான். 'கேட்டரிங்' டிப்ளமா வாங்கின டீஸண்டான ஆட்களை வேலைக்குப் போட்டால் ஹோட்டலைப் பிரமாதமாக நடத்த முடியும் என்று குப்தா சொன்னதும் குமரேசன் வேறு ஒரு ஐடியாவைக் கொடுத்தான்.

'நீங்க சொல்றதைவிடப் பிரமாதமான ஐடியா என்கிட்டே இருக்கு, மிஸ்டர் குப்தா! இங்கிருந்து மலை வழியா காட் செக்ஷன் ரோட்டிலே போனால் நூத்திப் பன்னிரண்டு மைல்லே கேரளா பார்டர் வந்துடும். சமீபத்திலேதான் அந்த ரோட்டை ஹைவேஸ்காரங்க புதுசாப் போட்டிருக்காங்க, கோட்டயத்திலே போய் முடியுது அந்த ரோடு. கோட்டயத்திலே எனக்குத் தெரிஞ்ச 15 முதல் 30 வயது வரையிலான அழகிய இளம் பெண்களுக்கு மட்டும் கேட்டரிங் பயிற்சி கொடுத்து அனுப்பும் ஒரு பிரைவேட் இன்ஸ்டிட்யூட் இருக்கு. அப்படிப் பெண்களே சர்வ் பண்ற மாதிரி ரெஸ்டாரெண்ட் ஒண்ணு கொச்சின்லே

பிரமாதமாக நடக்குது. உள்ளே உட்கார இடம் கிடைக்கலே! இங்கே எங்க ஃபாதர் கிட்டே சொன்னால் அடிக்க வருவார்."

"மார்வலஸ் ஐடியா!" என்று துள்ளிக் குதிக்காத குறையாக உற்சாக மேலிட்டுக் கூவினான் குப்தா. "எங்கே அதைப் பத்தி இன்னும் கொஞ்சம் விவரமாகச் சொல்லுங்க" என்று குமரேசனை மேலும் உற்சாகப்படுத்தித் தூண்டினான் குப்தா.

"கவர்ச்சிக்காக இதை நான் சொல்றேன்னு நினைக்காதீங்க. பரிமாறல், டேபிள் டெகரேஷன், இதமாகப் பேசுவது இதிலெல்லாம் பெண்கள் மென்மையாக நடந்துக்கறாங்க. ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாகத் தொழில்கள் செய்ய வேண்டும் என்ற பெண் விடுதலைக் கவிஞரின் இலட்சியத்தையே இங்கு நான் எதிரொலிக்கிறேன். பெண்கள் அதுவும் அழகிய இளம் பெண்கள் வறுமையால் சிரமப்படும் மாநிலம் கேரளா. இந்த ஏற்பாடு பயனளிக்கும். சிலருக்கு வேலை வாய்ப்பும் கிடைக்கும். ஆண்கள் வேறு கடின வேலைக்குத் தங்கள் நேரத்தைச் செலவிடலாம்."

"நம்ம நியூ பார்கவியில் முதல்லே அறிமுகப்படுத்த வேண்டிய திட்டம் இது! ஆடிட்டர் சார், மறந்துவிடாமல் இப்பவே குறிச்சு வச்சுக்குங்க." என்று ஆடிட்டரை நோக்கி வியந்து கூவினான் குப்தா. உடனே குமரேசனிடம் அக்கறையாக, "மிஸ்டர் குமரேசன்! கேட்டரிங் வகையில் அழகிய இளம் பெண்களுக்குப் பயிற்சி கொடுத்துத் தயாரிக்கும் அந்த இன்ஸ்டிட்யூட்டின் முகவரியையும் கொச்சினில் ஏதோ ஹோட்டல் அப்படிப் பெண்களே பரிமாறுகிற விதத்தில் வெற்றிகரமாக நடப்பதாய்க் கூறினீர்களே அந்த ஹோட்டலின் முகவரியையும் தயவு பண்ணி எனக்குக் குறித்துத் தர வேண்டும்," என்றும் கேட்டான் குப்தா.

"விலாசம் தருவது இருக்கட்டும். 'நியூ பார்கவி' என்று என்னமோ சொன்னீங்களே? என்னது அது? எங்கப்பா எதைத் தொடங்கினாலும் அது நிச்சயமா நியூவா இருக்க முடியாது.

அவர் தொடங்கறப்பவே அது ஒல்டாயிடும். அத்தனை கைவிசேஷம் அவருக்கு! அவர் கையாலே தொடங்கினப்புறம் பார்கவி எப்படி 'நியூவா' இருக்க முடியும்?''

''பார்கவி நியூவாகப் போகிறுள் மிஸ்டர் குமரேசன். அந்த நாள் வெகு தொலைவில் இல்லை.''

''சும்மா கனவு காண்கிறீர்கள்! எங்கப்பா இருக்கிற வரை அது நடக்காது. எங்கப்பா செல்லமா வளர்க்கிற'பார்கவிகள்' இருவர். இருவருமே உற்சாகமாக இல்லை. ஒன்று இந்த ஒட்டல், மற்ருென்று என் தங்கை பார்கவி. அவரது செல்லப் பெண்.''

''இல்லை மிஸ்டர் குமரேசன். நீங்கள், உங்கள் சகோதரர் தண்டபாணி எல்லோருடைய ஒத்துழைப்பையும் கொண்டு நானும் ஆடிட்டரும் சேர்ந்து இரண்டு பார்கவிகளையுமே ஆரோக்கியமாக்கப் போகிறோம்.''

''மிஸ்டர் குப்தா! இங்கே எங்கப்பா வேலைக்கு வச்சிருக்கிற ஆட்களைப் பார்த்த பிறகுமா உங்களுக்கு இந்த நம்பிக்கை? களத்து மேடுகளிலும் வயல் வரப்புகளிலும் எங்கப்பவோடு காரியஸ்தனைச் சுற்றிக் கொண்டிருந்த கறுப்பா யிரம் அந்த நாளிலேயே விவசாயக் கூலிகளுக்குத் தர வேண் டிய அஞ்சு பத்துலே கமிஷன் அடிக்கிறவன். அப்பாவைக் கண்டால் மட்டும் எழுந்து நின்னு கைகட்டி வாய் பொத்தி, 'முதலாளி சொல்றபடி செய்யறேனுங்க' என்று குழைகிறவன். அவனை நம்பி போர்டிங்கை விட்டிருக்கிருர். வெளிவேஷமான பணிவும் பயபக்தியும் இருந்தாலே அவன் யோக்கியன் என்று கணித்துவிடுகிறவர் எங்கப்பா. இவர் கிட்டே கல்யாணம் கார்த்திக்குத் தவசிப்பிள்ளையாயிருந்த இசக்கிமுத்துவைச் சரக்கு மாஸ்டராகவும் ஒரு ரிடையர்டு சப்ரிஜிஸ்திரார் ஆபீஸ் கிளார்க்கை ஸ்டோர் கீப்பராகவும் — அவங்க குறைஞ்ச சம்பளத்துக்கு ஒப்புக்கிட்டாங்கன்னு-நியமிச்சிருக்கார். உண்ணி மாதிரியும் அட்டை மாதிரியும் பார்கவியின் லாபத்தை

இவங்க உறிஞ்சிட்டிருக்காங்க. சர்வர், ரூம் பாய்ஸ்னு இவரோட பழைய நிலங்கரைகளில் காத்திட்டிருந்தவனையும் களை எடுத்திட்டிருந்தவனையும் காவல் காத்துக்கிட்டு இருந்த வனையும் குறைஞ்ச சம்பளத்துக்குப் போட்டிருக்கார். நவீன மானேஜ்மெண்ட் கான்ஸெப்ட்டே இவருக்குப் புரியாது. புரிய வைக்கவும் முடியாது. பார்கவிங்கிற இந்த நோயாளியை உங்ககிட்டே காண்பிக்க ஒப்புக்கிட்டதே எங்கப்பாவைப் பொறுத்தவரை பெரிய புரட்சிதான்!''

''நீங்க சொல்றது எதையும் நான் மறுக்கலே மிஸ்டர் குமரேசன்! இது உங்க குடும்பச் சொத்து. உங்கப்பா உங்க காலத்துக்குப் பின் நாளைக்கு உங்களுக்கும் உங்க உடன் பிறந்தவர்களுக்கும் வர வேண்டியது. இன்னிக்கு இதிலே இவ்வளவு ஊழல் இருக்குன்னு நான் வந்து கண்டுபிடிக்கிற துக்கு முன்னாடியே தெரிஞ்சிட்டிருக்கிற நீங்க சும்மா இப்படி ஒதுங்கி இருக்கலாமா?''

''சும்மா இருக்காமே வேற என்னதான் செய்யணும் கிறீங்க? எங்கப்பாவுக்கு அவரை விமர்சிக்கிறதோ எதிர்த்துப் பேசி விவாதிக்கிறதோ அறவே பிடிக்காது. நானும் எங்கண்ணனும் எதிர்த்துப் பேசிப் பேசிச் சேரம்பேறி, உருப்படாதவன்னு அவர்கிட்டே வசவு வாங்கினதுதான் மிச்சம். எதிர்த்துப் பேசாமல் அப்பாவைப் புகழ்ந்து செல்லப் பெண் ஆகிவிட்டாள் தங்கை. அவரை முகஸ்துதி பண்ணிக் கை கட்டி வாய் பொத்தி நின்னவனெல்லாம் ஊழியன்கிற பேரைப் பெற்றுச் சுரண்டிக் கொட்டிக்கிறான்கள்.''

''அப்போ இதை எல்லாம் சரிப்படுத்த என்னதான் வழி?''

''வழி இருக்கு! ஆனால் அது நடைமுறையிலே சாத்தியமா இல்லையான்னுதான் எனக்குப் புரியலே. இன்னிக்கு நான் ஒரு வார்த்தை ஃபோன் பண்ணிக் கிரீன் ஸிக்னல் கொடுத்தா எங்கண்ணன் டில்லியிலேர்ந்து இங்கே வரத் தயாராக இருக்கான். ஆனால் இவருக்கும் அவனுக்கும் ஒத்துக்காது.''

"உங்க யோசனைகளைத் தாராளமாக எங்கிட்டே சொல்லுங்க, குமரேசன்! இத்தனை தூரம் வேலை மெனக் கெட்டுப் புறப்பட்டு வந்து தங்கி தான் நோயாளியைக் காப்பாற்ருமல் திரும்பிப் போனால் எப்படி?"

"இப்ப இருக்கிற ஸெட்—லைஃப்பைக் கம்ப்ளீட்டா மாத்தணும்! முழுக்க முழுக்கப் புது ரத்தத்தைப் புகுத்தணும். மூணு மாசச் சம்பளத்தைக் கையிலே கொடுத்தாவது பார்கவி யிலே இப்போ வேலை பார்க்கிற அத்தனைபேரையும் வெளியிலே அனுப்பணும். இதிலே தயவு தாட்சண்யமே கூடாது! ஒருத் தனை மீதம் வைத்துக்கொண்டால்கூட ஒரு குடம் பாலில் துளி விஷம் மாதிரி ஆகிப்போயிடும். இவங்க எல்லோருமே சம்பளத் துக்குச் சம்பளமும் வாங்கிக்கிட்டுக் கிளம்பமும் பண்றவங்க. ஹோட்டல் தொழிலுக்குப் பரிச்சயமான டீஸண்ட் ஆட்களை நல்ல சம்பளத்திலே நியமிக்கணும். ஆனால் இந்த மறுபரி சீலனை, விமரிசனங்கள் மாறுதல்களுக்கு எங்கப்பா ஒருக்காலும் சம்மதிக்க மாட்டார் மிஸ்டர் குப்தா."

## 7

ஆடிட்டர் அனந்துக்கே கூடக் குமரேசனின் விளக் கங்கள் ஆச்சரியத்தை அளித்தன. சிவவடிவேலு இவனைப் போய்ச் சோம்பேறி, ஊர் சுற்றி என்கிருரே என்று அவர் மேல் கோபம் வந்தது. ஆடிட்டரே நேரடியாகப் பேச்சில் குறுக்கிட்டு, "சுற்றிச் சுற்றிச் செக்கு மாடு மாதிரி ஒரே இடத்திலே வந்து நின்னுடறியேப்பா! இதிலேர்ந்து மீள என்ன வழி?" என்று குமரேசனைக் கேட்டார்.

குமரேசன் சிரித்தான். பின்பு பதில் சொன்னான். "வழி கண்டுபிடிக்க மருந்து சொல்லறக்குத்தான் குப்தா சார் வந்திருக்காரே."

"நான் நோயைக் கண்டுபிடிச்சாச்சு; மருந்தையும் தீர்மானம் பண்ணியாச்சு. ஒரு பெரிய ஆச்சரியம் என்னோட

கண்டுபிடிப்பும், உங்களோட ஆப்ஸர்வேஷனும் ஏறக்குறைய ஒத்து வருது; அதனாலே உங்க முழு யோசனையையும் கேட்டுட லாம்னு பார்க்கிறேன், மிஸ்டர் குமரேசன்! நீங்க பிஸினஸ் மேனேஜ்மெண்ட் படிக்கலேன்னாலும் நடைமுறை ஞானத்தி லேயே கரெக்டாச் சொல்றீங்க. ரைட் பெர்ஸனஸ் ஃபார் ரைட் ஜாப், ராங் பெர்ஸனல் ஃபார் ராங் ஜாப் என்று இரண்டு தலைப்புக்களில் என்ன வருமோ அதை இதுவரை அழகாகச் சொல்லிட்டீங்க'' என்று குப்தாவே குமரேசனைப் புகழ்ந்தான்.

குமரேசன் தயங்கித் தயங்கிப் பெரிய பீடிகையோடு ஆரம்பித்தான். ''இதோ இந்த ஆடிட்டர் சார் இருக்கார்! எங்கப்பாவுக்கு ரொம்ப வேண்டியவர். நான் சொல்றதை அவரும் நீங்களும் நல்ல ஸென்ஸிலே எடுத்துக்கணும். இப்பவே சொத்தைக் கைப்பற்ற ஆசைப்படறேன்னு சீப் மோடிவ் கற்பிச்சு என் நோக்கத்தைத் தப்பாப் புரிஞ்சுக்கக் கூடாது.''

''ரிஸர்வேஷன் எதுவும் வேண்டாம். நினைக்கிறதை அப்படியே சொல்லுங்க. எனக்கு அதுதான் வேணும்.''

''முரண்டுக்கிறது மோசமான குணம். முரண்டோட அறியாமையும் சேர்ந்துட்டாக் கேட்கவே வேண்டாம். அது வைக்கோல் போரில் நெருப்புப் பொறி விழுகிற மாதிரி, எங்கப்பா கிட்டே இது ரெண்டுமே கணிசமா இருக்குது. 'கொண்டது விடாமை' என்கிற குணம் மனுஷனுக்கு இருக்கக் கூடாது. குரங்கு முதலை மாதிரிக் கவ்விப் பிடிக்கிற விலங்குகள் கொண்டதை விடாமல் பறிக்கலாம். ஆனால் மனுஷனுக்கு அது கூடாது. விலங்குக் குணம் மனுஷன் கிட்டே இருந்தால் அது ஆபத்தா முடியும். அறிவு வளர வளரப் பழசை விடணும், புதுசை ஏத்துக்கணும். பழசை விடறதுக்கும் புதுசை ஏற்றுக் கொள்வதற்கும் எங்கப்பா துணியமாட்டார். இதுனாலேதான் இப்ப எங்க ஃபேமிலியே கஷ்டப்பட்டுக்கிட்டு இருக்குது. இத்தனை வசதியிருந்தும் எங்கண்ணன் டில்லியிலே வாடகைவீட்டிலே

குடியிருந்து இன்னொருத்தன்கீழே கைகட்டிச் சேவகம் பண்ணிட்டிருக்கான். நான் பட்டி மன்றம் பேசிக் கைச் செல வுக்குப் பத்து நூறு சம்பாதிக்கிறேன். எங்கம்மா ஒடுங்கிப் போயாச்சு, தங்கச்சி ரத்த சோகை பிடிச்சமாதிரி வளர்ச்சி யில்லாமல் இருக்கிறாள்.

''நீங்களும் எங்களோட ஒத்துழைச்சால் எல்லாத்தையுமே ஆரோக்கியமா மாத்திக்க முடியும். மாத்தியாகணும். உங்கப் பாவே சாசுவதமாக உலகத்திலே இருக்கப் போறதில்லே. இன்னும் அஞ்சு வருஷமோ பத்து வருஷமோ இருந்தாலே பெரிய காரியம்.''

''ஆனால் அந்த அஞ்சு வருஷம் பத்துவருஷத்துக்குள்ளே எல்லாமே திவாலாகிப் போயிரும். கரும்பாயிரம்வகையறாக்கள் கூழைக் கும்பிடு போட்டே எங்கப்பாவைச் சுரண்டித் தின் னுடப் போறாங்க''

''ஆறே மாசத்திலே ஒழுங்குபடுத்தலாம்! கவலைப்படா தீங்க குமரேசன்.''

''பவர் ஆஃப் அட்டர்னி வாங்கிக்கிட்டு எங்கப்பாவை ஆறு மாசம் ஃபாரின் டூரோ க்ஷேத்திராடனமோ அனுப்பிச்சாத் தான் நீங்க நினைக்கிற சீர்திருத்தங்களை எல்லாம் பண்ண முடி யும். அவரைப் பக்கத்திலே வைச்சுகிட்டு எதையுமே பண்ண முடியும்னு எனக்குத் தோணலே. ரொம்பக் கஷ்டப்படும்.''

''ஏன் அப்படிச் சொல்றீங்க! உங்க ஃபாதர் எந்த வகை யிலே இடைஞ்சலா இருப்பார்?''

''ஓடவும் விடமாட்டார், நிற்கவும் விடமாட்டார்! கரும்பாயிரத்தை டிஸ்மிஸ் பண்ணிக் கணக்குத் தீர்த்து அனுப்பிச்சீங்கன்னு அவன் நேரே ஓடிப்போய் 'முதலாளி நீங்க தான் என்னைக் காப்பாத்தணும்'னு அப்பா காலிலே நெடுஞ்சாண் கிடையாக விழுந்துவிடுவான். அப்பாவுக்கு ஒரு வீக்னஸ். காலிலே விழுந்துட்டால் மனசு இளகிடும். அவனைக்

கைவிடமாட்டார், இப்படிக் காலிலே விழுந்தே காக்காய்ப் பிடிக்கிற ஆளாகத்தான் அவர் இங்கே வச்சிருக்கார். அத்தனை பேரும் காலிலே விழுந்து மறுபடியும் வேலையிலே நுழைஞ்சிடுவாங்க. அதனாலே 'ஆபரேஷன் நியூ பார்கவி' கவுண்ட்டவுனுக்கு முன்னே அப்பாவை அப்புறப்படுத்தியாகணும்.''

''வெளிநாட்டுக்குப் போகச் சொல்லிப் பாஸ்போர்ட் விசா எடுத்துக் கொடுத்து அனுப்பலாமா? அல்லது காசி ராமேஸ்வரம்னு க்ஷேத்ராடனம் அனுப்பலாமா?''

''ரெண்டுமே சுலபமில்லே சார். அப்பா ஊறின கிணத்துத் தவளை. சுலபத்திலே குருபுரத்தை விட்டு வெளியேறச் சம்மதிக்க மாட்டார், வெளியிலே போனாலும் உடனே மூச்சுத் திணறிப்போய்க் காற்றைச் சுவாசிக்கவே பிடிக்காமல் மறுபடி கிணறுக்குள்ளேயே துள்ளிக் குதித்து விடுகிற சுபாவம் அவருக்கு. அதனாலே அவருக்குச் சந்தேகம் வராதபடியும் அவரை உடனே திரும்பவிடாத படியும் கவனிக்க அம்மாவையும் கூடவே அனுப்பி வைக்கணும். உள்நாட்டிலேயே க்ஷேத்ராடனம்னு அனுப்பினால் அவர் பாதியிலேயே டக்குனு திரும்பி வந்துடற அபாயம் இருக்கு' ரிஸ்க்தான் அட்லாண்டிக் ஓஷன் வழியாகப் புறப்பட்டு பசிபிக் வழியாகச் சுற்றிக் கொண்டு உலகம் பூராவும் வலம் வருகிற ஒரு 'ரவுண்ட் த வோர்ல்ட் ட்ரிப்' கப்பலிலே அவரையும் அம்மாவையும் சேர்ந்து அனுப்பணும்.''

இதைக் கேட்டுக் குப்தாவும் ஆடிட்டரும் வயிறு வெடிக்கச் சிரித்து ஓய்வதற்குச் சில நிமிடங்கள் ஆகின.

''சிரிக்காதீங்க. நான் விளையாட்டுக்குச் சொல்லலே, சீரியஸாகவே சொல்றேன், அப்பாவுக்குப் பயமும் சந்தேகமும் அவநம்பிக்கையும் அதிகம். யாரையும் எதையும், நம்ப மாட்டார். அதே சமயத்தில் தான் நம்பறவங்க மோசமானவங்களான்னு பார்க்காமெ தொடர்ந்து நம்பிக்கொண்டே இருப்பார். மாறுதலும் வளர்ச்சியும் உடனிகழ்ச்சியான விஷயங்கள்.

வளர்ச்சியின்றி மாறுதலும் மாறுதலின்றி வளர்ச்சியும் கிடையா துங்கிறதை எங்கப்பா ஒப்புக்க மாட்டார். அதுதான் பிரச்னே. அதனாலே மாறுதலை அடிப்படையாகக் கொண்ட வளர்ச் சிக்கு முதற்கட்டமாக நீங்க செய்யணுங்கிற மாறுதலுக்கு அவர் பெரிய முட்டுக்கட்டையாக இருப்பார் என்பதில் சந்தேகம் இல்லே."

"அவரை இங்கேயே வைத்துக் கொண்டு 'ஆபரேஷன் நியு பார்கவி முடியாதுங்கிறீங்க?"

"ஐ'யம் ஹண்ட்ரெட் பர்ஸெண்ட் ஷ்யூர் எபௌட் இட்"

"அப்போ வெளிநாட்டுப் பயண யோசனைதான் சரியான காரியம்."

"ரொம்ப சரி, அந்த யோசனையை அவர்கிட்டே யார் சொல்லறதுங்கிறதுதான் இப்ப கேள்வி, பூனைக்கு யார் மணி யைக் கட்டி விடறது? யார் கட்டி விட்டால் பூனை மணியைக் கட்டிக் கொள்ளும் என்பதெல்லாம் தான் பிரச்சினே."

"அந்த விஷயத்தை நாங்க பார்த்துக்கறோம். மிஸ்டர் குமரேசன் ஆறு மாசமோ, ஒரு வருஷமோ அவரை வெளி நாட்டுக்குக் கப்பலேத்தி அனுப்பிடறது எங்க பொறுப்பு."

"அது அத்தனை சுலபமில்லே மிஸ்டர் குப்தா! அப்பா வோட பிறவிக் குணங்களில் ஒன்று கஞ்சத்தனம். இந்த வயசுக்கு மேலே நாங்க உலகத்தைச் சுற்றிப் பார்த்து என்ன ஆகப் போகிறது? அதெல்லாம் ஒண்ணும் வேண்டாம்- வீண் செலவு'ன்னுடுவார்"

"பின்னே என்னதான் வழி? அவர் இங்கேயே கூட இருந் தால் ஒண்ணுமே மாறுதல் செய்ய முடியாதுங்கறீங்க. வெளியே புறப்பட்டுப் போகவும் சம்மதிக்க மாட்டார்ன்னு சொல்றீங்க. ஆபரேஷன் நியூ பார்கவியை எப்படி லாஞ்ச் பண்றது?"

“அப்பாவே சம்மதிச்சு வெளிநாடு கிளம்ப ஒரே ஒரு வழி தான் இருக்கு. அதுக்கு மட்டும் அவர் கட்டுப்படுவார்.”

“என்ன?” என்று குப்தா ஆடிட்டர் இருவருமே ஏக காலத்தில் குமரேசனை ஆவலோடு கேட்டனர். எப்படியாவது பிரச்சினை தீர்ந்தால் போதும் என்றிருந்தது அவர்களுக்கு.

“இதற்காக அவருடைய ஆஸ்தான ஜோசியர் கடுக்கை யூர் கண்ணபிரானை அணுகி அவர் மூலமாக இந்த வெளி நாட்டுப் பயண யோசனை அப்பாவுக்குப் போகணும். குப் தாவோ ஆடிட்டரோ நானோ அண்ணனோ இதிலே சம்பந்தப் பட்டிருக்கோம்னாக்கூட அவர் சந்தேகப்படுவார். ஸ்பாண்டே னியஸா ஜோசியரே தேடிவந்து பேசிக்கிட்டிருக்கிறப் போல இந்த ஃபாரின் ட்ரிப்பைப் பற்றி யோசனை சொல்லணும்.”

“அந்த ஜோஸியர் எப்படிப்பட்டவர்? ஒத்துவரக்கூடிய ஆளா? உங்கப்பா மாதிரி முரண்டு பிடிக்கறவரா? அது தெரிய ணுமே?” குப்தா கடுக்கையூர் பற்றி உடனே விசாரித்தான்.

“கடுக்கையூராருக்கு எங்கப்பா பத்து ரூபாய் குடுப்பாரு. நாம நூறு ரூபாய் குடுத்தா சொன்னபடி கேட்டுட்டுப் போறாரு.”

“ஆனா அவருக்குக் கூட நிஜமான காரணம் தெரியப் படாது. பின்னாலே வம்பு! அதுனாலே தினுசாச் சொல்லணும். ‘வாழ்நாள் பூராவும் இந்தக் கிராமத்திலேயே கிடந்து உழல் கிறார். கொஞ்சம் வசதியா அவரை உலகம் சுத்திப்பார்க்க ஏற்பாடு பண்ணனும்னு நினைக்கிறோம். செலவுக்குப் பயந்து மாட்டேம்பாரு. அவர் நன்மைக்காக நீங்கதான் அதை வற்புறுத்திச் சொல்லிப் பிரயாணத்துக்கு அவரைச் சம்மதிக்க வைக்கணும்னு கடுக்கையூரார்கிட்ட நம்ம அப்ரோச் இருக் கணும்,” என்றார் ஆடிட்டர்.

“இல்லாட்டா அநாவசியமா ஃபேமிலி மேட்டர்ஸ் வெளியிலே வதந்தியாகி நாறிப் போகும்.”

"மெல்ல அந்த ஜோசியரை இங்கே வரவழையுங்க. நான் ஏதோ பார்க்கணும்னு சொன்னதாக் கூட்டிட்டு வாங்க. கொஞ்சம் தாராளமாகக் கவனிக்கிறேன். அப்புறம் அவரிடம் சிவவடிவேலு மேட்டரை ஆரம்பிப்போம்," என்றான் குப்தா.

ஜோசியரை அழைத்துவருகிற பொறுப்பைக் குமரேசனிடமும் ஆடிட்டரிடமும் விட்டான் குப்தா.

ஆடிட்டரும் குமரேசனும் உடனே குருபுரம் மிராசுதார் சிவவடிவேலுவின் ஆஸ்தான ஜோசியரான கடுக்கையூர்க் கண்ணபிரானைத் தேடிக்கொண்டு அவருடைய வடக்குத் தெரு ஜோதிஷ கலாநிலையத்துக்கு விரைந்தனர்.



மாணவர்களின் போராட்டம் இப்படி அப்படி என்று ஒருவழிக்கு வராமல் இழுபடவே 'பார்கவி'யின் கல்லூரி மேலும் பதினைந்து நாளைக்குத் திறக்கப்பட மாட்டாது போலிருந்தது. பார்கவி அதுபற்றிக் கவலைப்படவில்லை, மிஸஸ் குப்தாவைக் காரில் மலைக்கு அழைத்துச் செல்வது. ஆஞ்சநேயர் தரிசனம், ஏலக்காய் எஸ்டேட்டைச் சுற்றிக் காண்பிப்பது, அருவிக்கு நீராட அழைத்துச் செல்வது, குருபுரத்தைச் சுற்றியுள்ள இயற்கை அழகுமிக்க இடங்களுக்குப் 'பிக்னிக்' கூட்டிப் போவது என்று பார்கவியின் நாட்கள் உற்சாகமாகவும், சுறுசுறுப்பாகவும் கழிந்தன.

ஒரு நாள் திருமதி குப்தா தான் யாரிடமோ கேள்விப் பட்டிருக்கிற ஒரு விஷயத்தைப் பார்கவியிடம் நாசூக்காகச் சிரித்தபடி வினவினாள்.

"நீ மலை மேலிருக்கிற ஆஞ்சநேயர் கோவிலுக்கு அடிக்கடி போவதுண்டா பார்கவி?"

"ஆமாம் அக்கா. ஏன் கேட்கிறீங்க?"

''கன்னிப் பெண்கள் ஆஞ்சநேயர் கோவிலுக்கு—அதாவது பஜ்ராங்பலி மந்திருக்குப் போய் அடிக்கடி சுற்றினால் சீக்கிரம் கல்யாணம் ஆகும்னு இங்கே தெற்கே ஒரு நம்பிக்கை உண்டுங்கிறாங்களே...?''

பார்கவியின் முகம் குங்குமமாய்ச் சிவந்தது.

''என்னடி, நான் கேட்கிறேன். நீ பாட்டுக்குப் பதிலே சொல்லாமல் இருக்கிறாய்?''

''நீங்க என்னைக் கேலி பண்றீங்க அக்கா.''

''கேலி ஒண்ணும் இல்லேடி! சும்மா ஒரு அகடெமிக் இண்ட்ரெஸ்டிலேதான் கேட்டேன்.''

''ஆமாம். அப்படி ஒரு நம்பிக்கை உண்டு. ஆனா நான் அந்தக் கோவிலுக்கு அடிக்கடி போகிறதுக்குக் காரணம் அது இல்லே அக்கா. இந்த மலை ஆஞ்சநேயர்தான் எங்களுக்குக் குலதெய்வம்.''

''பஜ்ராங் பலியே ஒரு கட்டைப் பிரம்மசாரி! ஒரு கட்டைப் பிரம்மசாரியைப் போய் ஆண் பிள்ளைக்காக ஏங்கும் கன்னிப் பெண்கள் சுத்தறதிலேயும் வேண்டிக்கிறதிலேயும் என்ன அர்த்தம் இருக்க முடியும்? வேடிக்கையான பிரார்த்தனையாகத் தான் இருக்கிறது.''

''பின்னென்ன? கல்யாணமாகாமே ஏங்கறவங்க கட்டைப் பிரம்மச்சாரியைச் சுற்றாமல் கிழவனையா சுத்திகிட்டிருப்பாங்க?''

''அடி கள்ளி! கேட்டயேடீ ஒரு கேள்வி செஞ்சுரி அடிச்ச மாதிரி! ஒண்ணுந் தெரியாதவள் மாதிரி இருந்துக்கிட்டு... என்னென்ன பேசறேடி நீ?''

இப்படித் திருமதி குப்தா வகையாகப் பார்கவியை மடக்கியபோது அவள் தலை குனிந்தாள்.

"அதுக்கில்லே அக்கா. கல்யாணமாகாத கன்னிப் பெண்களின் ஏக்கம் கல்யாணமாகி இந்தப் பக்கம் ஒண்ணும் அந்தப் பக்கம் ஒண்ணுமா ரெண்டு ரெண்டா வள்ளி—தேவானை ருக்மிணி—சத்தியபாமான்னு நிறுத்தி வச்சுக்கிட்டு ஜாலியா இருக்கிற முருகன், கிருஷ்ணனுக்கு எல்லாம் தெரிய நியாய மில்லே. கல்யாணமே ஆகாத அனுமாருக்குத்தான் அது அனுபவரீதியாகத் தெரிஞ்சுருக்கும்னு நினைச்சோ என்னவோ, கன்னிப் பெண்கள் அனுமார் கோவிலைச் சுத்தறது அனுமார் படத்திலே வால் பக்கமாய்க் குங்குமப் பொட்டு வைக்கற துன்னெல்லாம் பழக்கமா இருக்கு."

"நான் கேட்டது அகடெமிக் க்வஸ்சன்! நீ சொல்றது அனுபவபூர்வமான பதில்டீ பார்கவி," என்று கண்களைச் சிமிட்டினாள் மிஸஸ் குப்தா. இயற்கையிலேயே படு அழகான மிஸஸ் குப்தா கண்களைச் சிமிட்டும்போது மேலும் அழகா யிருந்தாள். அவளோடு பழக ஆரம்பித்தபின் பார்கவி எவ்வளவோ மாறியிருந்தாள். வெறும் மரப்பாச்சி மாதிரி இருந்த அவளை உயிர்த் துடிப்புள்ளவளாக மாற்றியிருந்தாள் திருமதி குப்தா. அவளிடம் அப்படியே வசியப்பட்டுப் போயிருந்தாள் பார்கவி.

'பார்கவி! உனக்கும் எனக்கும் நிறைய ஒத்துமை இருக்குடி! உங்கப்பாவும் ஓட்டல் வச்சிருக்கார். எங்கப்பாவும் ஓட்டல் வச்சிருக்கார். எங்கே தெரியுமா? சிம்லாவிலே. எங்க வீட்டுக்காரருக்குச் சொந்த ஊர் லக்னோ. இவரை நான் கல்யாணம் பண்ணிக் கொண்டதே ஒரு சுவாரஸ்யமான கதை. இப்போ உங்கப்பாவோட ஓட்டல் இருக்கிற மாதிரி எங்கப்பா வோட சிம்லா ஓட்டல் நஷ்டத்திலே முழுகிப் போயிருந்தது. எங்கப்பாவுக்கு மெயின் பிஸினஸ் ஆப்பிள் வியாபாரம். சிம்லா விலேயும் சுற்றுப் புறத்திலேயும் மலைவெளியிலேயுமா நாலைந்து பெரிய ஆப்பிள் அர்ச்சார்ட்ஸ் சொந்தமா இருக்கு. ஆப்பிள்ல நிறையச் சம்பாதிச்சு, சிம்லாவிலே ஒரு பழைய ஓட்டலை விலைக்கு வாங்கினார். அவரோட போறாத காலம் ஓட்டல்

நடத்தத் தெரியாம ரொம்ப நஷ்டப்பட்டார். அப்பத்தான் இவர் அமெரிக்காவிலே எம்.பி.ஏ. முடிச்சிட்டு வந்து லக்னோவில இந்த மாதிரி நவீன பிராக்டீஸ் எடுபடாதுன்னு டெல்லியிலே கன்னாட் பிளேஸில் ஒரு மாடி அறையை வாடகைக்குப் பிடிச்சு 'பிஸினஸ் டாக்டர்'னு போர்டு மாட்டியிருந்தார். 'பிஸினஸ் டாக்டர்'னு என்னன்னே புரியாமே ரொம்பப் பேர் தலைவலின்னும் வயித்து வலின்னும் இவரைத் தேடி வந்து அறு அறுன்னு அறுத்துக்கிட்டிருந்த சமயத்திலே எங்கப்பாவுக்கு யாரோ விவரம் சொல்லி இவரைக் கூப்பிட்டால் ஓட்டலை லாபத்துக்குக் கொண்டு வந்துடுவார் னுங்க. என் தம்பி அஜீத்தை டெல்லிக்கு அனுப்பி இவரை உடனே கையோட சிம்லாவுக்கு அழைத்து வரச் செய்தோம். அப்போ பிப்ரவரி மாசம். மார்ச், ஏப்ரல். மே, ஜூன், ஜூலை சிம்லாவிலே கோடை சீசன். அந்த சீசன் டயத்துக்கு முன்னாடியே ஓட்டலை ஒழுங்கு பண்ணிக்கணும்னுதான் இவரை பிப்ரவரியிலே அங்கே வரவழைச்சோம். இவரைச் சந்திச்ச திலேருந்து எனக்கும் இவருக்கும் ரொம்பப் பிடிச்சுப் போச்சு.''

''லவ்வா அக்கா?''

''அப்படித்தான்னு வச்சுக்கயேன்,''

''உம்... சுவாரஸ்யமா இருக்கு. மேலே தொடர்ந்து சொல்லுங்க அக்கா!''

''அப்புறம் அந்த சீஸன் முழுக்க சிம்லாவிலேயே எங்க வீட்டு மாடியிலேயே தங்கினார். இவர் கூறிய யோசனைகளின்படி அப்பாவும், என் தம்பி அஜீத்தும் ஓட்டலை நடத்தினதில் அந்த சீஸன் முடிவிலேயே லாபம் தெரிஞ்சுது. இவர் டில்லி புறப் படத் தயாரானார்.''

''அப்புறம்...?''

''கேளுடீ! சுவாரஸ்யமான திருப்பம் இப்பத்தான் வரப் போறது. அப்பாவுக்கும் என் தம்பிக்கும் இவரை ரொம்பப்

பிடிச்சுப் போச்சு. ரெண்டு சாதிக்காய்ப் பெட்டி நிறை 'ஏ' கிரேடு கோல்டன் டெலிஷியஸ் ஆப்பிளை எடுத்து வச்சுத் தொகை போடாத கையெழுத்துப் போட்டு ஒரு 'செக்' லீஃபை நீட்டி 'நீங்க விரும்புற தொகையைப் போட்டுக்கலாம்'னுங்க, இவர் புன்புறுவல் பூத்தார். 'நான் இதிலே எதைப் பூர்த்தி பண்ணினாலும் குடுப்பீங்களா'ன்னு எங்கப்பாவைப் பார்த்துக் கேட்டார் 'நிச்சயமாகக் குடுப்பேன்' என்றார் எங்கப்பா.''

''உடனே இவர் பேனாவைத் திறந்து செக்கிலே காலியா யிருந்த இடத்திலே, 'சுஷ்மாவை எனக்குக் கல்யாணம் செய்து கொடுக்கவும்' என்று சிரித்துக் கொண்டே என் பெயரை எழுதி எங்கப்பாவிடம் நீட்டினார்.''

இந்த இடத்தில் பார்கவி தமிழ் சினிமா ரசிகைபோல் உற்சாக மேலிட்டுக் கரகோஷம் செய்தாள். சில நிமிஷங் களுக்கு நிற்காமல் தொடர்ந்தது அவள் கைதட்டல்.

''அவசரப்படாதே! கேள்...எங்கப்பா உடனே அதுக்குச் சம்மதிக்கலே. 'இரண்டு நாள் தங்குங்கள்! என் முடிவைச் சொல்கிறேன்' என்று அழுத்தலாக இவருக்குப் பதில் சொல்லி விடவே எனக்குக் கவலையாய்ப் போயிற்று. தம்பி அஜீத்தை லக்னோவுக்கு அனுப்பி இவருடைய பூர்வோத்தரங்களை விசாரித்த அப்பா இவரே பெரிய கோடீசுவரன் வீட்டுப் பிள்ளை என்று தெரிந்ததும் பயந்துவிட்டார்.

''மிஸ்டர் குப்தா நான் பரம ஏழை! உங்க பெற்றோர் என்னோட மகளை நீங்கக் கட்டிக்கச் சம்மதிப்பாங்களா?'' என்று இவரை எங்கப்பா கேட்டார்.

''என் பெற்றோர் நான் சொல்றதைக் கேட்பாங்க. எனக்குப் பிடித்த பெண்ணை நான் மணந்து கொள்வதை அவர்கள் விரும்புவார்கள்'' என்றார் இவர். அப்புறம் அடுத்த வாரமே எங்க கல்யாணம் நடந்ததடீ பார்கவி!''

''ஏதோ இந்தி சினிமா பார்கிற மாதிரி இருக்கே அக்கா'' என்று சுஷ்மா குப்தாவைக் கிண்டல் செய்தாள் பார்கவி.

உடனே கேட்டாள். "உங்கப்பாவோட சிம்லா ஓட்டல் இப்போ எப்படி இருக்கு அக்கா?"

"இப்போ அது அப்பா நிர்வாகத்திலே இல்லேடி! அவர் ஆப்பிள் தோட்டங்களோடு நின்றுவிட்டார். என் தம்பி அஜீத் ஓட்டலைப் பிரமாதமா நடத்தருன். இன்னிக்குத் தேதியிலே சிம்லாவிலே முதல்தரமான ஓட்டல் அதுதான்."

"அப்போ உங்க கணவர் சிகிச்சையிலே எங்க ஓட்டலும் பிழைச்சுடும்னு சொல்லுங்க அக்கா!"

"ஒரே ஒரு வித்தியாசம்! எங்கப்பா என் தம்பிக்குச் சின்ன வயசாச்சேன்னு தயங்காமே பிஸினஸ் டாக்டர் கூறியபடி ஓட்டல் நிர்வாகத்தை அவனிடம் ஒப்படைத்து விட்டு ஒதுங்கிக் கொண்டார். என் தம்பி அஜீத்தும் கடினமா உழைச்சு லாபம் பார்த்து இன்னிக்கு நைநிடால்லே இன்னொரு ஓட்டலேயும் கட்டிக்கொண்டிருக்கிருன். நைநிடால் ஓட்டலேத் திறந்து லாபம் காட்டுகிறவரை அவனுடைய திருமணத்தைக்கூட ஒத்திப் போட்டிருக்கிருன் என்ருல் பார்த்துக்கொள்! உங்கப்பாவும் தன் பிள்ளேகளுக்குச் சுதந்திரம் அளித்து ஓட்டலே வளர்க்கச் சொல்லணும்னு என் கணவர் அபிப்பிராயப்படுகிருர் பார்கவி."

"எங்கப்பாவா...?" என்று இழுத்து வாக்கியத்தை முடிக்காமல் நிறுத்திஞள் பார்கவி.

"என்னடி மழுப்பறே? உங்கப்பா செய்யமாட்டாரா? ஓட்டல் தொழில், சினிமாத் தொழில் இதெல்லாம் இளமையும், சுறுசுறுப்பும் உற்சாகமும் மேலும் மேலும் ஒன்றை அழகுப் படுத்திப் பயனடைய வேண்டும் என்கிற முனேப்பும் உள்ளவர்கள் மட்டுமே செய்ய முடிந்தவை. ஸிக்கனாகவும் வறட்சியாகவும் கஞ்சத்தனமாகவும் இருக்கிறவர்கள், ஓடியாடி உற்சாகமாக உழைக்க இயலாத முதியவர்கள் ஆகியோருக்கு இந்தத் தொழிலே வளப்படுத்த வாய்ப்புக் குறைவு.

"நீங்க சொல்றதை நான் மறுக்கலே அக்கா! எங்க குடும்ப நிலைமை வேற. மூத்த அண்ணன் அப்பாவோட போக்குப் பிடிக்காம சண்டை போட்டுகிட்டுப் போயிடிச்சி- சின்ன அண்ணனுக்கும் அப்பாவுக்கும் ஒத்துவரலே! ஆடிட்டர் சொன்னார்னு இந்த ரெண்டுங் கெட்டான் ஊர்ல இருக்கிற முதலோடு கடனை ஒடனை வாங்கிப் போட்டு என் பேர்ல இந்த ஓட்டலை அப்பா கட்டிப்பிட்டாரு. இது சரியா நடக்கலே."

"இந்த ஊருக்கு என்னடி குறை? சிம்லா விட இது பெரிய ஊருடி! அங்கேயாவது சீஸன் மாசங்களிலேதான் ஓட்டலுக்கு மவுஸ். இங்கே பன்னிரெண்டு மாசமும் ஜனப் புழக்கம் இருக்கு. நடத்தற விதமா நடத்தினா எல்லாம் சரியா ஆகும். உங்கப்பாதான் மனசு வைக்கணும்" என்றாள் சுஷ்மா குப்தா. அப்பாவின் செல்லப் பெண்ணை பார்கவியே இப்போது தன் தந்தையின் அணுகுமுறைகளை மனசுக்குள் விமரிசிக்க முற்பட்டாள்.

## 9

ஆடிட்டர் அனந்தும், குமரேசனும் ஜோதிஷ கலாரத்னம் கடுக்கையூர்க் கண்ணபிரானைச் சந்திக்கக் கிளம் பினபோது குமரேசன் பாதி வழியிலேயே கத்திரித்துக் கொள்ள முயன்றான்.

"ஆடிட்டர் சார். இந்த ஆள் குப்தா மோஸ்ட் மாடர்ன் அவுட்லுக் உள்ளவன். ஒரு ஸிக் இண்டஸ்ட்ரிக்குச் சிகிச்சை அளிக்கிற சகல கெட்டிக்காரத்தனமும் அணுகுமுறையும் இந்தக் குப்தாகிட்ட இருக்கு. அதிலே சந்தேகமே இல்லே, ஆனால் இங்கே நோய்வாய்ப் பட்டிருப்பது தொழில் அல்ல. தொழிலை நடத்தும் நபரே நோய்வாய்ப்பட்டிருக்கிறார். தொழிலுக்கு வைத்தியம் பண்ணத்தான் இந்தக் குப்தாவாலே முடியும். எங்கப்பாவுக்கு வைத்தியம் பண்றது ரொம்பச்

சிரமமான காரியம். அது இவனையே நோய் வாய்ப்படச் செய்துவிடுமோ என்று பயமாயிருக்கு எனக்கு. பாவம், ஏராளமான தன்னம்பிக்கைகளுடன் இவனும் இவன் இளம் மனைவியும் இந்த ரெண்டும்கெட்டான் ஊரிலே வந்து சிரமப்படு கிறார்களே என்று பரிதாபமாயிருக்கு. இந்த வம்பிலே என்னை வேறு மாட்டி விடுகிறீர்களே? நான் எதற்கு? நீங்களே ஜோசியரைப் பார்த்துப் பேசக் கூடாதா?''

''அட நீ ஒண்ணு. என் கூட வாப்பா. தைரியத்தை விட்டுடாதே. எப்படியும் உங்கப்பாகிட்ட இருந்து தொழில்களை மீட்டுக் காப்பாத்தியாகணும்ப்பா, அதுவும் இந்த ஓட்டல் ஐடியா நான் கொடுத்தது. அதனாலே இதை நான் ஒழுங்கு பண்ணியாகணும்.''

''அப்படியானா அப்பாவை ஃபாரின் டிரிப் அனுப்பறது மட்டும் போதாது. அண்ணன் தண்டபாணியை வரவழைக்கணும். தனியா என்னாலே மட்டும் முடியாது. சொத்துக்கும் கடனுக்கும் வாரிசு நாங்க மூணு பேரும். செய்யற எந்த மாறுதலையும் மூணு பேரும் அறியச் செய்யணும். பார்கவியைக் கூடச் சேர்த்துத்தான் சொல்றேன்.''

''எல்லாம் எனக்குத் தெரியும்ப்பா. வா, முதல்லே ஜோஸ்யர் கிட்டே அவர் மூலமா அப்பாவைத் தள்ளிவிட வழி பார்க்கலாம், மற்றதை எல்லாம் அப்புறம் பேசிப்போம்,''

அவர் இத்தனை பேசிய பின்புதான் குமரேசன் பொறுமையாக அவருடன் செல்ல இணங்கிச் சென்றான். அவர்கள் போன போது ஜோசியர் பூஜையில் இருந்தார்.

காத்திருக்க வேண்டியதாயிற்று. பூஜை முடிந்து அவர் வந்ததும் ஆடிட்டர்தான் ஆரம்பித்தார். குப்தாவைப் பற்றிச் சொன்னார். உடனே ஜோஸியரே முந்திக் கொண்டு, ''அடேடே அவர்தானா? நேற்று சிவவடிவேலுவே பிரச்னம் மாதிரிக் கேட்க வந்திருந்தார். 'குப்தான்னு யாரோ பிஸினஸ் வைத்தியராம். ஆடிட்டர் கூப்பிட்டு வந்து தங்கியிருக்காரு.

வந்தன்னிக்குக் காலம்பரப் பலகாரச் செலவே நூற்று எழுபது ரூபா ஆயிடுச்சு! அவன் என்னமாச்சும் பண்ணி உருப்படியா ஓட்டல் லாபத்துக்கு வருமான்னு சோழியை உருட்டிப் பார்த்துச் சொல்லும் ஓய்,'ன்னு என்னைக் கேட்டாரு. சோழி போட்டுப் பார்த்தேன். பிரமாதமா வந்திச்சு. 'செலவைப்பத்தி யோசிக்காதேயும். இந்தப் பிஸினஸ் வைத்தியர் சொல்ற யோசனைப்படி நடந்தா பர்கவியில் பொன் கொழிக்கும்'ன்னு சொல்லியனுப்பி வச்சேன்,'' என்றார் ஜோசியர். ஒளிவு மறைவின்றி நடந்ததைச் சொல்லிவிட்டார் அவர்.

''இப்போ அந்தக் குப்தாவே உம்மகிட்ட அவன் சொந்த விஷயமா ஏதோ கேட்கணும்கிறான்,'' என்றார் ஆடிட்டர்.

''பேஷா... நானே வரட்டுமா? அவனை இங்கே அழைச்சுக் கிட்டு வர்றீங்களா?'' என்று முக மலர்ந்தார் ஜோஸியர்; பழம் நழுவிப் பாலில் விழுந்தது.

''கார் கொண்டாந்திருக்கோம். அங்கேயே போகலாம் வாங்க'' என்றான் குமரேசன். பஞ்சாங்கப் புத்தகங்களையும் சில சுவடிகளையும் சோழிகள் அடங்கிய பட்டுப் பையையும் எடுத்துக் கொண்டு ஜோஸியர் அவர்களோடு உடனே புறப் படத் தயாரானார்.

குப்தா ஜோஸியரை எழுந்து நின்று பிரமாதமாகக் கும்பிட்டு வரவேற்றான். தொழில் ரீதியாகப் பயன்படுவதற்காக ஜோஸியர் கொஞ்சம் இந்தி கற்று வைத்திருந்தார். குப்தா ஜோஸியரிடம் இந்தியில் பேசினான். ஜோசியரும் அவனிடம் இந்தியில் பேசினார். ஒரு மணிநேரம் தனக்கு ஏதோ ஜோஸியம் பார்ப்பது போல் பாவனை பண்ணி அவரை ஆழம் பார்த்தான் குப்தா. அப்புறம் நூற்று ஒரு ரூபாய் தட்சணை கொடுத்தான். ஜோசியர் முகம் மலர்ந்தது. வாயெல்லாம் பல்லாகச் சிரித்தார். அதுதான் சமயம் என்று ஆடிட்டர், குமரேசன், குப்தா மூவரு மாக ஜோசியரை மெல்ல வழிக்குக் கொண்டு வரப் பார்த்தார் கள். ஆடிட்டர்தான் ஆரம்பித்தார்.

''ஜோசியரே! உம்மாலே ஒரு நல்ல காரியம் ஆகணும்...''

''என்ன? உடனே சொல்லுங்க ஆடிட்டர் சார்! இப்பவே செய்துடலாம்'' என்று அபார உற்சாகத்தோடு பதில் வந்தது ஜோசியரிடமிருந்து...

''ஒண்ணுமில்லே! நம்ம சிவவடிவேலு இருக்காரே, அவர் வசதியிலே நாலுலே ஒரு பங்கு வசதி கூட இல்லாத வடக்குத் தெரு மொஹிதீன் பாய், தெற்குத் தெரு பாக்குத்தூள் வியாபாரி பரமசிவம் இவங்கள்லாம் பேப்பர்லே 'பான் வாயேஜ்'னு விளம்பரம் போட்டு அமெரிக்கா, ஐரோப்பான்னு போயிட்டு வந்துட்டாங்க. இவரு இவ்வளவு பெரிய பணக்காரரா இருந்து என்ன பிரயோசனம்? ஆடிட்டர்ங்கிற முறையில 'ஒரு ஃபாரின் ட்ரிப் போயிட்டு வாங்க...' உங்க மதிப்பு ஊர்லே அதிகமாகும்னு தினம் சொல்லிப் பார்க்கிறேன். அசைய மாட்டேங்கருரு. சாகறதுக்குள்ளவாவது அவரை ஒரு ஃபாரின் ட்ரிப் அனுப்பணும்னு பிரியப்படறேம்.''

''பேஷா! இதிலே கஷ்டமென்ன? கரும்பு தின்னக் கூலியா? போங்கன்னு சொன்னால் போக வேண்டியதுதானே?''

''போக மாட்டேங்கருரே! குரு ஸ்தானத்திலே இருக்கிற நீங்க சொல்றபடி சொன்னக் கேட்டாலும் கேட்பார்ன்னு நினைக்கிறேன்.''

''அவரோட ஆடிட்டரா இருக்கிற நீங்க சொல்லியே கேட்காதவர் நான் சொல்லியா கேட்கப் போருரு?'' என்று மெல்லப் பின்வாங்கினர் ஜோசியர்.

''அப்படிச் சொல்லாதீங்க ஜோசியரே! நீங்க சொல்ற விதமாச் சொன்னக் கேட்பார்னு தோணுது.''

''எப்படிச் சொல்லணும்கிறீங்க?''

''அது உங்களாலே முடியும். ஒரு நல்ல காரியத்தை எப்படி வற்புறுத்திச் சொல்றதுன்னு ஜோசியத்திலே ஆயிரம் இடம் இருக்கு.''

"சொல்லலாம். ஆனால் பொய்யாயிடப்படாதேன்னு பார்க்கிறேன்."

"நல்ல காரியத்துக்காகச் சிவவடிவேலுவோட புகழுக்காக அவரோட ஜோசியராகிய நீங்க ஒரு பொய் சொன்னால் கூடத் தப்பில்லேங்கிறது எங்க அபிப்ராயம் ஜோசியரே" என்று கூறியபடி ஒரு தட்டில் தயாராக வைத்திருந்த வெற்றிலே பாக்குப் பழத்துக்கு நடுவே இன்னும் ஒரு நூறு ரூபாய்த் தாளைச் செருகி எடுத்து நீட்டினார் ஆடிட்டர்.

"எந்த மாதிரி அவர் ஒப்புக் கொள்ற விதமாச் சொல்ல முடியும்னுதான் யோசிக்கிறேன்," என்றபடியே தட்டை வாங்கிக் கொண்டார் ஜோசியர்.

"அதெல்லாம் உங்க இஷ்டத்துக்கு விட்டுடறோம். வர்ற முதல் தேதி அவரும் ஆச்சியும் ஃபாரின் போறாங்க. உங்களைத் தான் நம்பியிருக்கோம்."

"உங்க நம்பிக்கை வீண்போகாமல் நான் பார்த்து முடிச்சுக் கொடுக்கிறேன்."

'எப்படிச் செய்யப் போகிறீர், என்ன சொல்லப் போகிறீர்?' என்று கடுக்கையூராரை அவர்கள் துருவித் துருவிக் கேட்கவில்லை. அவர் இஷ்டப்படி விட்டுவிட்டார்கள்.

"சிவவடிவேலு சார் சில முக்கிய விஷயங்களிலே என்னோட யோசனையைக் கேட்டுக் கிரக சஞ்சாரம் தசாபுத்தி களோட போக்கைத் தெரிஞ்சுக்காமே எதையும் பண்ணமாட் டார். இதுக்கு முன்னாலேயேகூட ரெண்டொரு தரம் 'எங்க ஆடிட்டர் ஃபாரின் டிரிப் ஃபாரின் டிரிப்னு என்னை உயிரை எடுக்கிறாரே? ஜாதகம் என்ன சொல்லுது? கிரகங்கள் எப்படி இருக்குன்னெல்லாம் என்னைக் கன்ஸல்ட் பண்ணியிருக்கார். நான் அப்பல்லாம் கூட அவரை ஒரேயடியா டிஸ்கரேஜ் பண்ணிடலே. 'சமயம் வரும், நானே உங்களுக்குச் சொல் றேன்'னுதான் தள்ளிப் போட்டிருக்கேன். ஒண்ணே ஒண்ணு

தான் யோசனை பண்ணுவார். பணம் செலவாகுமேன்னு நினைப்பார். இந்த எழுபது வயசிலே ஃபாரின் போய் என்ன ஆகணும்னு சலிச்சிப்பார். அதுக்கு வழி எங்கிட்டே இருக்கு. நான் பார்த்துக்கிறேன்,'' என்றார் ஜோசியர்.

குமரேசன் ரொம்ப ஜாக்கிரதையாயிருந்தான், அப்பாவுடைய வெளிநாட்டுப் பயணம் பற்றித் தான் எதுவும் பேசிவிடாமல் தவிர்த்தான். ஏனென்றால் எங்காவது தப்பித் தவறிப் பேச்சுவாக்கில் வாய் தவறிக்கூட ஜோசியர், 'உங்க செகண்ட் சன் குமரேசன் கூட நீங்க வெளிநாடு போகணும்னு ஆசைப்பட்டுச் சொல்றான்னு' பிரஸ்தாபித்துவிட நேர்ந்தால் அப்பா சந்தேகப்படுவார். போகவே மாட்டார். அதற்குப் பயந்து ஜோசியரைத் தூண்டுவதை எல்லாம் ஆடிட்டரே செய்து கொள்ளட்டும் என்று விட்டிருந்தான் குமரேசன்.

''காரியத்தை முடித்து நல்ல வார்த்தை சொல்லுங்கள்! உங்களை விசேஷமாகக் கவனிக்கிறேன். என்னோட 'கிளையண்ட்' களிலேயே பரம்பரைப் பெரிய மனுஷன்—அதிகப் பணக்காரர் சிவவடிவேலுன்னு பேரு. அவர் இன்னும் ஒரு ஃபாரின் ட்ரிப் கூடப் போகலேன்னு நான் வெட்கப்பட வேண்டியிருக்கு. முந்தாநாள் பணம் பண்ணின புதுப் பணக்காரன் லாட்ரி டிக்கெட் வாங்கி லட்சாதிபதியானவனெல்லாம் மறுநாளே சிங்கப்பூர், ஜப்பான்னு பறக்கிறான். இத்தனை பெரிய மனுஷன் சாகறதுக்கு முன்னே பிளேன் ஏறி நாலு நாடு பார்த்தார்னு இல்லாமே போயிடப் படாது.''

''கவலைப்படாதேயும்! நீர் நினைக்குறது நடக்கும்'' என்று ஆடிட்டருக்கு உறுதியளித்தார், ஜோசியர் கடுக்கையூரார்.''

மறுநாள் மாலையே அந்த அதிசயம் நடந்தது. பார்கவியின் நோய்களை டயக்னைஸ் பண்ணி முடிந்ததும் தாங்களே அவரைக் கூப்பிட்டதாகவும் அதற்குமுன் அவர் அனாவசியமாகத் தன்னையோ ஆடிட்டரையோ பார்க்க வரவேண்டாம்

என்று குப்தா சிவவடிவேலுக்குச் சொல்லி வைத்திருந்தான். அதனால் அந்தப் பக்கம் வராமலே வீட்டில் இருந்த சிவவடி வேலு மறுநாள் சாயங்காலம் ஆடிட்டரைத் தேடிக் கொண்டு பார்கவிக்கு வந்தார். கவலையாகக் காணப்பட்டார்.

"ஆடிட்டர் சார், ஒரு முக்கியமான விஷயம். உங்ககிட்ட கன்ஸல்ட் பண்ணலாம்னு வந்தேன்."

"என்ன சொல்லுங்க?"

"நீங்க ஃபாரின் டிரிப் ஃபாரின் டிரிப்னு வற்புறுத்திட்டி ருந்தீங்களே, அதுக்கு இப்போ நேரம் வந்திருக்கு. இப்போ இருக்கிற கஷ்டநஷ்டம் பணமுடை எல்லாத்தையும் பார்க் கறப்போ தயக்கமாகவும் இருக்கு."

"கஷ்ட நஷ்டம் என்னிக்கும் இருக்கத்தான் இருக்கும். அலை ஓய்ந்து கடல்லே நீராடுறதுங்கிறது நடக்கிற காரியம் இல்லே. அலை பாட்டுக்கு இருக்கும். நாம குளிச்சுத்தான் ஆகணும்."

"இது பண விஷயம். இப்ப இருக்கிற நஷ்டத்திலே... கட்டுப்படியாகணுமே?"

"அதெல்லாம் எங்கிட்ட விட்டுடுங்க, ஒரு டிராவல் ஏஜெண்ட் குரூப் குரூப்பா அவனே ஏற்பாடு பணிக் கூடவே அழைச்சிட்டுப் போறான். நம்ம தமிழாளுதான், பாஷைப் பிரச்சினை இல்லே. ஓட்டல் அகாமடேஷனும் அவனே பண்ணிடு வான். 'மாதவி டூர்ஸ் அண்ட் டிராவல்ஸ்'னு பேர். பிரமாத மாகவே பண்றார்" என்றார் ஆடிட்டர்.

## 10

சிவவடிவேலு, ஆச்சியும் தானுமாகப் பயணம் புறப்பட வேண்டும் என்று வந்தபோது ஆடிட்டருக்கு உடனே அந்த ஜோதிட கலாரத்தினம் கடுக்கையூர் கண்ணபிரானைச் சந்தித்து

கனகாபிஷேகம் செய்துவிட வேண்டும் போலிருந்தது. கோல்டு கண்ட்ரோல் ஆக்ட்—தங்க விலை ஏற்றம் எல்லாம் தடுத்திரா விட்டால் அதைச் செய்தே இருப்பார்.

''தனியாப் போகப்படாதாம்! தம்பதி சமேதராப் போகணும்னு ஜோசியர் சொல்ருரு.''

''பலே! ஹனி மூன் மூன்—ஆதாவது ஸெகண்ட் 'ஹனி மூன்' மாதிரிப் போயிட்டு வாங்க....''

''எனக்கு மனசே இல்லே! ஆனா எதையுமே வற்புறுத் தாத ஜோசியர் இதை வற்புறுத்தறாரு. இங்கே என்ன டான்னு திருப்பதி மொட்டை மாதிரி எல்லாமே பாதியிலே நிக்கிது. இந்தப் பிஸினஸ் வையத்தியரை வேறு வரவழைச் சிட்டோம். ஆனு ஜோசியர் நான் திரும்பி வரப்போ எல்லாமே அமோகமா இருக்கும்கிருரு.''

''ஒண்ணும் கவலைப் படாதீங்க; இந்தக் குப்தாவை நான் பார்த்துக்கிறேன், நீங்க திரும்பி வரப்போ ஒட்டல் பார்கவி புதுசா இருக்கும். அபார லாபத்திலே நடக்கும்.''

''அதுதான் எப்படின்னு புரியலே. என் புள்ளைங்க ரெண்டுமே தறுதலே, ஆச்சி என்கூட வந்துடுது. நீங்களும் பார்கவியுமாய்ப் பார்த்து எதினாச்சும் பண்ணினாத்தான் உண்டு.''

''ஒட்டல், மத்ததுலே ஏதாவது சேஞ்சேஸ் பண்ணணும்னு உங்க கையெழுத்தைத் தேடி அலையணும், அதுனுல் பார்கவி பேருக்குப் 'பவர் ஆஃப் அட்டர்னி' குடுத்துட்டுப் போயிடுங்க! நாங்க அவசியமானதைப் பண்ணிக்கிறோம்.''

''பார்கவிக்குக் குடுக்கலாமா? அல்லது கரும்பாயிரம் பயல் விசுவாசமானவன், மானேஜர்ங்கிற முறையிலே அவனுக்கு டெம்பரவரியாப் 'பவர்' குடுத்து எழுதித் தந்திட்டுப் போகட் டுமா?''

''அதெல்லாம் வேண்டாங்க! ஆயிரமிருந்தாலும், உங்க பொண்ணு பேரிலேயே எழுதிக் குடுத்திட்டுப் போறதுதான் நல்லது. அப்படியே செய்யுங்க.''

''எனக்கு ஒண்ணும் தெரியாது. நீங்களே அதெல்லாம் எப்படி எப்படிப் பண்ணணுமோ அப்படிப் பண்ணிடுங்க. புறப்படறது உறுதியானதும் கையெழுத்துப் போட்டுக் குடுத்துடறேன்.''

ஆடிட்டர் அனந்துக்குத் தன் செவிகளையே நம்ப முடியவில்லை. எதற்கும் ஆயிரம் யோசனைகள் பண்ணி இரண்டாயிரம் முறைகள் தயங்கக் கூடிய சிவவடிவேலுவா இப்படிச் சொல்கிறார் என்பதை நம்பவே முடியாமல் இருந்தது. ஜோசியர், என்ன சொக்குப் பொடி போட்டு மயக்கி அவரைச் சம்மதிக்க வைத்தார் என்று மர்மமாயிருந்தது. ஒரு பைசா செலவுக்கு முன் இருநூறு முறைகள் யோசித்துத் தயங்கும் கஞ்ச மகாப் பிரபுவை எப்படி இந்த மாதிரித் துணிய வைத்தார் என்பது பெரிய ஆச்சரிய மாயிருந்தது. அவரால் நம்பவே முடியவில்லை.

பத்து வருஷங்களாகத் தான் திரும்பத் திரும்ப வற்புறுத்தியும் வெளியே கிளம்ப மறுத்த ஒரு நாள்பட்ட பழைய கிணற்றுத் தவளையை இவர் எப்படிச் சரிப்படுத்தி வெளியே கிளப்பினார் என்று வியந்தார் ஆடிட்டர். ஜோசியரின் சாதுரியத்தைக் கொண்டாடினார்.

இதைக் குப்தாவிடம் தெரிவித்தபோது அவன் உடனே ரூம்பாயைக் கூப்பிட்டு, எக்லேர் சாக்லேட் வாங்கிவரச் செய்து ஆடிட்டர், தன் மனைவி சுஷ்மா, உடனிருந்த பார்கவி, குமரேசன் எல்லோருக்குமே வழங்கினான்.

''ஆபரேஷன் நியூ பார்கவிக்கு முக்கியமான இடைஞ்சல் கிளியராகிவிட்டது. நாம் முதலில் நினைத்ததுபோல் சிவவடிவேலு கப்பலில் போகமாட்டார் போலிருக்கிறது. அதனால் ஒரு வருஷமோ பத்து மாசமோ அவகாசம் கிடைக்காது. அங்கங்கே

அதிக நாட்கள் தங்கச் செய்து அவரது பிரயாண ஷெட்யூலைத் தயாரித்தால்கூட அட்லாண்டிக் ரூட்டில் கிளம்பி மறுபடி ஹவாய், ஹோனலூலூ, ஜப்பான், ஹாங்காங். பாங்காக், ஆஸ்திரேலியா, பிலிப்பைன்ஸ், இந்தோனேஷியா, மலேஷியா, சிங்கப்பூர் வழியாகப் பசிபிக் ரூட்டில் திரும்ப ஆறு மாதத்துக்குள்தான் ஆகும்! அதுக்கு மேலே இழுக்க முடியாது.''

''ஆறு மாதம் போதும்! அதுக்குள்ளே இந்த உலகத்தையே மாத்திப்பிடலாம்,'' என்றான் குப்தா.

''உலகத்தை மாத்திடறது சுலபம்! ஆனா எங்கப்பா பண்ணியிருக்கிற குழப்பங்களை மாத்தறது உலகத்தை மாத்தறதைவிடக் கஷ்டம்,'' என்றான் குமரேசன். அவனால் இன்னும் முழுசாக நம்ப முடியவில்லை.

''அட நீ சும்மா இருப்பா! ஒரே பெஸிமிஸ்டா இருக்கியே? உங்கப்பாவே மாறிக்கிட்டிருக்காரு. அவரே மாறுகிறப்போ அவர் பண்ணியிருக்கிற ஏற்பாடுகளை மாத்தறதா கஷ்டம்? நம்ம முயற்சியிலே, மலையையே புரட்டியாச்சு. அதாவது உங்கப்பாவையே ஆச்சியோடு ஃபாரின் ட்ரிப் போகத் துணியற அளவு மாத்திப் பிட்டோம். இனிமே மத்ததை மாத்தறது சுலபம்தான்.''

''ஆச்சியோட போறாரா? மழைதான் கொட்டப் போவுது. எச்சிக் கையாலே காக்காய் ஓட்ட மாட்டாரு. நூறு ரூபாய் முழு நோட்டா இருந்தா அதை மாத்தினால் எங்கே செலவழிஞ்சு போகுமோன்னு மாத்தமாட்டாரு. பத்து ரூபாய், ஐந்து ரூபாய்—அவ்வளவு ஏன் முழு ஒரு ரூபாய் நோட்டைக் கூட மாத்தினாச் செலவழிஞ்சிடுமேன்னு பயந்தே மாத்தமாட்டாரு. ஒரு ரூபாய்க்குக் கீழே சில்லறையா இருக்கிறதைத்தான் துணிஞ்சு செலவழிப்பாரு. அவரு மதுரைக்குப் போனால்தான் கான்சாமேட்டுத் தெருக் கையேந்தி பவனுக்குப் போற இரகசியமே இதுதான்! அந்த ஒரு தண்ணீர்ப் பந்தல்லேதான்

ரெண்டு இட்லி ஒரு வடை ஒரு சுக்குக் காபி—மொத்த பில் தொண்ணூற்றைந்து காசு வரும்! அப்படிப்பட்ட மனுஷன் இப்போ தானும் ஆச்சியுமா ஃபாரின் டிரிப் போகப் போருர்ணுல் பெரிய விஷயம். ஆஃப் சீஸன் கன்செஷன் ஏர் டிக்கெட்லே போனுல் கூட ரெண்டு டிக்கெட் எழுபதிணுயிரம் வரை ஆகும். அப்புறம் செலவுக்கு ஃபாரின் எக்சேஞ்ச் வேற.லட்ச ரூபாய்க்கு மேலே ஆயிரும். ஒரு ரூபாயை மாத்தி அதைச் சில்லறை யாக்கிவிடத் தயங்கற அப்பா இப்போ ஒரு லட்சத்தை மாத்தப் போருர்! என்னமோ புரட்சிதான் பண்றீங்க ஆடிட்டர் சார்!''

''கிரெடிட் கோஸ் டு கடுக்கையூர்! எல்லாம் அவர் பண்ணின மாயம்தான் அப்பா!'' என்ருர் ஆடிட்டர். குமரேசன் ஆடிட்டரிடமும் பிஸினஸ் டாக்டரிடமும் மகிழ்ச்சியோடு கை குலுக்கினுன். 'இப்ப அக்டோபர் மாசம் சார்! உலக வரலாற்றிலே எது எதையோ அக்டோபர் புரட்சி, நவம்பர் புரட்சின்னெல்லாம் சொல்ருங்க. உண்மையிலே இதுதான் சார் குருபுரத்தைப் பொறுத்தவரை அக்டோபர்ப் புரட்சி. அடுத்த மாசம் அதாவது நவம்பர் ஒண்ணுந் தேதி எங்கப்பா ஃபாரின் புறப்படருரே அதுதான் நவம்பர்ப் புரட்சி!''

''குமரேசன், சரியான புரட்சிப் பேர்வழிதான்! எப்பவும் புரட்சியிலேயே இருக்கான் பாருங்க,'' என்று சொல்லிச் சிரித்தார் ஆடிட்டர்.

''ஆகா என்று எழுந்தது பார் யுகப் புரட்சி! மாகாளி பார்கவியில் கடைக்கண் வைத்தாள்,'' என்று பட்டி மன்றங் களில் பேசுவது போல் பாரதியார் பாட்டைக் கொஞ்சம் மாற்றிப் பாடிக் காட்டினுன் குமரேசன்.

''குமரேசா! உன் டில்லி அண்ணனுக்கு உடனே நான் சொன்னதாக ஒரு கடிதம் எழுது. அவனைப் பதினைந்து நாள் லீவு போட்டுவிட்டு மனைவியோடு இங்கே புறப்பட்டு வரச் சொல்லு.''

"அவசரப்பட்டு அண்ணனை வரவழைத்தால் ஆபத்து சார்! அண்ணனைப் பார்த்ததுமே அப்பாவுக்கு எரிச்சல் கிளம்பி ஃபாரின் டிரிப்பையே கான்சல் பண்ணிடப் போருர்."

"நெவர்; எக்காரணத்திஞலும் இந்த டிரிப் கான்ஸல் ஆகாது. ஜோசியர் ஸ்ட்ராங்கா என்னமோ பண்ணியிருக்கார்."

"ஒரு புரட்சி ஜோசியராலே நிகழ்ந்திருக்கிறது என்ருல் அது முதல் தடவையாக இப்போதுதான் உலக வரலாற்றிலேயே இந்தக் குருபுரத்திலே நடந்திருக்கிறது சார்!"

"அட, நீ என்னப்பா இன்னமும் பட்டி மன்றத்திலேயும் கருத்தரங்கத்திலேயும் பேசற மாதிரியே உலக வரலாறு, புரட்சி அது இதுன்னு என்னென்னமோ பேசிட்டிருக்கே? உங்கண்ணனை வரவழைச்சு உருப்படியாச் சொத்துக்களைக் காப்பாத்தியாகணும். இல்லாட்டி சரக்கு மாஸ்டரும், கரும்பாயிரமுமே உங்களை சைபராக்கிப்பிடுவாங்க..."

"அதெல்லாம் நடக்காது சார்! கசக்கிப் பிழிகிற வேகத்திலே கரும்பாயிரத்தைத் துரும்பாயிரமாப் பீஸ் பீஸா ஆக்கிப் போட்டுருவேன்."

"கடைசி நிமிஷத்திலே பணம் அதிகம் செலவாகும் அது இதுன்னு சாக்குப் போக்குச் சொல்லி நிறுத்திடப் போருரு! நீங்களே டிராவல் அரேன்ஜ்மெண்ட்ஸைப் பண்ணுங்க. நீங்களே டிராவல் ஏஜெண்ட் மூலமா பாஸ்போர்ட் ஏற்பாடும் கவனிச்சுக்குங்க" என்று குப்தா மீண்டும் ஆடிட்டரை எச்சரித்தான். ஆடிட்டர் மறுநாள் சிவவடிவேலு, திருமதி சிவவடிவேலுவிடம் உரிய பாரங்களில் கையெழுத்து வாங்கிக் கொண்டு பாஸ்போர்ட் விசா வகையருவுக்காக ஒரு டஜன் போட்டோக்களையும் பிரிண்ட் போட்டு எடுத்துக் கொண்டு சென்னை புறப்பட்டார்.

சிவவடிவேலு புறப்படுகிற தினத்தன்று எல்லா முக்கிய தினசரிகளிலும், 'உலக நாடுகளில் ஓட்டல் தொழிலின்

நுணுக்கங்களை அறிந்துவர ஓட்டல் பார்வை அதிபர் துணைவியுடன் பயணம்,' என்று சிவவடிவேலு தம்பதியர் படத்துடன் விளம்பரம் வரவேண்டும் என்று ஆடிட்டர் தயாரித்து எடுத்துக் கொண்டார். அந்த விளம்பர டிராஃப்ட்டைப் படித்துப் புன்னகை புரிந்த குமரேசன், "உலக நாடுகளிலே அங்கங்கே உருப்படியா நடக்கிற ஓட்டல்களைக் கெடுக்காமல் எங்கப்பா திரும்பி வந்தாலே புண்ணியம் சார்!" என்றான்.

"ரொம்பத்தான் கிண்டல் பண்ணாதே! விளம்பரம்னு கொடுக்கறப்ப வேற எப்படிப்பா குடுக்கிறது?" என்று ஆடிட்டர் அவனைக் கடிந்து கொண்டார். எதற்கும் சென்னை புறப்படு முன்னால் இவ்வளவு தூரம் காரியத்தை இசைவாக்கிக் கொடுத்த ஜோசியரை நேரில் பார்த்துவிட்டு வந்துவிடலாமே என்று மேலும் ஒரு முழுப் பச்சை நோட்டுடன் ஜோசியரைப் பார்க்கக் கிளம்பினார் ஆடிட்டர் அனந்த்.

"என்னய்யா மந்திரம் போட்டீர்? மனுஷன் பொட்டிப் பாம்பாய் அடங்கிப் போய்த் தானே பரம சாதுவா எங்கிட்டத் தேடி வந்து, 'நீங்க பல தடவை சொன்ன யோசனையை இப்ப நான் ஏத்துக்கிறேன். நானும் ஆச்சியும் ஃபாரின் ட்ரிப் போறோம். அரேன்ஜ் பண்ணிடுங்க'ன்னு கூலாச் சொல்லிட்டாரே? எப்பிடி ஐயா இது முடிஞ்சுது?" என்று ஜோசியரைப் பார்த்ததுமே ஆவல் தாங்காமல் கேட்டார் ஆடிட்டர்.

"அது பரம ரகசியம்' வேண்டாம். விட்டுடுங்க!" என்று நழுவினார் ஜோசியர். ஆடிட்டரின் ஆவலை இது அதிகமாக்கியது.

## 11

"பரவாயில்லை! நான் வேறு யாரிட்டவும் சொல்ல மாட்டேன். எனக்குத் தெரியாத எந்த ரகசியமும் மிஸ்டர் சிவவடிவேலு குடும்பத்திலே கிடையாது. நான் வேறு யாரிட

மும் சொல்ல மாட்டேன் என்று சத்தியம் கூடப் பண்ணத் தயாராயிருக்கேன்,'' என்று கூறியபடியே சட்டைப் பையிலிருந்து நூறு ரூபாய் நோட்டை உருவினார் ஆடிட்டர்.

''உங்க வேண்டுகோளுக்காகச் சில நல்லதை எதிர்பார்த்து ஒரு பொய் சொல்லியிருக்கேன். வேற யாரிடமும் சொல்ற தில்லேன்னு சத்தியம் பண்ணித்தான் சிவவடிவேலுவே இதைத் தெரிஞ்சுக்கிட்டிருக்கார்.''

''நானும் அதே மாதிரித் தெரிஞ்சுக்கறேன்.''

''நீங்க தெரிஞ்சுக்கிறது தப்பில்லே. சொல்லப்போனா நீங்கவிரும்புறதாலேதான் நானே இதைப் பண்ணியிருக்கேன்'' என்று இழுத்தபடியே போய் வாயிற் கதவைத் தாழிட்டுவிட்டு வந்தார் ஜோசியர். பின்பு குரலை மெல்லத் தணித்து ரகசியம் பேசுவதற்கேற்ற லோ கியரில் போட்டு, ''நவம்பர் முதல் தேதியிலிருந்து ஒரு ஆறு மாச காலம் நீங்க உங்க பார்யா ளோட கடல் கடந்து தூர தேசத்திலே பிரயாணம் பண்றது நல்லது. ஏன்னா அந்தக் கால கட்டத்திலே சொந்த க்ஷேத் திரம்— சொந்த தேசம் எங்கே நீங்க இருந்தாலும் 'அபமிருத்யு பயம்' உங்களுக்கு நிச்சயமா இருக்கு! தூர தேசம் போய்ப் பரிகாரமா அங்கே பிரயாணம் பண்ணினாத் தான் தப்பிக்கலாம். நிச்சயமா இதை நீங்க கேட்டே ஆகணும். தொண்ணூறு வயசு வரை தீர்க்காயுசா இருக்கப் போறீங்க ஆனா இந்த அபமிருத்யு கண்டத்தை மட்டும் நீங்க தாண்டிட் டாக் கவலை இல்லேன்னேன். சிவவடிவேலு ஆடிப் போய் விட்டார். நல்லாப் பார்த்துச் சொல்லுங்கன்னு வற்புறுத்தி னார். 'நல்லாப் பார்த்துத்தான் சொல்றேன். உங்க உப்பைத் தின்னு வளர்ந்திருக்கிறேன். நீங்க தீர்க்காயுசா இருந்தால் தான் நான் க்ஷேமமா இருக்க முடியும்'னு என் கண்ணைத் துடைத்துக் கொண்டேன். சிவவடிவேலு மறு பேச்சுப் பேசா மல் ஒப்புக் கொண்டுவிட்டார்'' என்றார் ஜோசியர்.

சந்தேகத்தைத் தெளிவு செய்துகொள்ளும் பொருட்டு "அபமிருத்யு பயம்னு என்ன ஜோசியரே?" என்பதாகக் கேட்டார் ஆடிட்டர்.

"அதாவது துர்மரண பயம்! சிவவடிவேலு புரிந்து கொண்டு விட்டார். அவருக்கு ஜோஸ்யத்திலே அபார நம்பிக்கை. நில உச்சவரம்பு காரணமாகப் பூமியை வித்து ஓட்டல் கட்டலாம்னு நீங்க யோசனை சொல்லி விட்டாலும் அப்பவே எங்கிட்ட வந்துதான் 'சரிப்படுமா'ன்னு பிரசினம் கேட்டார். 'முதல்லே சிரமப் பட்டாலும் பின்னாலே போகப் போக இந்த ஓட்டல் தங்கச் சுரங்கமாப் பணத்தை அள்ளித் தரும்'னு பச்சைக் கொடி நான்தான் காமிச்சேன் அப்போ."

"சரி, அதுக்கும் சேர்த்து வச்சுக்கும்" என்று மேலும் ஒரு நூறு ரூபாயை எடுத்துக் கொடுத்தார் ஆடிட்டர்.

"நீங்க க்ஷேமமா இருக்கணும்."

"இனிமேல்தான் உம்ம ஆசீர்வாதம் பலிக்கணும். இது வரைக் கஷ்டம்தான்" என்று சிரித்தார் ஆடிட்டர்.

"தயவு செய்து இந்த விஷயம் நமக்குள்ளே இருக்கட்டும். 'அபமிருத்யு பயம்'னு சொல்றதுக்கு எனக்கே பிடிக்கலே. என்னமோ போல இருந்து மனுஷன் கருமி கஞ்சன். இது மாதிரிச் சொல்லிப் பயமுறுத்தினாலொழியக் கிளம்ப மாட் டார்னு பட்டது. சொல்லிட்டேன். எதுக்குமே பயப்படாத சிவவடிவேலு. மரணம்னு சொன்னதும் அப்படியே வெல வெலத்துப்போயி உடனே பிரயாணத்துக்குச் சம்மதிச்சுட்டார், உங்க வேண்டுகோளைத் தட்ட முடியாமல் இந்தப் பாபத்தைப் பண்ணும்படு ஆயிட்டது மிஸ்டர் அனந்த்."

"இதிலே ஒரு பாபமும் இல்லே, ஜோசியரே! நெருப் புன்னு சொன்னாலே வாய் வெந்தா போயிடப் போறது? சிவ வடிவேலு தீர்க்காயுசா இருப்பார். அவரோட வாரிசுகளும் தீர்க்காயுசா இருக்க நாம் பாடுபடறோம். அவ்வளவுதான்."

ஜோசியருக்கு ரகசியத்தைப் பாதுகாப்பதாக மீண்டும் வாக்களித்த பின் அவரிடம் விடை பெற்றுர் அனந்த். அதன் பின் ஏற்பாடுகள் ஜெட் வேகத்தில் நடந்தன. பார்கவி பேருக்குப் பவர் பத்திரம் முதல் தேவையான கையெழுத்துக் கள் பெறப்பட்டன. வேஷ்டி முழுக்கைச் சட்டை தவிர வேறு உடுப்புக்களே அணிந்து பழக்கப்படாத சிவவடிவேலுவுக்கு ஒரு சூட் கோட் தைக்க அளவு எடுக்கப்பட்டது. ஆறுமாத காலம் பயணம் என்பதால் இரண்டு ஸெட் சூட்டும் கோட்டும் தைத்துக் கொள்ளச் சொல்லிக் குப்தா யோசனை சொன்னுன்.

தையல் கூலி உள்பட முதல் தரமான உல்லனில் இரண்டு செட் சூட் கோட் தைக்க மூவாயிரம் முதல் மூவாயிரத்து ஐந்நூறு வரை செலவாகும் என்றவுடன் சிவவடிவேலு மறுபடி தொட்டாற் சுருங்கி ஆகிப் பின்வாங்கினுர்.

''ஒரு நாள் கூத்துக்குத் தலே சிரைத்த கதையாவில்ல இருக்குடி! ஆறு மாச நாடகத்துக்காக மூவாயிரம் நாலாயிர ரூபாய்க்குக் குழாய் தைக்கணுமா? ஒரு புண்ணுக்கும் வேணும்; நான் ரெண்டு கம்பளிப் போர்வையை எடுத்துகிட்டுப் போயிட்டு வர்றேன்'' என்றுர் அவர்.

இதைக்கேட்டு ஆடிட்டருக்கு அழுவதா சிரிப்பதா என்று ஆகிவிட்டது.

''உங்க ஸ்டேட்டஸ்க்கு அப்படி எல்லாம் பண்ணக் கூடாது. கம்பளியும் வேஷ்டியுமாப் போனீங்கன்னாத் தேயி லேத் தோட்டத்துக் கங்காணி மாதிரி இருக்கும். அதெல்லாம் கூடாது. நீட்டா கோட்டும் சூட்டும் போட்டு டை கட்டி விட்டு நான் மேக்அப் பண்ணி அனுப்பறேன். அசல் குருபுரம் சமஸ் தானத்துக் குட்டி சமஸ்தாளுதிபதி மாதிரி நீங்க போய் இறங்கணும்! அந்தக் குளிர்லே வேஷ்டி சட்டை எல்லாம் தாங்காது. உங்க வயசையும் யோசனை பண்ணிப் பாருங்க'' என்று குப்தா அவரைக் கெஞ்சினுன். ஆடிட்டரும் வற்புறுத் தினுர்.

''சரி! தைச்சுத் தொலைக்கலாம்'' என்று வேண்டா வெறுப்பாகத்தான் டைலருக்கு அளவு கொடுத்தார் சிவவடிவேலு. இப்படி ஒவ்வொரு கட்டத்திலும் அவரை மன்றாடி ஜாக்கி போட்டுத் தூக்கி நிறுத்தித் தயார்ப்படுத்த வேண்டியிருந்தது.

''இந்தாங்க ஆடிட்டர் சார்! கார்டமம் எக்ஸ்போர்ட் மார்க்கெட் விலை டல்லாயிருக்கிறாப்புலத் தெரியுது. பார்கவி பாட்டுக்கு அவசரப்பட்டுடப் போவுது. பிரைஸ் தூக்கலா இருக்கிறப்ப கோடௌன்லே இருக்கிற ஏலக்காயை வெளியில விடுங்க. கவனம்'' என்று ஆடிட்டரை எச்சரித்தார். கடைசி நிமிஷம் வரை இப்படித் தொணதொணப்பு நீடித்தது.

''பிஸினஸ் வைத்தியரு என்ன சீர்த்திருத்தம் வேணும்னாப் பண்ணட்டும். கரும்பாயிரத்தைக் கலந்து பேசிப் பண்ணுங்க. ரொம்ப நன்றி விசுவாசமுள்ளவன். அவன் எனக்குத் துரோகம் நினைக்க மாட்டான். அவன் இல்லாமே ஓட்டல் பார்கவி இல்லே,'' என்றார். அவர்களுக்குப் பகீரென்றது.

வலது காதில் வில்வப் பூ, கழுத்தில் ருத்ராட்சம், முகத்தில் ஒரு சந்தனக் கீற்று. அதன்மேல் விபூதி. அதற்கும் மேல் ரெட்டைக் குங்குமப் பொட்டு, பருத்த சரீரம்—இத்யாதி லட்சணங்களுடன் கரும்பாயிரத்தை நினைத்தபோதே ஒரு நவீன ஓட்டல் மானேஜராகத் தெரியவில்லை. குப்தாவுக்கு ஒரே எரிச்சல், கிராமக் கணக்குப் பிள்ளையின் தோற்றம் அல்லது மிராசுதார் வீட்டுக் காரியஸ்தரின் அமைப்புள்ள ஒரு ருத்ராட்சப் பூனையை எப்படி ஒரு மாடர்ன் ஓட்டலில் நிர்வாகியாக அனுமதிப்பது?

சிவவடிவேலு கிளம்புகிற வரை அவர்கள் மூச்சு விட வில்லை. எல்லோரும் சிவவடிவேலு தம்பதிகளை மதுரை விமான நிலையத்திலேயே வழியனுப்பி வைத்தார்கள். ஆடிட்டர் அனந்த் மட்டும் பம்பாய் வரை போய்விட்டு வந்தார்.

சிவவடிவேலு தம்பதிகள் புறப்பட்டுச் சென்ற மறுதினம் டில்லியிலிருந்து அவருடைய மூத்த மகன் தண்டபாணியும் அவன் மனைவியும் குருபுரம் வந்து சேர்ந்தார்கள்.

அதற்கு மறுநாள் பார்க்கவியின் மெயின் கேட் இழுத்துப் பூட்டப்பட்டுப் பார்கவியின் கையெழுத்துடன் குளோஸர் நோட்டீஸ் ஒட்டப்பட்டது.

முதல் நாள் இரவு எல்லாருக்கும் சட்டப்படி கணக்குத் தீர்க்கப்பட்டது. கரும்பாயிரமும், சரக்கு மாஸ்டரும் மட்டும் கொஞ்சம் முரண்டினார்கள். குப்தாவும், குமரேசனும் அவர்களை அழைத்து, ''நீங்கள் ரெண்டு பேரும் இங்கே செய்திருக்கிற கையாடல்கள், ஊழல்கள் பற்றி ஆதாரபூர்வமா நிரூபிக்க முடியும். மரியாதையா ஒதுங்கிக்குங்க! இல்லாட்டி கோர்ட்டிலே சந்திக்க வேண்டியிருக்கும்,'' என்று மிரட்டிய பின்பே இருவரும் வழிக்கு வந்தனர்.

ஆபரேஷன் 'நியூ பார்கவி' ஸ்மூத் ஆகத் தொடங்கியது. எல்லா விவரங்களையும் விவரித்து மூத்தவன் தண்டபாணியைக் கன்வின்ஸ் செய்ததும் அவன் மேலும் ஆறு மாத லீவுக்கு அப்ளை பண்ணினன். இவர்களோடு தங்கி ஒத்துழைக்க இணங்கினன்.

குப்தா பம்பாயிலிருந்தும் டில்லியிலிருந்தும் இண்டீரியர் டெகரேஷனுக்குச் சிலரை வரவழைத்தான்.

இதற்கிடையே சிம்லாவிலிருந்து குப்தாவின் மாமனருக்கு உடல்நலமில்லை என்று தந்தி வரவே மிஸஸ் குப்தா அங்கு விரைய வேண்டி நேர்ந்தது.

''ஐயையோ அக்கா! நீங்க இல்லாமே இங்கே எனக்குப் போரடிக்கும். நானும் உங்க கூட சிம்லாவுக்கு வரட்டுமா?'' என்று முரண்டு பிடிக்கும் சிறுகுழந்தைபோல் சுஷ்மாவைக் கெஞ்சினாள் பார்கவி.

''எனக்கு ரெட்டைச் சந்தோஷம் பார்கவி! நீ உங்க அண்ணன்கள் கிட்டே ஒரு வார்த்தை கேட்டுக்கோ. அப்புறம் ரெண்டு பேருக்குமா பிளேன் டிக்கெட் எடுத்துடலாம். சண்டிகர் வரை பிளேன்லே போயிட்டோம்னு, அங்கே வந்து கூட்டிக் கொண்டு போக அஜீத் கார் அனுப்பியிருப்பான். அவனுக்கு டெலக்ஸ் அனுப்பிடலாம். ஆப்பிள் தோட்டம் பழங்களாய்க் குலுங்கும் சீசன் இது! அதெல்லாம் சுத்திப் பார்க்கலாம் இப்போ...'' என்றாள் சுஷ்மா. குப்தாவிடம் சொல்லிப் பார்கவியின் சகோதரர்களிடம் அவனை அழைத்துப் போக அனுமதி பெறுமாறு சுஷ்மாவே ஏற்பாடு செய்தாள். பார்கவியும் இரண்டு அண்ணன்களிடமும் கேட்டாள். அவர்கள் சம்மதித்தார்கள்.

''இதுவரை அப்பா உன்னை அடைச்சு வைச்சுப் பாழாக் கிட்டாரு. அங்கே இங்கே போயி நாலு மனுஷாளோடப் பழகினால் தான் உலகம் புரியும்,'' என்று சொல்லவே செய் தான் குமரேசன்.

''போயிட்டு வாம்மா! நீ மிஸஸ் குப்தாவோட போறது உங்க சொந்த அக்காவோடு போகிற மாதிரி. நீ திரும்பி வர்றப்ப இந்தப் பார்கவியும் புதுசா இருக்கும். நீயும் புதுசா ஃபிரஷ்ஷா சிம்லா ஆப்பிள் மாதிரி வரணும்'' என்றார் ஆடிட்டர். ஒட்டல் பார்கவி சம்பந்தமாகச் சில செக் லீஃப்கள், ரிகார்டுகளில் கையெழுத்து வாங்கிக் கொண்டார். மறுநாள் சுஷ்மாவும் பார்கவியும் சிம்லா புறப்பட்டனர்.

பிஸினஸ் டாக்டர் குப்தாவும், ஆடிட்டரும், சிவவடிவேலு மகன்களும் ஒட்டல் பார்கவியை—ஒட்டல் நியூ பார்கவியாக மாற்றும் முயற்சியில் இறங்கியிருந்த சமயத்தில் வெளியேறிய கரும்பாயிரம் வகையறாக்கள் பல வதந்திகளைக் கிளப்பி விட்டனர். சேற்றை வாரி இறைத்தனர்.

சிவவடிவேலுவை வெளிநாட்டுக்கு அனுப்பிவிட்டு ஆடிட்டர், குப்தா இருவரும் ஏதோ குழப்பம் பண்ணுவதாக

வும், ஓட்டலை விற்கப்போவதாகவும், அசைவ ஓட்டலாக மாற்றப் போவதாகவும் பல்வேறு வதந்திகளைப் பரப்பினார்கள். குருபுரம் போன்ற ஓர் இரண்டுங் கெட்டான் ஊரில் வதந்திகள் தானாகவே வளரும். அதைப் பொருட்படுத்தாமல் பார்கவி மாறுதல் பெற்றுக் கொண்டிருந்தாள். ஆபரேஷன் நியூ பார்கவிக்குப் பதினாறு லட்சம் மேற்கொண்டு முதலீடு தேவைப் பட்டது. பாங்கு ஓ. டி லிமிட் ஏற்கனவே தாண்டியிருந்தது. கடனும் இருந்தது. சிவவடிவேலுவின் இருப்பில் அவர் வெளிநாடு போகும் செலவுக்கு எடுத்தது போக மூன்று லட்சமே இருந்தது.

## 12

வேலைகளைத் தொடங்கி இருந்தாலும் பணப்பிரசினை இப் போது தயங்க வைத்தது.

''என்ன ஆடிட்டர் சார், வேற ஏதாவது ரிஸோர்சஸ் உண்டா?'' என்றான் குப்தா.

''கோடௌன்ல ஏலக்காய் இருக்கு. மார்க்கெட் நிலவரம் சரியில்லே. விலை ஏறினால் அஞ்சு அஞ்சரை லட்சத்துக்குப் போகும். பணம் ரியலைஸ் ஆக நாள் பிடிக்கும்.''

''என்னோட பெர்ஸனல் சேவிங்க்ஸ் வகையில் ஒன்றரை லட்சம் இருக்கு'' என்றான் மூத்தவன் தண்டபாணி.

குப்தா அலுத்துக் கொண்டான். ''இதெல்லாம் போதாது. எடுத்த காரியம் வேகமா முடியணும். உங்கப்பா திரும்பறதுக் குள்ள மாறுதல் பண்ணி ஓட்டல் திறந்து நடந்தாகணும்.''

''பிரைவேட் லோன் ட்ரை பண்ணலாமா? உள்ளூர்லியே பார்ப்போம்,'' என்றான் குமரேசன்.

''அது கிடைக்காதுப்பா! பில்டிங் மேலே ஏற்கெனவே கடன் இருக்கு. உங்கப்பாவும் ஊர்ல இல்லே. இந்த ஊர்

பணக்காரங்க எல்லாமே பயந்தாங்கொள்ளிகள். தரமாட்டாங்க,'' என்று ஆடிட்டர் அதையும் மறுத்துவிட்டார்.

''வெயிட் எ மினிட், எனக்கு ஒரு ஐடியாத் தோணுது. முயற்சி பண்ணிப் பார்க்கலாம். அநேகமாகப் பலிக்கும்... எதுக்கும் லெட் அஸ் டேக் எ சான்ஸ்,'' என்று சிம்லாவில் தன் மைத்துனன் அஜீத்துக்கு ஒரு டெலக்ஸ் அடித்தான் குப்தா.

குப்தாவின் அதிர்ஷ்டம் அவன் மனைவியும் அப்போது சிம்லாவில் இருந்ததால் அஜீத் அவளைக் கேட்டாளோ என்னவோ அன்று இரவே மறு டெலக்ஸில் இவன் கேட்ட பதினைந்து லட்சத்தை அரேஞ்ச் பண்ண முடியும் என்று பதில் வந்துவிட்டது.

''நீங்க வெறும் பிஸினஸ் டாக்டர் மட்டுமில்லை மிஸ்டர் குப்தா, உண்மையிலேயே பரோபகாரி!'' என்று ஆடிட்டரும் சிவவடிவேலுவின் பிள்ளைகளும் அவனைப் புகழ்ந்து நன்றி சொன்னார்கள். அவன் மிகவும் அடக்கமாக அவர்களுக்குப் பதில் கூறினான். ''பொதுவாக நான் இந்த அளவு உரிமை எடுத்துக் கொண்டு என்னை ஈடுபடுத்திக் கொள்கிற வழக்கம் இல்லை. நோயைக் கண்டுபிடித்து ப்ரிஸ்கிரிப்ஷன் எழுதிக் கொடுத்துவிட்டு விலகிக்கொள்வேன். ஆனால் இதுவரை நான் சிகிச்சை செய்த 'சிக் இண்டஸ்ட்ரியிலேயே' இது புதுமாதிரியானது. இதிலே யூனிட்டைவிட யூனிட்டின் உரிமையாளர் தான் நோயாளியாயிருந்தார். அதனாலே எனக்கு இது ஒரு சேலஞ்ச் ஆயிடிச்சு. ஆகவே அதிகமா இண்ட்ரெஸ்ட் எடுத்துக் கிட்டேன். நானும் என் மனைவியும் இந்தக் குடும்பத்து மேலே கொஞ்சம் அதிகப் பாசம் வச்சுட்டோம். லாபம் வர ஆரம்பிச்சதும் என் மைத்துனனோட இந்த லோனை ஒரு நியாயமான வட்டியோடத் திருப்பித் தந்துடுவீங்கன்னு நம்பறேன்.''

''ஒரு லோன் டாகுமெண்ட் வேணா ரிஜிஸ்தர் பண்ணிப் போம்.''

''வேண்டாம்! ஓரல் எக்ரிமெண்ட் போதும். நான் உங்களை நம்பறேன். ஜெண்டில்மேன் எக்ரிமெண்ட்டை நம்பற மாதிரி நான் பத்திரத்தைக் கூட நம்பறதில்லே...''

குப்தா ரொம்பப் பெரிய மனிதனுக அவர்களுக்குத் தோற்ற மளித்தான். பிராப்ளத்தைக் கண்டுபிடித்து, சிகிச்சை முறையையும் மருந்துகளையும் கூறிவிட்டுத் தன் ஃபீஸுக்காகக் கையை நீட்டும் பிஸினஸ் டாக்டராக மட்டும் அவன் இல்லை. அவனுக்கு மனிதாபிமானம் இருப்பது தெரிந்தது.

புதிய திட்டத்தை நிறைவேற்ற ஒரு கால எல்லையை அதிகபட்ச லிமிட் என்று அறுபது நாள் போட்டுக் கொடுத்தான் குப்தா. அவ்வளவு நாட்கள் தான் குருபுரத்திலேயே இருக்க முடியாது என்றும் தனக்கு வேறு நோய்வாய்ப்பட்ட தொழில்களிலிருந்தும் அவசர அழைப்பு இருக்கிறது என்றும் இரண்டு மூன்று முறை பம்பாய், அஹமதாபாத், கான்பூர் என்று நடுநடுவே போய்விட்டு வந்தான் குப்தா. மைத்துனனிடமிருந்து பணத்தை வரவழைத்துக் கொடுத்து மாறுதல்களின் வளர்ச்சிக்கான ப்ளூ பிரிண்ட்டையும் கையில் தந்து டைம் ஷெட்யூலையும் அளித்து ஆடிட்டர் சிவவடிவேலுவின் மகனைகளை வேலையில் ஈடுபடுத்தினுன் குப்தா.

இதன் நடுவே திடீரென்று ஒரு நாள் சென்னையிலுள்ள மாதவி டூர்ஸ் அண்ட் டிராவல்ஸிலிருந்து ஆடிட்டர் அனந்துக்கு ஒரு ஃபோன் வந்தது. ''சிவவடிவேலு தம்பதிகள் சௌக்கியமாக இருப்பதாகத் தகவல் சொல்லிவிட்டு ''யாரோ கரும்பாயிரம்னு ஒரு ஆள் உங்க ஊரிலே இருந்து வந்து ஒரு லெட்டரைக் கொடுத்து, இது ரொம்ப முக்கியம். இதை உடனே முதலாளிக்கு அனுப்புங்கன்னு வற்புறுத்தருரு! என்ன செய்யறது? இதை அனுப்பலாம் என்ருல் நியூயார்க் அல்லது லண்டனில் எங்களுக்கு ஒரு காண்டாக்ட் அட்ரஸ் இருக்கு. அங்கே அனுப்பி மிஸ்டர் சிவவடிவேலுவிடம் கொடுக்கச் சொல்ல முடியும்! என்ன சொல்றீங்களோ அப்படியே செய்யலாம்,'' என்ருர்கள்.

''அதெல்லாம் அவருக்கு அனுப்பவேண்டாம். என்னைத் தவிர யார் எது சொன்னாலும் நீங்கள் கேட்க வேண்டுமென்பதில்லை'' என்று ஆடிட்டர் மாதவி டூர்ஸ் ஆட்களுக்குக் கண்டிப்பாகப் பதில் சொல்லிவிட்டார்.

பதவி பறிக்கப்பட்ட கரும்பாயிரத்தின் சூழ்ச்சி அவர்களுக்குப் புரிந்தது. கடிதத்தை வாங்கி வைத்துக்கொண்டு சிவவடிவேலுவுக்கு அனுப்புவதாகச் சொல்லி விடும்படியும் அப்புறம் அதை ரகசியமாகத் தனக்கு அனுப்பி விடும்படியும் டிராவல் ஏஜன்ஸிக்குத் தகவல் சொல்லிச் சமாளித்தார் அனந்த். ஆடிட்டர் மூலம் நிறையப் பிரயாண ஏற்பாடுகள் நடப்பதால் மாதவி டிராவல்ஸ் அவருக்குக் கட்டுப்பட்ட ஒரு நிறுவனமாக இருந்தது. அதனால்தான் கரும்பாயிரம் கடிதத்தோடு போய் அணுகியபோது கூட அதை அப்படியே சிவவடிவேலுவுக்கு அனுப்பி விடாமல் ஆடிட்டரைக் கலந்து பேசினார்கள்.

இரண்டு மூன்று நாள் கழித்துப் பாரிஸிலிருந்து சிவவடிவேலுவின் கையெழுத்தோடு பிக்சர் போஸ்ட் கார்டுகள் ஆடிட்டர், குப்தா, பார்கவி ஆகியவர்கள் பெயருக்கு வந்தன. ஆடிட்டருடைய கார்டிலேயே ஒரு வரி 'கரும்பாயிரத்துக்கு அன்பைச் சொல்லவும்' என்று இருந்தது. காசிக்குப் போயும் கர்மம் தீரவில்லை என்பதுபோல் பாரிசில் போயும் அவர் கரும்பாயிரத்தை மறக்கவில்லை என்று தோன்றியது. சிவவடிவேலு சூட்டுக் கோட்டோடு ஆச்சியோடும் மற்றச் சுற்றுலாப் பயணிகளுடனும் எப்படியெப்படி வளைய வருவார் என்று கற்பனையில் மூழ்கினார் ஆடிட்டர்.

ஓர் ஆடிட்டோரியம், முழுக்க முழுக்கப் பெண்களே செர்வ் பண்ணும் 'சுபமங்களம்' என்கிற ஏ.சி. ரெஸ்டாரெண்ட், மெருகேறிய புது அறைகள், அதில் நான்கு ஏ.சி. சூட், தனி வாசலுடன் ஒரு ஐஸ்கிரீம் பார்லர். எல்லாம் டெகரேஷன் முடிந்து தயாராகிவிட்டன.

குப்தா இம்முறை குமரேசனையும் தண்டபாணியையும் முன்னெச்சரிக்கை செய்தார்; "தண்டபாணி! பர்ச்சேஸ். ஸ்டோர் ரூம். கேஷ் இன்ஃப்ளோ இது மூணுக்கும் நீங்க பொறுப்பு லாட்ஜிங் முழுக்கவும் அவுட்டோர் கேட்டரிங்கும் குமரேசன் பொறுப்பில இருக்கும்," என்றார்.

அந்த வாரம் குப்தாவும் குமரேசனும் காரில் கோட்டயம் புறப்பட்டார்கள், கேட்டரிங் பயிற்சி பெறும் பெண்களில் சிலரைப் பார்கவிக்குத் தேர்ந்தெடுக்க வேண்டியிருந்தது. முதலில் நேரே கொச்சிக்குப் போய்த் தங்கி அதே இன்ஸ்டி டியூட்டில் தயாரான பெண்களே பரிமாறும் ஓட்டலைப் பார்வை யிட்டார்கள்.

குமரேசன் சொன்னது போல் அங்கே கூட்டம் பொங்கி வழிந்தது. அதே சமயம் கௌரவமாகவும் இருந்தது. அந்த ஓட்டல் உரிமையாளரைக் குப்தாவும் குமரேசனும் சந்தித்து, "இப்படி முழு அளவில் பெண்களே பரிமாறுபவர்களாக இருப்பதில் பிரசினை உண்டா? அவரது அனுபவம் எப்படி?" என்று தங்களை அறிமுகப்படுத்திக்கொண்டு விசாரித்தார்கள். அவரது பதில் ஆச்சரியப்பட வைத்தது.

"எங்களைப் பொறுத்தவரை ஒரு பிரசினையும் இல்லே. சொல்லப் போனா எங்கள் கேரள கலாசாரப்படி முண்டும் சோளியும் அணிந்து, தாவணி கூட இல்லாமல் தான் இவங்க பரிமாறுகிறாங்க. எங்க கஸ்டமர்ஸ் டீஸண்டா நடந்துக்கிறாங்க. கேரளத்துக்கு வெளியிலே இருந்து வர்ற அந்நியப் பிரதேசத் துக் கஸ்டமர்ஸ்தான் கொஞ்சம் இண்டீஸண்டா வெறிச்சுப் பார்க்கிறாங்க! எங்க ஓட்டல் மேனேஜ்மெண்ட்டைப் பொறுத்த வரை இவங்களுக்குத் தனி வீடு எடுத்துக் கொடுத்துத் தங்க வச்சிருக்கோம். எங்க சொந்தத் தங்கைகள் மாதிரி கவனிச் சிக்கிறோம்."

"இதை மத்தவங்க தப்பா நெனைக்கிறாங்களா, பேசறாங்களா?"

"அப்படி நினைக்கிறதுக்கும் பேசறதுக்கும் இதிலே என்ன தப்பு இருக்கு? விமானங்களிலே ஏர் ஹோஸ்டஸ் பெண்கள் அழகாக டிரஸ் பண்ணிக்கிட்டுச் சிரிச்சுப் பேசிப் பிரயாணிங் களுக்குச் சிற்றுண்டி,உணவு பரிமாறலியா? அது மாதிரிதானே? ஐரோப்பாவிலே எத்தனை ரெஸ்டாரெண்ட்ஸ்லே பெண்களே பரிமாறுகிறார்கள்? இதிலே என்ன தப்பு? தப்புன்னு நினைக்கிற மனப்பான்மைதான் தப்பு.

குப்தாவுக்கும் குமரேசனுக்கும் அவருடைய பதில் சுபாவமாகவும் திருப்தியாகவும் இருந்தது. பல விஷயங்களில் எந்தக் கோளாறும் இல்லை. அதைப் பார்க்கிறவர்களின் பார்வையில்தான் கோளாறு உருவாகிறது என்று தோன்றி யது. இத்தகைய பெண்களில் சிலர் சில ஆண்டுகள் இப்படி வேலை பார்த்தபின் திருமணம் செய்துகொண்டு குடும்பம் நடத்தப் போய்விடுவதாகவும் அந்த ரெஸ்டாரெண்டின் அதிபரே கூறினார். சிலர் விஷயத்தில் கஸ்டமர்களில் இருந்தே கௌரவமான கணவர்கள் கிடைத்துக் காதல் கல்யாணம் ஆகி யிருப்பதாகவும் அவர் கூறினார். கல்யாணமான பின்னும் வேலையில் தொடர்கிற சில பெண்களையும் அவரே கூப்பிட்டு அறிமுகப்படுத்தினார். குருபுரம் போன்ற ஓர் ஊரில் இதை ஒரு 'சீப் டெக்னிக்' என்றும் வியாபார உத்தி என்றும் யாரா வது புரளி கிளப்பிவிட்டு விடக்கூடாதே என்று அவர்கள் யோசிக்க வேண்டியிருந்தது.

"துணிந்து செய்யுங்கள்! உங்கள் ஊரில் இது இன்னும் வெற்றியளிக்கும். பேசுகிறவர்கள் பேசிப் பேசி ஓய்ந்து போவார்கள். ஆனால் நீங்கள் நாணயமாக நடந்து கொண்டால் எதுவும் கெடுவராது." என்றார் கொச்சி யில் அந்த ரெஸ்டாரெண்ட்டை நடத்தியவர்.

பெண்களே சர்வ் செய்யும் 'சுபமங்களம்' ஏ.சி. ரெஸ்டாரெண்டுக்கு ஏற்பாடு செய்யும் உறுதியுடன் அந்தக் கொச்சி ஒட்டல் அதிபரிடம் ஒரு சிபாரிசுக் கடிதமும் வாங்கிக் கொண்டு கோட்டயம் புறப்பட்டார்கள் அவர்கள்.

கோட்டயத்தில் இந்த இன்ஸ்டிடியூட்டின் முதல்வர் குஞ்சம்மணியம்மா அவர்களை மிகவும் மரியாதையாக வரவேற்ருர். அன்பாகப் பேசினுர்.

இவர்கள் நடத்தப் போகும் ரெஸ்டாரெண்டின் தரம், ஊர், இவர்களால் தரமுடிந்த சம்பள விகிதம் எல்லாம் தெரிந்தால் கேட்டரிங் டிப்ளமா வாங்கித் தயாராக இருக்கும் பெண்களை அழைப்பதாகவும் ''அவர்களில் உங்களுக்குப் பிடித்தவர்களைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம்.'' என்றும் கூறினுர்.

# 13

குமரேசன் நினைத்தது போல் அந்தப் பயிற்சி நிறுவனத்திலிருந்து பெண்களை வேலைக்கு அழைத்துச் செல்லுவது அவ்வளவு சுலபமாயில்லை. கொச்சி ரெஸ்டாரெண்ட் அதிபர் சிபாரிசுக் கடிதம் தந்ததனுலும் குப்தா, குமரேசன் இருவருடைய பழகும் முறைகளாலும்தான் ஓரளவு மரியாதையான வரவேற்பு கிடைத்தது. கூலிக்குச் சித்தாள் பிடிப்பது போல ஆட்களை அவர்களிடமிருந்து அமர்த்தமுடியாதென்று தெளிவாகப் புரிந்தது. இவர்களும் அப்படி அமர்த்த விரும்பவில்லை.

குஞ்சம்மணியம்மா சொன்னாள் :

''எங்ககிட்ட இங்கே டிரெயினிங் பெற்று டிப்ளமா வாங்கின சில பெண்கள் ஏர் ஹோஸ்டஸ் ஆக இருக்கிருர்கள். நீங்கள் ஒரு கோரிக்கை லெட்டர் எழுதிக் கொடுத்தால் எங்கள் ஸ்தாபனத்தின் இன்ஸ்பெக்ஷன் ஆட்கள் வந்து உடனே உங்கள் ரெஸ்ட்டாரெண்டை இன்ஸ்பெக்ட் செய்து எங்கள் பெண்களை அங்கே வேலை பார்க்க அனுப்பலாமா என்று எங்களுக்கு ஒப்பீனியன் அனுப்புவார்கள். அதன்பிறகுதான் பெண்களை அனுப்புவோம். இதெல்லாம் ஜஸ்ட் ஃபார்மாலிட்டீஸ். நீங்க தப்பா நினைக்கப்படாது. சில வாரங்களுக்கு முன்னே யாரோ கோயம்புத்தூர்ப் பக்கத்திலேர்ந்து வந்து

ரொம்பக் கொச்சையா எப்படி எங்களை அணுகறதுன்னு கூடத் தெரியாமே, 'பொண்ணுங்க வேணும்,'னு கேட்டாங்க. வந்த விதம் கேட்ட தினுசு எதுவுமே டீசண்டா இல்லே! விலாசம் கேட்டோம் மூங்கில் முறிச்சான்பாளையம்னு ஒரு அட்ரஸ் குடுத்தார். அங்கே எங்க இன்ஸ்பெக்ஷன் டீமை அனுப்பிப் பார்த்தா அவர் குடுத்த அட்ரஸ் ஒரு சாராயக் கடையாயிருந்தது."

"அடப் பாவமே! நீங்க ஜாக்கிரதையாத்தான் இருக்கணும்," என்றான் குமரேசன்.

அது ஒரு சமூக சேவை நிறுவனமாக இருப்பதையும் கரரான விதிமுறைகள் இருப்பதையும் புரிந்துகொண்டிருந்த காரணத்தால் குமரேசனும் குப்தாவும் சிணுங்காமல் பல பாரங்களைப் பூர்த்தி செய்து பல நிபந்தனைகளில் கையெழுத்திட்டு அந்த இன்ஸ்டிட்டியூட்டின் இன்ஸ்பெக்ஷன் டீம் பார்வைக்கு வந்து போகச் செலவுத் தொகையையும்கூட முன்பணமாகக் கட்டி விட்டார்கள். இவர்கள் இருவரும் வந்தவிதம் அறிமுகக் கடிதம், பழகிய தினுசு, எல்லாவற்றையும் பார்த்தபின்பே இன்ஸ்டிட்யூட்காரர்கள் நம்பிக்கை கொண்டனர்.

அதற்கு அப்புறம்தான் குஞ்சம்மணியம்மா இவர்களுக்கு டிப்ளமா வாங்கி வேலைக்கு வரத் தயாராயிருக்கும் பெண்களை அறிமுகப்படுத்தினாள்.

"நீங்க தனியா ஒரு செலக்ஷன் என்று சிரமப்பட வேண்டியதில்லை. பொதுவா நாங்க இங்கே படிக்க செலக்ட் பண்றபோதே 'ஆப்டிடியூட் டெஸ்ட்'னு வச்சுடறோம். இலட்சணமாயிருக்கிற-கடிந்து பேசாத-நன்றாகப் பழகக்கூடிய பெண்களாகத்தான் எடுக்கிறோம். மலையாளம் தவிர வேற மொழிகளையும் கத்துக்கொடுக்கிறோம். ஒரு ஜாப் செக்யூரிட்டிக்காகவும் இதிலே படிக்க வர்றவங்களுக்கு ஒரு நம்பிக்கை வரணும்கிறதுக்காகவும் மினிமம் 'எதிர்பார்க்கிற ஸ்கேல் ஆஃப் பே' என ஒன்று நாங்களே குறிப்பிடுவது வழக்கம்."

''நியாயம்தான். படிச்சு கேட்டரிங் டிப்ளமாவும் வாங்கி னப்புறம் ஒரு டீஸண்ட் ஸாலரியை எதிர்பார்க்கறது தப்பில்லையே?''

எல்லாம் சுமுகமாக முடிந்தது. அவர்கள் இருவரும் குரு புரம் திரும்பிய மறுநாளே ஸ்டடி டீம் வந்து ஓ. கே. பண்ணி யது.

ஏற்கெனவே குப்தாவும், குமரேசனும் பார்த்துத் தேர்ந் தெடுத்திருந்த பெண்களின் புகைப்படங்கள் அனுப்பி வைக்கப் பட்டன.

கோட்டயம் இன்ஸ்டிட்யூட்டின் அனுமதியுடன் பத்திரிகை களில் விளம்பரம் செய்ய வேண்டும் என்றான் குப்தா.

''எதுக்கு? அந்த மூங்கில் முறிச்சான் பாளையத்து ஆளு 'பொண்ணுங்க வேணும்.'னு ஏதோ பிரசாதலுக்கு ஆள் சேர்க்கிற மாதிரிக் கேட்டதைப் பத்தியே அவங்க ரொம்ப வருத்தப்பட்டாங்க. நாம பாட்டுக்குப் பெண்களின் போட்டோவைப் போட்டு ஓட்டலுக்குப் பணம் சேர்க்கிற கொச்சையான முயற்சியிலே இறங்கறமோன்னு தப்பா நெனைச் சுடப் போறாங்க சார்,'' என்று குமரேசன் ஆட்சேபணை கிளப் பினான்.

''இதா பாரு குமரேசன்! ப்ளெயினா-சிம்ப்பிளா-ஸ்டிரெயிட் ஃபார்வர்டா மனசிலே நெனைக்கிறதைச் சொல்றது தப்பில்லே. ஆஷாடபூதித்தனம்தான் தப்பு. யேர்னிங் மோர் மணி இஸ் ஆல்ஸோ பார்ட் ஆஃப் அவர் எய்ம். யூ காண்ட் டினை தட். அதே சமயம் இந்தப் பெண்களை இங்கே பார்கவி ஏ. சி. ரூம்லே அலங்காரம் பண்ணி நிறுத்தி வைச்சு அர்ச்சனை பண்ணிக் காலேலயும் மாலையிலேயும் உங்க பக்கத்து ஓட்டல் களிலே வழக்கமாப் பண்ற மாதிரி சூடம் சாம்பிராணி கொளுத் திக் கும்பிடறதுக்காக இங்கே நாம சம்பளம் குடுத்துக் கூப்பிடலை.''

''அதுக்காக இவங்க போட்டோவைப் பேப்பர்லே போட்டு 'இது மாதிரிப் பலான பொண்ணுங்களெல்லாம் இருக்கு! எங்க ஒட்டல்லே வந்து சாப்பிடுங்க.'ன்னு கூப்பிடறது நல்லா இருக்குமா?''

''நீதான் இப்போ அந்த மூங்கில் முறிச்சான்பாளையத்து ஆள் பேசின மாதிரிப் பேசறே குமரேசன்! ஒரு கெட்டிக்கார மனுஷன் உபயோகப்படுத்தற லாங்வேஜோட தரத்தை வச்சு எதையும் டீஸண்டாப் பண்ணிட முடியும். கெட்டிக்காரத் தனம் இல்லாதவன் அதையே இண்டீஸெண்டாகவும் பண்ணிட முடியும். இப்ப நான் பேப்பர்ல குடுக்கப் போற மாதிரி விளம் பரத்தை எழுதித் தர்றேன். பார்த்திட்டு அப்புறம் பேசு.''

குப்தா டிராஃப்டை ஆங்கிலத்தில் எழுதிக்கொடுத்தான்.

''நாட் ஜஸ்ட் ஒன் நியூ பார்கவி; ஃபைவ் யங் ப்யூட்டி ஃபுல், ஸ்மார்ட் பார்கவீஸ் (ஃப்ரம் கோட்டயம் விமன்ஸ் கேட்டரிங் டெக்னலஜி இன்ஸ்டிட்யூட்) ஆர் வெயிட்டிங் அண்ட் எக்ஸ்பெக்டிங்-கஸ்டமர்ஸ் லைக் யூ அட் ஓட்டல் நியூ பார்கவி.''

''இந்த வாசகங்களுக்கு மேலே அவங்க அஞ்சு பேர் படத்தையும் அதுக்கும் மேலே விளம்பரத்தோட டாப்லே ஓட்டல் நியூ பார்கவி முகப்பையும் சுபமங்களம் ஏ. சி. ரெஸ்டா ரெண்ட் முகப்பையும் போட்டுடறோம்.''

குமரேசன் குப்தாவின் சாமர்த்தியத்தைக் கண்டு வியந் தான். விளம்பரம் நாசூக்காகவும் கவர்ச்சியாகவும் எழுதப் பட்டிருந்தது. அதே சமயம் இன்ஸ்டிட்யூட்டின் பெயரும் வந்தது.

சும்மா ஒரு வம்புக்காக அவன் குப்தாவைக் கிண்டல் செய்தான். ''மிஸஸ் குப்தா வேற பக்கத்திலே இல்லே. சிம்லாவுக்குப் போயிருக்காங்க, அந்த கேட்டரிங் பொண்ணுங்க கிட்ட ரொம்பத்தான் மயங்கிப் போயிருக்கீங்கன்னு தெரியுது.

நீங்க பாட்டுக்கு யங், ஸ்மார்ட், ப்யூட்டிஃபுல்னு ஒரே அடை மொழியா அவங்க மேலே தூவியிருக்கீங்களே?''

"டெல்லிங் ட்ருத்! ஐ யாம் நாட் எக்ஸாஜெரேட்டிங் எ சிங்கிள் வேர்ட்! சுஷ்மா இப்போ ஊர்ல இருந்தா அவகிட்டவே தைரியமா நான் சொல்வேன் 'உன்னைவிட இந்தக் குட்டிகள் ஸ்மார்ட், யங், ப்யூட்டிஃபுல்'னு.''

''அப்பிடியா? இதை ஒரு வார்த்தை விடாமே அண்ணிக்கு எழுதிப் போட்டேன்னு இந்தக் குளிர்லியும் சிம்லாவே பத்திக் கிட்டு எரியும் மிஸ்டர் குப்தா.''

''அதெல்லாம் சும்மா கதைப்பா! சினிமா டயலாக்லே வேணு வரும். ஷீ நோஸ் மீ ஃபுல்லி வெல் அண்ட் ஐ நோ ஹெர் ஃபுல்லி வெல்; எங்களுக்குள்ளே இது மாதிரி சீப் மிஸ் அண்டர் ஸ்டாண்டிங்கை எந்த மூணவது மனுஷனும் உண் டாக்கிட முடியாது,'' என்று உறுதியாகக் கூறினார் குப்தா.

குமரேசன் குப்தா எழுதிக் கொடுத்த அந்த விளம்பரத்தைத் தமிழில் மொழி பெயர்த்தான்.

''இப்போது நியூ பார்கவியே ஓர் அழகிய இளம்பெண் போல் பொலிகிறாள். அங்கே மேலும் ஐந்து அழகிய சுறுசுறுப் பான இளம் பெண்கள் (கோட்டயம் பெண்கள்—பரிமாறும் தொழில் நுணுக்கக் கல்லூரியில் பயிற்சி பெற்றவர்கள்) உங்களை எதிர்பார்த்துக் காத்திருக்கிறார்கள். முழுக்க முழுக்கப் பெண்களே பரிமாறும், முதல் ஏ. சி. ரெஸ்டாரெண்ட்! வருக! வந்து புதிய மகிழ்ச்சியும் அனுபவமும் பெறுக!''

—இதை வாங்கிப் படித்துவிட்டுக் குமரேசனின் அண்ணன் தண்டபாணி. ''சுறுசுறுப்புக்கும் இளமைக்கும் நடுவிலே 'லக்ஷ்மிகரமான அல்லது 'மங்களகரமான'ன்னு இன்னொரு வார்த்தையை நுழைத்துவிடு. இட்வில் ஆட் ரெஸ்பெக்டபி லிடி'' என்றான்.

உடனே அங்கிருந்த ஆடிட்டர் ''சபாஷ்! தண்டபாணி என்ன இருந்தாலும் மேரீட் மேன், பொறுப்பா, கௌரவமா

யோசனை சொல்றான் பாரு! என்ன நுணுக்கமா ஒரு வார்த்தையை நடுவிலே போடறான்! குமரேசன் ஆயிரமிருந்தாலும் விடலைப் பையன்தான்! அழகு, இளமை, சுறுசுறுப்பிலேயே மயங்கிப் போயிருக்கானே தவிர மரியாதையைப் பத்திக் கவலையே படலை'' என்று குமரேசனைச் சீண்டினார்.

குமரேசனும் அவரை லேசில் விட்டுவிடவில்லை. ''இதோ பாருங்க ஆடிட்டர் சார்! சும்மா விடலை அது இதுன்னு ராங் சைடுலே ரப் பண்ணாதீங்க. அண்ணன் சொல்றதைச் சேர்த்துக்கறேன். ஆனா நான் இதை எந்த வகையிலும் சீப்பா எழுதிடலே. சீப்பாவும் கொச்சையாவும் இதை மொழி பெயர்க்கிறதுங்கிறது எப்படித் தெரியுமா? ஒரு வம்புக்காக அதையும் உங்களுக்குப் பண்ணிக் காட்டறேன் பாருங்க'' என்று வேறு ஒரு காகிதத்தை எடுத்து அவசர அவசரமாக எழுத ஆரம்பித்தான் குமரேசன்.

''பருவ மங்கை பார்கவி! எங்கே? எப்போது? விரைவில் எதிர்பாருங்கள். ஒன்றல்ல, இரண்டல்ல, ஒரே சமயத்தில் ஐந்து பருவப் பாவையர் பணிபுரியும் கவர்ச்சி உணவகம்! பார்க்கவும் பருகவும், மகிழவும் உடனே வருக நியூ பார்கவி- ஏ. சி. உணவகம் குருபுரம் ஹைலேண்ட்ஸ்'' என்று எழுதி நீட்டினான்.

''உங்கிட்ட விவாதிக்க முடியுமா குமரு? நீ பட்டிமன்ற ஆளாச்சே? இலேசிலே விடுவியா? நான் வாபஸ் வாங்கிக் கறேன்'' என்று கைகளை மேலே தூக்கிவிட்டார் ஆடிட்டர்.

''நம்ம தெப்பம்பட்டி டூரிங் தியேட்டரில் 'ஸீக்ரட் லவ்'னு முதல் தரமான இங்கிலீஷ் நாவல் ஒண்ணை ஃபேஸ் பண்ணி ட்வெண்டியத் செஞ்சுரி ஃபாக்ஸ்காரங்க எடுத்த படம் ஒண்ணை ஒரு ஞாயிற்றுக்கிழமை நூன் ஷோ போட்டான். படத்திலே ஒரு ஹாட் சீன் கூட இல்லே. தியேட்டர்காரன் பார்த்தான். அவனாகவே தலைப்பைக் 'கன்னியின் காமவெறி ரகசியங் கள்'னு போட்டு ஜட்டியோட ஒரு பொண் குளிக்கிறமாதிரி

வேற ஏதோ ஒரு ஸ்டில்லே ப்ளோ அப் செஞ்சு விளம்பரம் பண்ணிட்டான், என்னே அது மாதிரின்னு நெனைச்சிங்களா? ஐ வாஸ் எ ஸ்டுடண்ட் ஆஃப் லிட்டரேச்சர் சார்!''

''சரிப்பா! என்னை விட்டுடு, தெரியாத்தனமா உங்கிட்ட வாயைக் குடுத்திட்டேன்'' என்று ஆடிட்டர் அலறியே விட்டார். குப்தாவுக்கு இதை எல்லாம் தண்டபாணி மொழி பெயர்த்துச் சொன்னபோது அவன் சிரித்து ஓய அதிக நேரம் பிடித்தது.

நியூ பார்கவியின் திறப்பு விழா விளம்பரங்கள் தமிழ் ஆங்கில தினசரிகளில் எல்லாம் முழுப்பக்க அளவில் வெளியாயிற்று. குப்தா சொன்னபடி மூத்தவன் தண்டபாணியும், இளையவன் குமரேசனும் முக்கியப் பொறுப்புகளைப் பகிர்ந்து கொண்டனர்.

திறப்பு விழாவுக்குச் சிறப்பு விருந்தினர்களாகச் சிம்லாவில் இருந்து குப்தாவின் மைத்துனன் அஜீத்குமார், குப்தாவின் மாமனார் குருசரண் இருவரும் வந்திருந்தனர். அங்கே போயிருந்த சுஷ்மாவும் பார்கவியும் இவர்களையும் அழைத்துக் கொண்டு ஒரு வாரம் முன்னதாகவே குருபுரம் வந்து சேர்ந்து விட்டனர். குருபுரமும் சிவவடிவேலுவின் வீடும் கல்யாணக் களை கட்டின.

ஓட்டல் நியூ பார்கவியின் திறப்பு விழா விளம்பரங்கள் பத்திரிகைகளில் தடபுடல் பட்ட அதே நேரத்துக்கு டீ எஸ்டேட் லொக்கேஷனில் ஒரு பிரமாதமான தமிழ்த் திரைப் படத்தை எங்கே எடுக்கலாம் என்று உரிய இடத்தையும் வசதிகளையும் தேடி அலைந்து கொண்டிருந்த கோடீசுவரனை புரொட்யூசர் ஒருத்தர் குருபுரம் வந்து சுமார் இரண்டு மாத காலத்துக்கு ஒரு சூப்பர் ஸ்டார் நடிகர் ஒரு சூப்பர் ஸ்டார் நடிகை டைரக்டர் புரொடியூசருக்கு 4 ஏ. சி. ரூம்—மற்ற யூனிட் ஆட்களுக்கு பாத் அட்டாச்டு ரூம்ஸ் என்று முக்கால் ஓட்டலையும் அட்வான்ஸ் கொடுத்து ரிஸர்வ் பண்ணிவிட்டார்.

நியூ பார்கவியின் மேல் அதிர்ஷ்டக் காற்று வீசத் தொடங்கியது. தமிழ்ப்பட உலகில் வரப்பு, வயல்வெளி, கிராமம், கிராமத்துத் திரைக் கதைகளுக்கு ஒரு யோகம் அடித்தது. அப்படிப் படங்கள் ஸீன், ஸ்டுடியோ, ஸெட் வாடகை ஃப்ளோர் அரேன்ஜ்மெண்ட்ஸ் செலவுகள் இல்லாமல் யூனிட்டோட ஒரு கிராமத்துக்குப் போனாலே நிறைவேறியது. சிக்கனமாகவும் லாபகரமாகவும் புரொடக்ஷன் முடிந்தது. படங்களும் பணத்தை வாரிக் கொண்டுவந்து தயாரிப்பாளரிடம் கொட்டின. சிங்கிள் புரொடக்ஷன் யூனிட்டோடு போய்ப் படத்தையே முடித்துக் கொண்டு வருகிற வசதி இருந்தது. பாட்டு, மெட்டு, இசையமைப்பு முதல் சகலத்திலும் கிராமாந் தரத்துக்கு ஒரு திடீர் யோகம் வந்தது. டி ஷர்ட், ஸஃபாரி, ஜீன்ஸ், பெல்பாட்டம், நாகரிகங்கள் தோற்றுத் தலைப்பாகை, உருமால், வண்டி ஓட்டுவது, வயல்களில் உருளுவது, பெண்கள் தொளி கலக்குவது, நாற்று நடுவது, களை எடுப்பது, தேயிலை ஏலக்காய் பறிப்பது என்று இப்படி ஒரு புதுக் காற்று வீச ஆரம்பித்தது. கல்லூரி வகுப்பறை, பஸ்கள் ஸ்டாண்டு நகரத்து வீதிகள், கடைகள், தியேட்டர் முகப்புக்களில் காட்ட முடிந்ததைவிட வயலின் சேற்றுக்கு நடுவே, களை பிடுங்க முழங்கால் வரை சேலையைத் தூக்கிக் கட்டிய கோலத்தில் கிராமக் கலாச்சாரம் என்ற பெயரில் இரவிக்கை அணியாமல் மேற்சேலை மட்டும் கட்டிய வாளிப்பில் அதிகமாக ஸெக்ஸைக் காட்ட முடிகிற உத்தியை—ரகசியத்தைத் தயாரிப்பாளர்கள் திடுதிப்பென்று புரிந்துகொண்டு படை எடுத்திருந்தார்கள்.

ஆனால் அதில் ஒரு பிரசினை. ஆறு, ஓடை, வயல்வெளி, மரக்கூட்டம், அருவிக்கரை, எஸ்டேட் என்று லொக்கேஷன் கலர் ஃபுல்லாக அழகாகக் கிடைத்தால் அங்கே ஆர்ட்டிஸ்ட்டுகளும், யூனிட்டும் தங்க வசதி இருப்பதில்லை. தங்க வசதி பிரமாதமாகக் கிடைத்தால் அங்கே லொக்கேஷனே கிடைப்பதில்லை. பார்கவியும் இயற்கை லொக்கேஷன் வசதிகளும் சேர்ந்தே குருபுரம் கிடைத்தவுடன் திடீரென்று குருபுரத்திற்கு ஒரு யோகம் அடித்தது, பார்கவிக்கும் சான்ஸ் அடித்தது.

நியூ பார்கவியில் முதலில் நாலே நாலு 'சூட்' மட்டுமே ஏ. சி செய்திருந்தார்கள். இந்தச் சினிமா யோகம் அடித்தபின் பல சூட்களை ஏ. சி. செய்யும் அவசரமும் அவசியமும் நேர்ந்தன. லாட்ஜிங் சைடில் இப்படி அதிர்ஷ்டம் என்றால் பெண்களே பரிமாறும் கவர்ச்சியால் ரெஸ்டாரெண்டில் உட்கார இடம் கிடைக்காத அளவு கூட்டம் நெரிசல் பட்டது. லாப தசை ஆரம்பமாகி விட்டது.

அவசர அவசரமாக ஐந்நூறு பேர் ஒரே சமயத்தில் அமர்ந்து சாப்பிட முடிந்த இன்னொரு டைனிங் ஹாலைக் கட்டி அதிலும் பெண்களே பரிமாற ஏற்பாடு செய்யப்பட்டது. கூட்டத்தைச் சமாளிக்க முடியவில்லை.

ஓட்டல் திறந்து இரண்டே மாதங்களில் நியூ பார்கவி பிரபலமாகி விட்டாள். ஒரே சமயத்தில் பார்கவியில் தங்கள் ஸ்டார்களுக்கும் யூனிட்டுக்கும் ரிஸர்வேஷன் கேட்டுப் பல புரொட்யூஸர்கள் போட்டி போட்டார்கள். பார்கவியில் இடம் கிடைப்பதே குதிரைக் கொம்பாகி விட்டது. ஒரு வியாபார விஷயமாக வருகிற கார்டமம் எக்ஸ்போர்ட் வியாபாரிக்கோ, குருபுரம் ஆஞ்சநேயருக்குப் பிரார்த்தனை நிமித்தம் வடை மாலை சாற்ற வருகிற ஒரு வெளியூர்ப் பிரமுகருக்கோ அறை வசதி கிடைக்காமல் பார்கவியின் அறைகளைச் சினிமா யூனிட்டுகள் மாதக் கணக்கில் 'புக்' செய்யத் தொடங்கினார்கள். லாட்ஜிங்கில் இந்த இடம் போதாது என்ற நிலைமை ஏற்பட்டு விட்டது. ஓட்டல் நியூ பார்கவியை மேலும் விரிவுபடுத்த வேண்டும் என்ற நிலைமை அவசரமாக ஏற்பட்டது.

## 14

**ஆ**ம்ஸ்டர்டாமிலிருந்து சிவவடிவேலு எழுதின ஒரு ஏர்மெயில் கடிதத்தில் குருபுரம் நிலவரங்களைப் பற்றி எதுவுமே தெரியாமல், 'நான் வந்து சேருகிறவரை மேற்கொண்டு நஷ்ட

மில்லாமல் எப்படியாவது பார்கவியை இழுத்துப் பறித்து நடத்தி வாருங்கள். மகாஸ்ரீ குப்தா சொல்லும் புதிய யோசனைகளை நான் வந்தபின் அமுல் பண்ணலாம்,' என்று ஆடிட்டருக்கு ஒரு குறிப்பு எழுதியிருந்தார் சிவவடிவேலு. அதை எல்லோரும் படித்துச் சிரித்துக் கொண்டார்கள். இந்த மூன்று நான்கு மாதங்களுக்குள் பெரிய யுகப் புரட்சியே நடந்த மாதிரி மாறுதல்கள் நடந்து பார்கவி 'நியூ பார்கவி' ஆகி லாபம் கொழித்துக் கொண்டிருக்கும் விஷயம் தெரியாமல் சிவ வடிவேலு 'அதைச் செத்து விடாமல் காப்பாற்றிக் கொண்டிருங்கள்! நான் வந்து முழுக்கவும் பிழைக்க வைத்துக் கொள்கிறேன்' என்பது போல எழுதியிருந்தது வேடிக்கையாயிருந்தது.

சில படத்தயாரிப்பாளர்கள் திரையில் டைட்டில் காண்பிக்கும் போதே, 'இந்தப் படத்தின் தயாரிப்புக் காலத்தில் எங்களோடு பெரிதும் ஒத்துழைத்த குருபுரம் நியூ பார்கவி உரிமையாளருக்கும் ஊழியர்களுக்கும் நன்றி கூறக் கடமைப் பட்டிருக்கிறோம்'—என்றும் சேர்த்துக் காட்டவே விளம்பரமாகி விட்டது. பேர் பெரிதாகி இருந்தது. பார்கவி பிரபலமாகி இருந்தாள்.

மதுரையில் அப்படியும் இப்படியுமாகத் தொடர்ந்து போராட்டம் கதவடைப்பு என்று குமாரி பார்கவியின் கல்லூரி வதைப்பட்டாலும் ஒருவழியாக ஃபைனல் பரீட்சை எழுதி விட்டாள் அவள். கல்லூரிக்கு 'குட்பை' சொல்லியாயிற்று.

சுஷ்மா குப்தாவுடன் பழக ஆரம்பித்ததிலிருந்தே அவளிடம் பல இனிய மாறுதல்கள் நிகழத் தொடங்கியிருந்தன. குமரேசனின் பாஷையில் மாறுதல் என்பது வளர்ச்சியின் ஆரம்பம். அதுவும் அவள் சுஷ்மாவுடன் சிம்லாவுக்குப் போய்ச் சில நாட்கள் இருந்துவிட்டு வந்ததும் சில நளினமான மாற்றங்கள் பார்கவியிடம் தென்பட்டன. தனக்குத் தானே புதுமாதிரி உடுத்தி அழகு பார்த்துக் கொண்டாள். சின்னதும் பெரிதுமாக இந்திப் பட ட்யூன்களை 'ஹம்மிங்' செய்ய

ஆரம்பித்தாள். நிறைய அடிக்கடி ஆங்கிலத்திலும் கொஞ்சம் இந்தியிலும் உரையாடத் தொடங்கினாள். திடீரென்று அழகாகி இருப்பதுபோல் அவள் தோற்றத்தில் ஒரு செழுமை தெரிந்தது. நியூ பார்கவியின் திறப்பு விழாவுக்குச் சுஷ்மாவின் தம்பி அஜீத்குமாரும், அவனுடைய வயதான நோய்வாய்ப்பட்ட தந்தை குருசரணும் வந்து இரண்டு மூன்று நாட்கள் குருபுரத்தில் தங்கியபோது பார்கவி அஜீத்திடம் இழைவதைக் குமரேசன் கவனித்தான். அந்த இரண்டு மூன்று நாள் நெருக்கம் அதற்கு முந்திய நெருக்கத்தின் தொடர்ச்சி போலக் குமரேசனுக்குத் தோன்றியது. சுஷ்மா குப்தாவோடு அவளுடைய உடல் நலங்குன்றிய தந்தை குருசரணைப் பார்ப்பதற்காகப் பார்கவி முதல் முதலாகச் சிம்லா சென்ற போதே இந்த நெருக்கம் ஏற்பட்டிருக்க வேண்டும் என்று தோன்றியது.

குப்தா, தண்டபாணி, ஆடிட்டர் எல்லாருமே இந்தப் புதிய நெருக்கத்தைக் கவனித்தார்கள். இவர்களில் யாரும் இதைக் கண்டிக்கிற—அல்லது பொறுக்க முடியாத மனப் பான்மை உள்ளவர்கள் இல்லை என்பதால் இது எந்தப் பாதிப் பையும் உண்டாக்கவில்லை. சிவவடிவேலுவோ ஆச்சி என்று எல்லாரும் மரியாதையாக அழைக்கும் திருமதி சிவவடி வேலுவோ அப்போது ஊரில் இருந்திருந்தால்தான் இது கொஞ்சம் கசமுசா ஆகி வெடிக்கும் போன்ற நிலைமையைத் தவிர்த்திருக்க முடியாது.

நல்லவேளையாகப் பிரதேசம், மாநிலம், திசை, மொழி எல்லாம் கடந்த இந்தக்காதல் அரும்பத்தொடங்கிய சமயத்தில் சிவவடிவேலு இந்த நாட்டிலேயே இல்லை. ஆச்சியும் அவரோடு போயிருந்தாள்.

ஓர் இளம் பெண்ணும், ஆணும் கலகலப்பாகச் சிரித்துப் பேசிப் பழகுவது என்பது அப்படி ஒன்றும் மன்னிக்க முடியாத குற்றமில்லை என்று நினைக்கிற தாராள மனசு உள்ள இந்தக்

கால மனிதர்களே சுற்றிலும் இருந்ததால் அஜீத் பார்கவி விவகாரம் எந்தத் திருப்பத்திலும் எதிர்ப்பைச் சந்திக்கவில்லை,

"அஜீத்துக்கு நம்ம பார்கவியின் மேலே, ரியல் இண்ட்ரெஸ்ட் இருக்கு சார்!" என்று திறப்பு விழாவன்று குமரேசன் ஆடிட்டரிடம் சொன்ன போது பார்கவிக்கு அவன் பதினைந்து லட்சம் கடன் கொடுத்திருப்பதை எண்ணித்தான் சொல்லியிருந்தான்.

அதை வேறு மாதிரிப் புரிந்து கொண்ட ஆடிட்டர், "இருக்காதா பின்னே? ரொம்பப் பிரியமாப் பழகருங்க ரெண்டு பேரும்," என்று சிரித்தபடியே ஆரம்பித்தார். குமரேசனும் சிரித்தான். அதை ரசிக்கவும் செய்தான்.

"அப்பா இப்போ இங்கே இருந்தாச் சினிமா ஆளுங்களை ஓட்டலுக்குள்ளேயே நுழைய விட்டிருக்க மாட்டார்," என்றான் குமரேசன்.

"லாபத்தையே மூணு வருசமா இந்த ஓட்டலுக்கு உள்ளே நுழைய விடாம வச்சிருந்தாரே அப்பா?" என்று தண்டபாணி கிண்டல் பண்ணினான்.

"அவரு கவனிப்பிலே பார்கவி இருந்தப்போ ஒவ்வொரு பில்லிலேயும் ரசீதிலேயும் சிவமயம் 'விநாயகர் துணை'ன்னு போட்டுட்டுத்தான் கரும்பாயிரம் மத்ததை எழுதவே ஆரம்பிப்பாரு."

"இப்போ நீ 'சினிமா மயம்—புரொட்யூஸர் துணை'ன்னு போடறியாக்கும்?" என்று குமரேசனை வம்புக்கு இழுத்தார் ஆடிட்டர்.

"எப்படிப் போடறமோ போடலியோ நஷ்டத்திலே இருந்த தொழிலை நாலே மாசத்திலே சும்மா குட்வில்னு கேட்டாக்கூட விலைக்கு மேலே பத்துப் பன்னிரண்டு லகரம் கேட்கிற மாதிரிப் பண்ணிட்டமா இல்லியா சார்?"

''அது சரிப்பா. நீ நாலு மாசத்திலேன்னு சொன்னதும் தான் நினைவு வருது. அப்பா வர்ற நாளு நெருங்குது. அந்த மாதவி டூர்ஸ் மெட்ராஸ் ஆபீஸுக்கு ஃபோன் பண்ணி உங்கப்பா வர்ற தேதியை விசாரிக்கணும்,'' என்று ஆடிட்டர் ஞாபகப்படுத்தினார்.

''இந்த ஃபாரின் டூர் எங்கப்பாவை ஏதாச்சும் மாத்தி யிருக்கும்னு நெனைக்கிறீங்களா? ஒரு அங்குலம்கூட மனசு அகலமடைஞ்சிருக்காது. நான் வேணும்னுச் சேலஞ்ச் பண்றேன். காசிக்குப் போயும் கர்மம் விடலேங்கிற மாதிரி எப்ப அத்தினி தூரம் போயும் 'கரும்பாயிரத்துக்கு அன்பைச் சொல்லவும்'னு மனுசன் எழுதினாரோ, அப்பவே புரிஞ்சு போச்சு சார்!''

''அட உனக்குக் கோபம்லாம் அவர் உன்னை விசாரிச்சு எழுதலேங்கிறதுதானே? இல்லியா?'' என்று ஆடிட்டர் கிண்டலில் இறங்கியதும், ''என்னையோ குமரேசனையோ எங்கப்பா மனுஷங்களாகவே மதிக்க மாட்டார்ங்கிறதுதான் ஊரறிஞ்ச விஷயமாச்சே?'' என்று தண்டபாணி தம்பிக்கு வக்காலத்து வாங்கிக் கொண்டு வந்தான்.

''சரி! இந்த நல்ல நேரத்துலே எதுக்கு வீண் கசப்பான பேச்சு? சப்ஜெக்ட்டை மாத்து. அப்பாவை அஜெண்டாவில இருந்து தூக்கு! அந்த இடத்திலே குப்தாவைப் போடு. குஷியா அவரைப் பத்திப் பேசலாம். பார்கவி எக்ஸ்பான்ஷன் பற்றி முன்னலே பாதி பேசினதோட நிக்குது. குப்தா எங்க இருக்கார்? எப்ப வருவார்? அவர் வந்ததும் எக்ஸ்பான்ஷன் விஷயமா மறுபடி யோசிக்கணும்,'' என்றான் குமரேசன்.

''குப்தா இன்னிக்கு அகமதாபாத்திலே இருக்கணும்! அங்கே ஒரு டெக்ஸ்டைல் இண்டஸ்ட்ரி 'லாக் அவுட்'. அது சம்பந்தமா அந்த இண்டஸ்ட்ரியோட உரிமையாளர்களுக்கு யோசனைகூறப் போயிருக்கான், அது முடிஞ்சதும் அங்கே

யிருந்து நேரே டில்லி போயிட்டு அப்புறம் இங்கே வர்றேன்னி ருக்கார்,'' என்றான் தண்டபாணி.

ஏற்கெனவே இருந்த அறைகள், இப்போதுள்ள ஏ. சி. சூட்கள் ஆகியவற்றிற்கே ஆள் வருமா என்று முதலில் பயந்தது போகப் பக்கத்திலேயே 'நியூ பார்கவி—அனெக்ஸ்'னு இன்னொரு மூணு மாடி கட்டினாலும் ஃபுல் ஆகும் போலிருந்தது. ஹாலிடே, ஓய்வு, பில்கிரிமேஜ், சினிமாத் தயாரிப்பு, பார்கவி யின் ரெஸ்டாரெண்டில் பெண்களே பரிமாறும் அழகு, எல்லா மாகச் சேர்ந்து குருபுரத்தையே கேந்திரமாக்கி இருந்தன.

அந்த நாளில் பழைய கிராமாந்தரத்துக் கல்யாணங் களுக்குக் கிணற்றடியில் கொல்லைப் பக்கம் நீளமாகக் குழி தோண்டிக் கோட்டை அடுப்பு என்று டன் டன்னாக விறகுக் கட்டையைப் போட்டு எரித்துச் சமையல் பண்ணுவார்களே அது போல், கோட்டையடுப்பும் விறகு போட்டு எரிக்கும் முறையும்தான் பழைய பார்கவியில் இருந்தன. அதனால் சமையலறை புகை மயமாகக் கரிபடிந்து இருண்டிருக்கும். ரூம்களில்கூடச் சமையல்கட்டுப் புகை அடித்து மூச்சுத் திணறும். இதனால் கட்டிய முதல் வருடக் கடைசிக்குள்ளேயே பாதிக் கட்டிடங்கள் மங்கிக் கறுத்திருந்தது. கெட்டுப் போயிருந்தது.

இவர்கள் 'நியூ பார்கவி'யாக மாற்றிய போது அந்தக் கோட்டை அடுப்புக்களை இடித்துவிட்டு காஸ் அடுப்பு வரிசை களை உருவாக்கியதால் கட்டிடம் பிழைத்தது. குருபுரத்தில் காட்டு விறகும் கரியும் கொஞ்சம் மலிவு என்பதால் சிவவடி வேலுவும் காதில் பூச்சுற்றிக் கொண்ட கரும்பாயிரமும் கோட்டையடுப்பைக் கட்டியிருந்தார்கள்.

இப்படிச் சிவவடிவேலுவை வெளிநாடு அனுப்பிவிட்டுக் கரும்பாயிரம் வகையறாக்களை வெளியே அனுப்பிவிட்டு இந்த மாறுதல்களை வேகமாகச் செய்ய முடிந்ததுபோல் அவர்களை வைத்துக்கொண்டு வேகமாகச் செய்ய முடியாது என்பதை

இப்போது மாறுதல் நடந்தபின் சம்பந்தப்பட்ட அனைவருமே உணர்ந்திருந்தனர்.

''சிவவடிவேலுவின் பையன்கள் எவனோ ஒரு வட நாட்டு ஆசாமியின் ஒத்துழைப்போடு ஜோராவிலிருந்து பொம்பளைங் களை வரவழைச்சு என்னென்னமோ பண்ணிப் பழைய பார்கவி யின் கண்ணியத்தையும் மரியாதையையும் கெடுத்து விட்டார் கள். தண்ணியும், பொண்ணுங்களுமா பார்கவியிலே எல்லாம் சினிமாக் காரனுவளாத் தங்க ஆரம்பிச்சிட்டாங்க. முதலாளி மட்டும் இப்ப இங்கே இருந்து இதைப் பார்த்தாங்கன்னு அப்படியே கண்ணாலே ஜலம் விட்டு அழுவாக!'' என்று கொஞ்ச நாள் பேசிப் பேசி அலுத்து அப்புறம் ஓய்ந்து போனான் கரும்பாயிரம்.

அவன் பேச்சை யாரும் சீரியஸாக எடுத்துக் கொள்ள வில்லை. தான் மாதவி டூர்ஸ் அண்ட் டிராவல்ஸ் மூலம் சிவவடிவேலுவுக்கு அனுப்பிய கடிதம் கிடைத்துத் தன் விஷய மாக அவர் ஆடிட்டர் அனந்துக்கு அல்லது வேறு யாருக்காவது கடிதம் எழுதித் தன்னைக் காப்பாற்றுவார் என்று கரும்பாயிரம் காத்திருந்தது வீணாயிற்று. அவனும், தவசிப் பிள்ளையும், பழைய பார்கவியின் ஸ்டோர் கீப்பரும், விலக்கப்பட்ட வேறு சிலரும் சேர்ந்து மலை மேல் ஆஞ்சநேயர் கோயில் வாசலில் ஒரு கேன்டீன் திறந்தனர்.

கோவிலுக்காக மலை மேல் வந்து போகிற கூட்டத்தைச் சமாளிக்க அது மாதிரி ஒன்று தேவையாகவும் இருந்தது. வியாபாரம் தான் ஸ்டடியாக இல்லை. ஒரு நாள் ஆயிரம் ரூபாய் இன்னொரு நாள் எண்ணூறு ரூபாய் என்று முன்னும் பின்னுமாக வந்தது.

எப்போதும் போல் வலது காதில் பூவும் வில்வமும் நெற்றியில் விபூதி சந்தனம் குங்குமமுமாகப் பார்கவியில் உட்கார்ந்திருந்து வியாபாரத்தை ஓட்டினான்.

தவசிப் பிள்ளை மலையில் கிடைக்கிற விறகுகளில் தாராளமாக அடுப்பெரித்து இட்டிலிப் பானையை ஏற்றி இறக்கினார்.

மலை மேலே வியாபாரம் டல்லாயிருந்த நாட்களில் இரண்டு பேரும் பழைய பார்கவி நாட்களை அசை போட்டனர்.

''ஓய் பண்டாரம்! (இப்படித்தான் கரும்பாயிரத்தைத் தவசிப் பிள்ளை வழக்கமாக அழைப்பார்) நீரு அந்தப் பயலுக காதிலே பூ வைக்கப் பார்த்தீரு! அவனுக நம்ம காதிலேயே பூச்சுத்திப் போறங்கடான்னு இப்படி வெளியிலே துரத்தி விட்டுட்டானுவ.''

''இதா பாரும் தவசிப் பிள்ளை! என் காதிலே எவனும் பூச்சுத்திவிட முடியாதுன்னேன். நெனைவு தெரிஞ்ச நாளிலே ருந்து இன்னொருத்தன் பூச்சுத்த வழியில்லாமே நானே என் காதிலே பூ வச்சுக்கிடுதேன். சிவவடிவேலு முதலாளி மட்டும் வரட்டும். பசங்களை என்ன பாடு படுத்தப் போறார்னு நீரே உம்ம கண்ணாலே பார்க்கத்தான் போறீரு!''

''அதெல்லாம் ஒரு பாடும் படுத்த மாட்டாரு! வீணா நீரு கனாக் கண்டுக்கிட்டிருக்கீரு. பசங்க பார்கவியை ஃபைவ் ஸ்டார் ஓட்டல் கணக்கா ஆக்கிப் பழைய கடனை எல்லாம் அடைச்சி லாபத்திலே கொண்டு போயிட்டிருக்காங்க...சிவவடி வேலு இதைப் பாத்தே அசந்து போயிடப் போறாரு...''

''இருக்கலாம் தவசிப் பிள்ளே! ஆனாலும் இந்தப் பொம்பிளைங்க விஷயம் அவருக்குப் பிடிக்காது. ஒரே சினிமாக் காரனா வந்து தங்கறானுவ. அதுவும் அவருக்குப் பிடிக்காது.''

''அட சும்மா இரும்யா! என்னமோ பொம்பிளை பொம்பிளைன்னு கரிச்சுக் கொட்றீரே. அவளுகளை ரொம்ப மரியாதையாத் தனி வீடு எடுத்துக் குடுத்துத் தங்க வச்சிருக் காங்க. நல்ல சம்பளம், போனஸ் எல்லாம் தர்றாங்க. டூட்டி முடிஞ்சதும் அதது தான் தங்கற வீட்டுக்குப் போயிடுது. ஒரு

பொண்ணு அங்க நின்னிச்சு, இங்கே நின்னிச்சு அவனோட தங்கிச்சு, இவனோட தங்கிச்சுன்னு எவனும் நாக்குமேலே பல்லுப் போட்டுப் பேசிற முடியாது. இதிலே கொறை சொல்ல என்னய்யா இருக்கு? சும்மாச் சொல்லக் கூடாது. அந்தக் குமரேசன் பயலும் தண்டபாணியும் அந்தக் கேரளப் பொண்ணுகளை அக்கா தங்கச்சி மாதிரித்தான் நடத்தருங்க.''

''நீரே சர்டிபிகேட் எழுதிக் குடுப்பீரு போலிருக்கே?''

''என் சர்டிபிகேட் அவங்களுக்கு எதுக்குப் பண்டாரம்? நீ சொல்ற மாதிரிச் சிவவடிவேலு மொதலாளி திரும்பி வந்து இவங்களை என்னமோ பண்ணிடுவாருன்னு நான் நெனைக்கல்லே. வேணும்னு தனக்கு இல்லாத பிஸினஸ் சாமர்த்தியம் தன் பையங்களுக்கும் பொண்ணுக்கும் இருக்கிறதைப் பார்த்து வெட்கப்பட்டுக்குவாரு.''

''உனக்குத் தெரியாது தவசி! பெரியவருக்கு இதெல்லாம் பிடிக்காதுப்பா. இந்தப் பார்கவி அந்தக் குப்தாவோட மச்சான் ஒருத்தன் அஜீத்னு வந்திருந்தானே அவனோட சுத்துதாம். இந்தக் குமரேசன் பய கேரளாவிலே இருந்து வந்திருக்கிற குட்டிங்களிலே படு ஷோக்கா இருக்கிற ஒண்ணோட ரொம்ப இழையருனும்.''

''போயிட்டுப் போருங்க! அதைப் பார்த்து உனக்கு ஏம்பா பத்திக்கிட்டு எரியுது? நீ நினைக்கிற மாதிரி சிவவடிவேலு அதையெல்லாம் கண்டுக்க மாட்டாரு. பணம் இருந்தா மத்ததெல்லாம் அவருக்கு மறந்துடும்.''

மலை மேல் தாங்கள் புதிதாக வைத்திருக்கும் காண்டீனில் ஈயாடுகிற சமயத்தில் இப்படி அரட்டையில் நேரத்தைக் கழித்தனர் கரும்பாயிரமும் தவசிப்பிள்ளையும். கரும்பாயிரத்துக்கு இன்னும் கொஞ்சம் நைப்பாசை உள்ளூர இருந்தது. சிவவடிவேலு திரும்பி வந்தவுடன் தன்னைக் கூப்பிட்டனுப்பிப் பார்கவியிலேயே ஒரு வேலை போட்டுக் கொடுத்து விடுவார்

என்று அவன் நம்பினான். தவசிப் பிள்ளைக்கு அந்த மாதிரி நம்பிக்கை எல்லாம் அறவே கிடையாது.

"சும்மா நைப்பாசை வைக்காதேயும் பண்டாரம்! புதுப் பார்கவி உம்ம மாதிரி ஆளைத் தாங்காது! அதுலே தஸ்ஸு புஸ்ஸுன்னு இங்கிலீஷ் பேசற ரிசப்ஷனிஸ்ட் வந்தாச்சு. போர்டிங் ரிஸப்ஷன்லே மூணு ஆங்கிலோ இந்தியன் லேடீஸ் ஜம்னு குந்திக்கிட்டிருக்காங்க! சரக்கு மாஸ்டருக்கே ஆயிரம் ரூபாய் சம்பளங்கிறான். நாம கனவு கூடக் காண முடியாது" என்று உறுதியாகச் சொன்னார் தவசிப்பிள்ளை.

"உனக்குத் தெரியாது தவசி! நான் பெரியவரோடு டூர் அரேஞ்ச் பண்ணியிருக்கிற டிராவல் கம்பெனி மூலமாப் பெரிய முதலாளி அட்ரஸுக்குப் போரும்பல ஏரோப்ளேன் கடிதாசியே ரகசியமா அனுப்பியிருக்கேனுக்கும்," என்று மார் தட்டினான் கரும்பாயிரம்.

அதைக் கேட்டுத் தவசிப் பிள்ளை வறட்சியாகச் சிரித்தார். கரும்பாயிரத்துக்கு இருப்பது போல் தனக்கு மறுபடி பார்கவி யில் போய் வேலை பார்க்கும் ஆசை அறவே இல்லை என்பதை அவர் வெளிப்படையாகவே தெரிவித்தார்.

"அப்பிடி ஒருவேளை பெரிய முதலாளி வந்து உங்களை எல்லாம் திரும்ப எடுத்துக்கிட்டாக் கூட நான் அங்கே வர்றதா இல்லே, சரக்கு மாஸ்டரா இருந்த இடத்திலே கறிகாய் நறுக்கறவனாக் கூப்பிடுவாங்க. எனக்குப் பிடிக்காது. இங்கே மலையிலே அநுமார் காலடியிலேயே என் காலம் போயிரட் டும்" என்றார் தவசிப்பிள்ளை.

## 15

ஏப்ரல் மாத முதலில் சிவவடிவேலு பம்பாய் வருவதாக ஆஸ்திரேலியாவிலிருந்து டெலக்ஸ் வந்திருக்கிறது என்றும் சரியான தேதி ஃப்ளைட் நேரம் பம்பாய் அரைவல், மெட்ராஸ்

அரைவல், மதுரை அரைவல் விவரங்களைப் பின்பு தெரிவிப்ப தாகவும் மாதவி டூர்ஸ் அண்ட் டிராவல்ஸ் பிரைவேட் லிமி டெட்டிலிருந்து ஆடிட்டருக்கு ஒரு கடிதம் கிடைத்தது.

சவுத் ஈஸ்ட்டிலிருந்து வருவதாயிருந்தால் பம்பாய் போகாமல் நேராகச் சென்னையிலேயே லேண்டிங் ஆகிற மாதிரி பிளேட் இருக்கலாம் என்று ஆடிட்டர் திரும்ப அவர்களுக்கு எழுதினார்.

''அது அவர் திரும்புகிற விமானக் கம்பெனியைப் பொறுத்தது. மணிலா டு துபாய் அண்ட் துபாய் டு பம்பாய் என்று ஒரு பிளேட் இருக்கிறது. அவர் மணிலா சிங்கப்பூர் எங்கிருந்து புறப்பட்டாலும் பம்பாய்—சென்னை எங்கு வேண்டு மானாலும் வந்து இறங்கலாம். கடைசி போர்டிங் பாயிண்ட் வந்ததும் அதுபற்றி மறுபடி எழுதுகிறோம்'' என்று டிராவல் ஏஜெண்டிடமிருந்து பதில் கிடைத்தது.

''ஏப்ரலில் நீ டில்லி புறப்பட்டு வா; நாம் சிம்லா போகலாம்'' என்று பார்கவிக்குச் சுஷ்மா குப்தா கடிதம் போட்டிருந்தாள்.

அவள் கடிதத்தை அண்ணன் தண்டபாணியிடம் காட்டி விமான டிக்கெட் எடுத்துத் தரும்படிக் கேட்டாள். தண்டபாணி சிரித்தான்.

"இப்போ மார்ச் கடைசி வாரம். இங்கே 'நியூ பார்கவி அனெக்ஸ்' கட்டறது சம்பந்தமாக முக்கிய மீட்டிங் இருக்கு. குப்தா அவன் மனைவி, அஜீத், எல்லாருமே குருபுரம் வராங்க. நீயும் இங்கே இருந்தாகணும். ஏப்ரல்லேயே அப்பா ஊர் திரும்புகிறார். அவர் முதல்லே மெட்ராஸ்லே இறங்குகிற மாதிரி ஃப்ளைட்டில் வருகிறாரா, பம்பாயில் இறங்குகிற மாதிரி ஃபிளேட்டில் வருகிறாரா என்று இன்னும் உறுதியாகவில்லை. அவரை ரிஸீவ் பண்ண நீயும் இருக்கணும்! இப்போ சிம்லா வில் போய் என்ன பண்ணப் போறே? கோடையிலே குருபுரமே சிம்லாவை விடப் பிரமாதமாக இருக்குன்னு சிம்லாக்காரங்

களே கொண்டாடறாங்க. நீ என்னடான்னா சிம்லாவுக்குப் போகணும்கிறியே?''

''யார் கொண்டாடறாங்க அப்படி?''

''ஏன்? அஜீத், அவனோட அக்கா சுஷ்மா குப்தா எல்லோருமே குருபுரத்தைக் கொண்டாடறாங்க.''

''எனக்கு என்னமோ சிம்லாவைத்தான் பிடிச்சிருக்கு அண்ணா!''

''வேடிக்கைதான், அஜீத் அவனுக்குக் குருபுரம்தான் பிடிச்சிருக்குன்னு சொல்றான். நீயோ உனக்குச் சிம்லாதான் பிடிக்குதுன்னு சொல்றே. நீ அங்கே இருக்கறப்போவோ அவன் இங்கே இருக்கறப்போவோ உங்களுக்கு எது பிடிச்ச இடம்னு ரெண்டு பேருமே ஒண்ணும் சொல்றதில்லே.''

இதைக் கூறிவிட்டுத் தண்டபாணி நமுட்டு விஷமத்தனமாகச் சிரித்தான். ''கிண்டல் வேணாம் அண்ணா! நான் சீரியஸாகவே கேட்கிறேன்.''

''நானும் சீரியஸ்ஸாகத்தான் சொல்றேன். பார்கவி! சிம்லாவே இங்கே வரப்போகுது. நீ ஏன் அங்கே போகணும்ங்கறே?''

அவள் தலை குனிந்தாள். தான் பிடிபட்டு விட்டோம் என்கிறாற்போல் உள்ளுணர்வு குறுகுறுத்தது அவளுக்கு.

''பவர் உன்பேர்ல இருக்கு. நிறையக் கையெழுத்து எல்லாம் தேவைப்படும். அஜீத் ஏற்கனவே பதினைந்து லட்சம் இதிலே போட்டிருக்கான். ஸ்விம்மிங் பூல், கார்டன் ரெஸ்டாரெண்ட், ஷாப்பிங் காம்பிளக்ஸ், பெர்மிட் ரூம் இத்தனையோடவும் அனெக்ஸ் கட்ட இன்னும் அறுபது லட்சம் அவன் போடறான். நாம அறுபது போடறோம். அவனை நம்ம போர்டு ஆஃப் டைரக்டர்ஸ்ஸா சேர்த்துக்கிறோம். பார்ட்னர் ஆகிறான். அப்பா வர்றதுக்கு முன்னாலேயே எக்ஸ்பான்ஷன் ப்ளூபிரிண்ட் ரெடியாகிடணும்.''

"சரி, நான் இங்கேயே இருக்கேன். ஓ.கே." என்ருள் பார்கவி.

"ஏன்? பார்ட்னர் இங்கேயே தேடி வரான்கிறதாலியா?"

"என்ன சொன்னே?" என்று பொய்யான கோபத்துடன் சீறினுள் பார்கவி.

"தப்பா ஒண்ணும் சொல்லலே. ஒட்டலோட பார்ட்னர் இங்கேயே வரப்போருர்ன்னு சொன்னேன்," என்று சிரித்து மழுப்பினுன் தண்டபாணி.

பார்கவி உள்ளூர மகிழ்ச்சியில் மிதந்தாள். 'அஜீத் பார்கவியின் பார்ட்னர் ஆகிருன்' என்ற வாக்கியத்தை எண்ணிக் குறுகுறுப்பு அடைந்தாள். அந்த வாக்கியத்திலேயே இரட்டை அர்த்தம் இருந்தது.

சிலேடை இரட்டை அர்த்தப் பேச்சுக்களிலே அடிக்கடி கைதட்டல் வாங்கிப் பழக்கப்பட்டிருந்த குமரேசன் இப்போது பார்கவியைக் கிண்டல் செய்ய இந்த வாக்கியம் மிகவும் பயன் பட்டது.

"பார்கவிக்கு ஒரு யங் பார்ட்னர் நார்த்திலிருந்து கிடைக் கிறது நம்ம அதிர்ஷ்டம்."

"எந்த இம்ப்ருவ்மெண்ட்டுக்கும் ஒரு நல்ல பார்ட்னர்ஷிப் அவசியம்."

"பார்கவியின் புதிய பார்ட்னர் ஏற்கெனவே சிம்லாவிலே யும், நைனிட்டால்லேயும் ரெண்டு பெரிய ஒட்டலே சக்ஸஸ் ஃபுல்லா நடத்திக்கிட்டிருக்கான்," என்று குமரேசன் தற் செயலாக ஏதாவது சொன்ஞல்கூட அது சிலேடையாகவே குமாரி பார்கவியின் காதில் ஒலித்தது. அவள் நாணி முகம் சிவந்தாள்.

பார்கவி புது அனெக்ஸ் சம்பந்தமான மீட்டிங்குக்கு வந்த போது குப்தாவே அகமதாபாத்திலிருந்து ஒரு பெரிய

ஆர்க்கிடெக்டையும் கையோடு கூட்டிக் கொண்டு வந்திருந் தான். அனெக்ஸ் பில்டிங்கைத் தூரத்திலேர்ந்து பார்க்கறப்ப ஒரு ஜயண்ட் சைஸ் ஓட்டல் அதாவது தாமரைப் பூ தெரியற மாதிரி அமைத்திருந்தான் அந்த இஞ்சினியர். அவனுடைய மாடலும், வரைபடமும் மிக மிக எடுப்பாயிருந்தன. ஸ்விம்மிங் பூல் அருகில் தென்னந்தோப்பின் இயற்கைச் சூழல் கெடாமல் அமைக்கப்பட வேண்டும் என்று அவனிடம் சொன்னார்கள். அனெக்ஸில் ஒவ்வொரு சூட்டுக்கும் ஒரு பால்கனி வருகிற மாதிரிப் பிளான் இருந்தது. அஜீத் யோசனை சொல்லித்தான் இந்த ஆர்க்கிடெக்டை அழைத்து வந்ததாகக் குப்தா சொன் னான். அவனும் அவனுடைய மனைவியும் மீட்டிங்குக்குச் சில தினங்கள் முன்னதாகவே வந்து சேர்ந்து விட்டார்கள்.

தான் என்ன கேட்கிறோம் என்ற நினைப்பே இன்றி, "நீங்க ரெண்டு பேர் மட்டும்தான் வந்தீங்களா அக்கா?" என்று சுஷ்மாவிடம் பார்கவி கேட்டுவிட்டு அப்புறம் உதட்டைக் கடித்துக் கொண்டாள்.

"அஜீத் நாளன்னிக்கு வந்துடுவான் அம்மா!" என்று சிரித்தபடி பதில் சொன்னாள் சுஷ்மா.

"பார்கவி, உன் இந்தி பத்தாது. புதுப் பார்ட்னர் இந்திக் காரன். உன்னோட புரோக்கன் இந்தியை வச்சு இனிமேல் காலந்தள்ள முடியாது." என்று குப்தா அவளைச் சீண்டினான்.

"ஏன்? அவ பார்ட்னருக்குத் தமிழ் கத்துக்குடுத்துட்டாப் போறது." இது சுஷ்மா.

"எப்படியானாலும் இந்தப் பார்ட்னர்ஷிப்பாலே ஏதோ ஒரு பாஷை சங்கடப்படப் போறது உறுதி. பார்கவி இந்தி படிச்சா அதுனாலே இந்தி கஷ்டப்படும், அஜீத் தமிழ் படிச்சா அது னாலே தமிழ் கஷ்டப்படும்."

"இல்லாட்டி ரெண்டு பேருமே கஷ்டப்படுவாங்க."

"பாஷையைக் கடந்த உறவு இது. இதுலே பாஷைப் பிரச்சினை வரவே வராது. தமிழ்நாட்டுச் சித்திராங்கதையை வடநாட்டு அருச்சனன் இதிகாச காலத்திலேயே காதலிச்சிருக்கான். அதிலே பாஷைப் பிரச்சினை வரலே. அந்தக் காதல் வெற்றியடைந்திருப்பது இன்று காவியங்களிலேயே பொறிக்கப்பட்டிருக்கிறது," என்று குமரேசன் பிரசங்கத்தில் இறங்கிய போது—

"எ பாயிண்ட் ஆஃப் ஆர்டர் குமரேசன்! இப்போ நாம பார்கவியோட பார்ட்னர்ஷிப் பற்றிப் பேசிக்கிட்டிருக்கோம். வேற எதையும் பற்றிப் பேசலே, ஞாபகமிருக்கட்டும்."

"ஆமாம் நானும் பார்கவியோட பார்ட்னர்ஷிப் பற்றித் தான் பேசிக்கிட்டிருக்கேன். கத்தரிக்காய் வெலையைப் பற்றிப் பேசலே."

"ஐ மீன் ஒட்டல் நியூ பார்கவி" என்று குப்தா புன்னகை புரிந்தான். நியூ பார்கவி என்றதும் குமரேசன் சுதாரித்துக் கொண்டு பின் வாங்கினான்.

"நீ பட்டி மன்றங்களிலே பேசறதை விட்டப்புறம் எதிர்க் கட்சியை அடிக்கணும்கிற மனப்பான்மையும் தலைவர் மணி யடிச்சப்புறமும் விடாமப் பேசிக்கிட்டிருக்கிற பழக்கமும் உன்னைவிட்டுப் போகலே" என்றார் ஆடிட்டர்.

"எங்கப்பா வந்தப்புறம் நிறைய கட்சி பேசணும்கிற ஆர்வத்திலே பழக்கம் விட்டுப்போகாமல் காப்பாத்திக்கிட்டிருக் கேன் சார்!"

"அதுக்கெல்லாம் அவசியமே இராது. பார்கவியின் வளர்ச்சியைப் பார்த்துக் குருபுரமே வியந்து போயிருக்கு. உங்கப்பா அப்படியே மலைச்சுப் போயிடுவார்! எதிர்த்துப் பேச ஒண்ணுமே இராது!"

"நீங்க நினைக்கிறீங்க; அவருக்குப் புதுமைன்னாலே அலர்ஜி. பார்கவியைப் புதுசா மாத்திப்பிட்டோம்கறதே அவருக்குப் பிடிக்காது."

''யூ மீன் ஒட்டல் பார்கவி ஆர் யுவர் யங்கர் சிஸ்டர் பார்கவி?''

''ஐ மீன் போத்...''

''நியாயந்தான். இரண்டு பார்கவிகளுமே மாறித்தான் போயிருக்காங்க. சல்வார்கம்மீஸோட இந்தப் புது பார்கவி நிக்கறதைப் பார்த்துச் சிவசிவா என்று கண்ணைப் பொத்திக் கொள்ளப் போகிறார் அவர்.''

''பூனை கண்களை மூடிக் கொள்வதால் உலகம் இருண்டு போய் விடாது.''

''ஆனால் எலிகள் கவலைப்பட வேண்டியிருக்கும்.''

''எங்கப்பாவும் நாங்களும் பூனையும் எலியுமா இருக்கோம்னு சொல்றீங்க...''

''அய்யய்யோ! நான் அப்படியெல்லாம் ஒண்ணும் சொல்லலை சாமீ. உங்க கணிப்பெல்லாம் சரியா இல்லாமப் போனாலும் போகும். மனுஷனோட முக்கால்வாசி முரண்டுக்குக் காரணமே பல இடங்களைப் பார்க்காமல் பழகாமல் கிணற்றுத் தவளையா இருக்கிறதுதான். நாலு இடம் சுத்திட்டுத் திரும்பி வந்தா மனசு விசாலப்படும். விட்டுக் கொடுக்கிற மனசு வரும். பிரயாணம் ஒரு மனுஷனை ஞானஸ்தனாக்கா விட்டால் வேற எதனாலேயும் அவனை ஞானஸ்தனாக ஆக்கவே முடியாது. உங்கப்பா முக்கால்வாசி இந்தப் பிரயாணத்திலேயே 'மெல்லோ' ஆகியிருப்பாருனு நான் நினைக்கிறேன்'' என்றார் ஆடிட்டர்.

''மொதலாளி கும்புடறேனுங்க. என்னைக் காப்பாத்தணும்')னு கரும்பாயிரம் காலிலே விழுந்தவுடனே பிரயாணத்தாலே வந்த அத்தனை ஞானமும் போயிடும் சார்!''

''தெரியுமா சங்கதி! கரும்பாயிரம் மலையிலே கோயில் முகப்பிலே காண்டீன் போட்டிருக்கானும், தவசுப்பிள்ளைதான் சரக்கு மாஸ்டர்.''

"சொந்த ஓட்டல்லியாவது திருடாமே இருப்பாங்களினு நினைக்கிறேன். தனக்குத்தானே திருட முடியாது."

"பரவாயில்லாமே நடக்குன்னு சொல்றுங்க."

"ஜான்சனுக்கு பாஸ்வெல் மாதிரி எங்கப்பாவுக்குக் கரும்பாயிரம்னு சொல்லலாம்."

"கரும்பாயிரம்! வாட் எ ஃபன்னி நேம், வாட் இஸ் தி மீனிங்...?" என்று குப்தா கேட்டான்.

"ஒன் தவுஸண்ட் ஷுகர் கேன்னு மொழிபெயக்கலாம்."

"ஈவன் தென் குமரேசன் ஹாவ் ஏ வெரி பிட்டர் ஒப்பினியன் எபௌட் ஹிம்."

"ஆமாம் இது பேய்க் கரும்பு."

"அது சரி, அந்த ஆள் ஏன் காதிலே பூ சுத்திக்கிறுன்?" இது ஆடிட்டர்.

"தன் காதுலே சுத்திக்கிறதுக்கு முன்னாலேயே எங்கப்பா காதுலே வகையாகச் சுத்திவிட்டிருக்கான்."

"சரி, சரி! ஒரே கரும்பாயிரம் புராணமாப் போரடிக்காம விஷயத்துக்கு வா. அந்த அகமதாபாத் ஆர்க்கிடெட் கொண்டாந்திருக்கிற மாடலும் ப்ளூ பிரிண்ட்டும் பற்றி என்ன அபிப்பிராயப்படறே?" என்று தண்டபாணி பிஸினஸை நினைவு படுத்தினான்.

"எனக்குப் பிடிச்சிருக்கு, சவுத்திலேயே இது மாதிரிப் பில்டிங் நம்மதுதான்னு பேர் கிடைக்கும். பிரமாதமா ப்ளான் பண்ணியிருக்கான். ஆடிட்டர் சார் என்ன நினைக்கிறார்னு தெரியலையே?" என்றான் குமரேசன்.

"லோட்டஸ் நம்ம புராண இதிகாசங்களிலே வர்ற புனித மலர். அதனாலே ராசியாத்தான் இருக்கும். பார்கவிங்கற பேருக்கும் தாமரைக்கும் பொருத்தம் இருக்கு. பார்கவி வாசம்

செய்ய ஒரு தாமரைங்கிற மாதிரி ஆயிடும். ரொம்பப் பொருத்தம்.''

''ஆடிட்டர் சார் எங்கப்பாவோட பழகிப் பழகி அதே மாதிரிப் பொருத்தம் பார்க்க ஆரம்பிச்சுட்டார். ஆர்க்கிடெக்சுரல் ப்யூட்டியைப் போய் ஜோஸியத்திலே பொருத்திப் பார்க்கக்கூடாது. அழகுங்கிறதே ஒரு அதிர்ஷ்டம்தான் சார். எங்கப்பா ஆயிரம் நாள் நட்சத்திரம் பார்த்து ஆரம்பிச்ச பார்கவி தேறவே இல்லே. அவரை வெளியிலே அனுப்பிச்சு அவர் வேலேக்கு வச்ச ஆளுங்களேயும் அனுப்பிச்சுட்டு நியூ பார்க்கவியா மாத்தினப்புறம்தான் லட்சுமி கடாட்சம் பொங்குது இப்ப, நல்ல மனசும் முயற்சியும் இருக்கணும் சார், அது போதும்,'' என்று குமரேசன் மறுபடி ஆடிட்டருக்கு ஒரு பிரசங்கம் பண்ணினன்.

''என்னே விட்டுடுப்பா! போதும்! ஒத்துக்கறேன்'' என்று கைகளே மேலே தூக்கி அலறிஞர் ஆடிட்டர். 'இங்கே இத்தினி புரொட்யூஸர் வந்து தங்கருங்களே, எவனவது உன்னே ஒரு படத்துக்கு வசனம் எழுதப் போடலாம்பா. ஏன்ன தமிழ்ப் படத்திலேதான் ஒவ்வொரு கேரக்டரும் டயலாக் என்கிற பேர்லே ஒரு மினி பிரசங்கமே பண்ண முடியும்.''

''புரொட்யூஸருங்க நல்லா இருந்தாத்தான் பார்கவிக்கு நல்லது! இவனே மாதிரி ஆளுங்களேக் கதை வசனம் எழுதச் சொல்லி அவங்க பிழைப்புலே மண்ணேப் போட்டுட்டீங்கன்ன அப்புறம் பார்கவிக்குக் கஸ்டமர்ஸ் இருக்க மாட்டாங்க'' என்று தண்டபாணி கவலேப்பட்டான்.

''நான் இன்னெருத்தனுக்கு ஏன் எழுதணும்? ரெண்டு வருஷம் போனல் நானே படம் எடுப்பேன்,'' என்ருன் குமரேசன்.

''நீ ஏண்டா படம் எடுக்கணும்?பாம்புதான் படமெடுக்கும். உனக்கு எதுக்கு அந்த வேலே? மறுபடி கடனளியாகணும்னு

ஆசையா இருக்கா உனக்கு?'' என்று குமரேசனை ஆடிட்டர் சாடினார்.

# 16

ஊர் திரும்புகிற நாள் நெருங்க நெருங்கச் சிவவடி வேலுவுக்குக் கவலைகள் அதிகமாகிவிட்டனவோ என்னவோ டோக்கியோவிலிருந்து எழுதிய கடிதத்தில் ஊரில் கோடௌனில் இருக்கிற ஏலக்காயைப் பற்றி அதிகமாகப் புலம்பியிருந்தார். பார்கவி பற்றியும் அதிகமாகப் புலம்பியிருந்தார்.

'பார்கவிக்குச் சூதுவாது தெரியாது. ஆனால் என் மேலே பிரியம் அதிகம். பசங்களைப் போல என்னை எதிர்த்துப் பேசற துணிச்சல் அவளுக்கு இல்லை. பவர் பத்திரம் கொடுத்துட்டு வந்திருக்கிறதைப் பயன்படுத்தி அவளை யாராவது ஏமாத்தி எதுக்காவது கையெழுத்து வாங்கிடப் போறாங்க. அதனாலே அந்த விஷயம் ரகசியமாவே இருக்கட்டும்.

'அத்தியாவசியமான செலவு மட்டும் நடக்கட்டும்! எதுக்காகவும் எஃப்.டி. எதையும் மெச்சூர் தேதிக்கு முன்னால் எடுக்க வேண்டாம். குப்தாவே சொன்னாலும் மாறுதல் எதையும் அவசரப் பட்டுப் பண்ணிட வேண்டாம். ஒரு தடவைக்கு நூறு தடவை யோசனை பண்ணாமே எதையும் பண்றது சரியா வராது.

'கோடௌன் ஏலக்காயை விலைவாசி நேரம் பார்த்து மார்க்கெட்டில் விடவேண்டும். இல்லாவிட்டால் எஸ்டேட் மெயின்டெனன்சுக்குக் கூடக் கட்டுபடி ஆகாது. ஞாபகம் வச்சுக்குங்க.

'தினசரி ராத்திரி வீட்டுக் கதவைப் பத்திரமாகத் தாழ் போட்டுக் கொள்ளச் சொல்லவும், அந்தத் தறுதலை குமரேசன் ஊரெல்லாம் சுத்திட்டு ராத்திரி ஒருமணி ரெண்டு மணிக்கு வீடு திரும்புவான். அவனுக்கு மறதி அதிகம், பார்கவி சிறிசு.

இப்போ ஹாஸ்டல் விட்டுப் பரீட்சை முடிஞ்சு லீவுக்கு வந்திருப்பாள். வேலையாட்களிடம் சொல்லியாவது கதவைப் பத்திரமாகத் தாழ் போடச் சொல்லும்படி ஆச்சியும் சொல்லு கிருள். ஆச்சியும் நானும் சௌக்கியம் என்று அனைவரிடமும் கூறவும். கரும்பாயிரத்துக்கு அன்பு. ஸ்ரீமான் குப்தாவை நான் விசாரித்ததாகத் தெரிவிக்கவும்.'

—என்று ஆடிட்டருக்கு எழுதியிருந்தார் சிவவடிவேலு. ஆடிட்டர் இந்தக் கடிதம் வந்ததும் குமரேசனிடம் கொடுத்து, "உன் மேலேதாம்பா அவருக்குக் கொள்ளைப் பிரியம். உனக்கு ஞாபகமறதி அதிகம்கறது அவருக்கு டோக்கியோவிலே வச்சுத்தான் நினைவு வந்திருக்கு. சதாகாலமும் உன் நினைவு தான் போ" என்றார் ஆடிட்டர். கிண்டலாகத்தான் சொன்னார்.

"என்னை அத்தனை சுலபத்திலே மறந்துட முடியுமா? ஆடிட்டர் சார்! இந்த மிராசுதார் குடும்பத்திலே இவர் மாதிரி ஒரு தந்தைக்குத் தப்பித் தவறிப் பிறந்துவிட்ட அறிவு ஜீவி நான் ஒருவன் தானே சார்? இந்த வட்டாரத்திலேயே தமிழ் இலக்கியக் கூட்டம் நடத்தற எவனை வேணுக் கேளுங்க! 'குமரேசன்'னுத் தமிழ்த் தெரிஞ்ச எவனும் உடனே துள்ளிக் குதிச்சாகணும். முந்தா நாள்கூட ஒருத்தன் 'மகிழ்ச்சி தருவது காதலா—பெற்றோர் ஏற்பாடு செய்யும் திருமணமா?'ங்கிற பட்டிமன்றத்திலே பேச அழைக்க வந்தான். நேரமில்லே. பிஸினஸ்ல இறங்கியாச்சுப்பான்னு திருப்பி அனுப்பிச்சேன்," என்று சவடால் பேசிவிட்டுக் கடிதத்தைப் படித்த குமரேசன், "ஒரு மண்ணுமில்லே! வழக்கமான பொலம்பல்தான். அன்பைக் கரும்பாயிரத்துக்குத்தான் அனுப்பியிருக்காரு," என்று அலுத்துக் கொண்டே கடிதத்தை அவரிடம் திருப்பி நீட்டினான்.

"ஆமாம், அதென்னமோ அறிவு ஜீவின்னியே? என்னப்பா அர்த்தம்?"

"இண்டெலக்சுவல்ங்கிறதுக்குத் தமிழ் சார்."

''நீ இண்டெலக்சுவலா...?''

''சந்தேகமென்ன? எங்கப்பா மட்டும்தான் அதை ஒத்துக்க மாட்டாரு.''

''எனக்கும்கூட டவுட்ஸ் இருக்கு...''

''சந்தேகமும், அவநம்பிக்கையும் மனிதனின் முதல் எதிரிகள். வளர்ச்சியின் வழித்தடைகள், அதை நீங்க புரிச்சுக்கணும் சார்!''

''பொதுவிலே சொல்றியா? அல்லது உன்னை அறிவு ஜீவியா இல்லையான்னு நான் சந்தேகப்படறதாலே மட்டும் சொல்றியா?''

''எல்லாத்துக்கும் சேர்த்துத்தான் சொல்றேன். எங்கப்பா கூடப் பழகின ஆடிட்டர்தான்னு நீங்க அடிக்கடி நிருபிச் சிடறீங்க...''

''சரிப்பா. என்னை விட்டுடு. ஒப்புக் கொண்டு விடுகிறேன். நீ அறிவு ஜீவிதான்.''

''இந்த ஆபரேஷன் நியூ பார்கவியே ஐயாவோட பிரைன் சைல்டுதான். பெண்களையே சர்வீஸுக்கு அமர்த்தற 'சுப மங்களம்' ஐடியாவும் நான் கொடுத்ததுதான் சார்! இன்னிக்கு இங்கே இத்தினி சினிமாக்காரன் வந்து தங்கற மாதிரி அவங் களோட பேசி லொகேஷன் சொல்லி மலைமேலே எங்கே அருவி இருக்கு, எங்கே சூயிஸைட் சீன் எடுக்கிற மாதிரிப் பள்ளத்தாக்கு இருக்கு, எங்கே டூயட் பாடற மாதிரி லேக் தோட்டம் மரக்கூட்டம்ல்லாம் இருக்குன்னு விவரமாத் தகவல் குடுத்து அவங்களை வசப்படுத்தி இருக்கேனுக்கும். இன்னிக்கு மெட்ராஸ்ல எந்தப் புரொட்யூஸரை வேணுக் கேளுங்க... கண்ணை மூடிக்கிட்டுச் சொல்வான்: 'நேரே குருபுரம் போங்க' நியூ பார்கவியிலே குமரேசன்னு இருக்காரு. அங்கே அவர் தான் ஆல் இன் ஆல். லொக்கேஷன் சொல்றதிலே அவர் நடமாடும் பல்கலைக் கழகம்பாங்க,'' உற்சாகம் மேலிட்டுச்

சுய அறிமுகப் பிரசங்கத்தில் இறங்கிவிட்ட குமரேசனை நிறுத்து வதற்காக, ''ஹேண்ட்ஸ் ஆஃப்! நான் தோல்வியை ஒத்துக் கிறேன், விட்டுடு. நீதான் அறிவு ஜீவி. நீதான் மொபைல் யூனிவர்சிடி! நீதான் சகலமும்,'' என்றார் அனந்த்.

''என்ன சார்? நான் கஷ்டப்பட்டுத் தமிழாக்கம் செய்யற வார்த்தைகளை எல்லாம் நீங்க மறுபடி ஆங்கிலமாக்கிடறீங்க?''

''சில சமயத்திலே உன் தமிழாக்கம் எனக்குப் பிடிபட லேப்பா...''

''இங்கே போர்டு ஹைஸ்கூல்லே மறைக்காடர்னு ஒரு தமிழாசிரியர் இருக்கார். தஞ்சாவூரு சைடு, கோடிக்கரை சொந்த ஊரு. அவர் எல்லாத்தையும் தமிழ்ப்படுத்திச் சொல் றேன்னு குருபுரம் லோகல் ஃபண்டு ஆஸ்பத்திரி டாக்டரை அவர் பாணியிலேயே மாத்தி 'இடாக்குடர்'—ங்கிருரு. தமிழ்லே 'டா' முதல்லே வராதாம். 'இடாக்குடர்னா' அர்த்தமே அனர்த்தமாயிடுது. 'காலிவயிறுன்னு' அர்த்தம். அதாவது ஒன்றும் இடாத குடல்ன்னு ஆகும்! அதுமாதிரி எல்லாம் நான் தமிழை வம்பு பண்ணறதில்லே ஆடிட்டர் சார்!''

''உன்னாலே எந்த அளவு முடியுமோ அந்த அளவு வம்பு பண்றேன்னு ஒத்துக்கறியா?''

''குறும்புக்காரப் பேர்வழி சார் நீங்க.''

''இல்லே! அந்த மறைக்காடர் உன்னைவிட அதிகமாக வம்பு பண்றார்னு ஒரு வேளை உன்னைக் காட்டிலும் பெரிய அறிவு ஜீவின்னு தோணுது.''

''ஐயையோ! கொல்றீங்களே, சார்.''

''அறிவு ஜீவிகளை மத்தவங்கக் கொல்றது வழக்கம்.''

இப்படி இவர்கள் பேசிக் கொண்டிருக்கும் போது குப்தாவும் ஆர்க்கிடெக்ட்டும் அந்தப் பக்கமாக வந்து சேர்ந் தார்கள். இவர்கள் அரட்டைக்கு முற்றுப்புள்ளி விழுந்தது.

''இன்னிக்கு அஜீத் வரான். மதுரை ஏர்போர்ட்டுக்குக் கார் அனுப்பிடுங்க. மத்தியானம் மூணு மணிக்கு போர்டு மீட்டிங். நீங்களும்கூட இருக்கீங்க. பார்ட்னர்ஷிப் டீட் தயாராயிடணும். இன்னிக்கும் நாளைக்கும்தான் அஜீத் குருபுரத்திலே தங்க முடியும்.'' என்றான் குப்தா.

எல்லாம் தயாராயிருப்பதாக ஆடிட்டர் கூறினார். இவர்கள் இவ்வாறு பேசிக் கொண்டிருக்கும்போதே ஏ.சி. சுப மங்களம் ரெஸ்டாரெண்ட்டில் பரிமாறும் தேவசேனா என்ற பெண் வந்து குமரேசனின் அருகில் நெருங்கி, ''சார், உங்க பிரேக்ஃபாஸ்ட் ரெடி! இட்டிலி சூடா இருக்கு. இப்பவே வந்து சாப்பிட்டுடுங்க,'' என்றாள். குமரேசன் உடனே அவளைப் பின் தொடர்ந்து ஏ. சி. ரெஸ்டாரெண்டில் நுழைந்தான்.

ஆடிட்டர், குப்தா இருவரும் அர்த்த நிறைவுடன் தங்களுக்குள் ஒருவரையொருவர் பார்த்துப் புன்னகை பூத்தனர். குப்தா சொன்னான்.

''குமரேசன் இஸ் ஆல்வேஸ் கெட்டிங் ஸ்பெஷல் அட்டென்ஷன் ஃப்ரம் தேவசேனா.''

''நானும் கவனிச்சுக்கிட்டுத்தான் இருக்கேன். அந்தப் பொண்ணு இவனையும் இவன் அந்தப் பொண்ணையும் ஒருத்தரை யொருத்தர் விசேஷமாகக் கவனிச்சுக்கிறாங்க.''

''எவ்வரிதிங் ஸ்டார்ட்டட் அட் சுப மங்களம். ஆம் ஐ கரெக்ட் மிஸ்டர் அனந்த்?''

''சுப மங்களத்திலே ஸ்டார்ட் ஆகிற விஷயம்லாம் சுப மங்களத்திலே போய்த்தான் முடியும் போல் இருக்கு மிஸ்டர் குப்தா!''

''ஓல்ட் மேன் திரும்பறத்துக்குள்ள நல்லதை எல்லாம் முடிச்சுடணும்! இல்லாட்டா அன்ப்ரடிக்டபிளாப் போயிடும்.''

''நாம் முடிக்கணும்கிறதே இல்லே மிஸ்டர் குப்தா! அதது தானாகவே முடிஞ்சுடும் போல இருக்கு. இன்னிக்குப் போர்டு

மீட்டிங் முடிஞ்சதுமே 'நியூ பார்கவி அனெக்ஸ்' உறுதியா யிடுது. அஜீத் பார்கவியோட பார்ட்னர் ஆயிடருன். தேவ சேனு குமரேசனை ப்ரேக் ஃபாஸ்ட்டுக்குக் கூப்பிடற அளவு முன்னேறியாச்சு. லஞ்சுக்கும், டின்னருக்கும் அப்புறம் ஒரு டம்ளர் காய்ச்சிய பாலோடு...தூங்கறதுக்கும் அவள் அவனைக் கூப்பிட அதிக நாள் ஆகாது.''

''ஸ்டாப்! இந்த இடத்திலேயே சென்ஸார் பண்ணிடுங்க. அதுக்கப்புறம் உள்ளது எல்லாம் அவங்க சொந்த விஷயம்.''

இதைக் கேட்டு ஆடிட்டர் சிரித்தார்.

''இதிலே ஒரு வேடிக்கை மிஸ்டர் குப்தா. குமரேசன்கிறது முருகக் கடவுளுடைய பெயர். புராணங்களிலேயே முருகக் கடவுளின் ஒரு மனைவிக்குத் தேவசேனுன்னுதான் பெயர்.''

''இன்னொருத்திக்கு பெயர்?''

''வள்ளிம்பாங்க.''

''குமரேசன் தேவசேனுவோட மட்டும் நிப்பானு? அல்லது ஒரு வள்ளியையும் தேடிப்பானு?''

''இந்தத் தேவசேனு கெட்டிக்காரி! எந்த வள்ளியையும் குமரேசன்கிட்ட நெருங்க விடமாட்டாள். தவிர 'இதிகாசத் தலைவர்களில் சிறந்தவர் அர்ச்சுனனு, இராமனுங்கிற பட்டி மன்றங்களில் எப்பவும் இராமன் கட்சியையே பேசியிருக்கிறான் குமரேசன்.''

''அது ஜெயிக்கிற கட்சிங்கறதால அதைப் பேசியிருப் பான். குமரேசனுக்கு எப்போதும் தோற்கிற கட்சியைப் பிடிக் காது மிஸ்டர் அனந்த்!''

''எதுக்கும் டு பீ ஆன் த ஸேஃப் ஸைட். இந்தத் தேவசேனுவோட ஃபேமிலி பேக்ரவுண்ட் முதலிய டீடயில்ஸ் விசாரிச்சு வைக்கணும். இல்லாட்டி சிவவடிவேலு கூப்பாடு போடுவாரு.''

"காதல் டைடயில்ஸ் பார்க்காது. லவ் ஹாஸ் நோ அய்ஸ்."

"பட் சிவவடிவேலு ஹாஸ் அய்ஸ்."

"அவர் வர்றப்ப ஆசீர்வாதம் பண்ணறதைத் தவிர வேற வேலையே மிச்சம் இருக்கப்படாது மிஸ்டர் அனந்த். எந்த டெஸிஷனையும் அவருக்காக காக்க வைக்காதீங்க. எல்லாமே கெட்டுப் போகும். அட்சதையைக் கையிலே கொடுத்து, 'குழந்தைகளை ஆசீர்வாதம் பண்ணுங்க'ன்னு அஜீத்—பார்கவி, குமரேசன்—தேவசேனு ரெண்டு ஜோடிங்களையும் விழுந்து கும்பிட வச்சிறணும்."

"குமரேசன் சுய மரியாதைக்காரன். அவரைக் காலிலே விழுந்து கும்பிட மாட்டான்."

"அதெல்லாம் அந்தத் தேவசேனையை விட்டுச் சொல்ல வச்சுடலாம். அவள் சொன்னால் தானு விழுந்து கும்பிடருன்."

ஆடிட்டர் சிரித்தார். குமரேசன் ஏ. சி. ரெஸ்டாரெண்டி லிருந்து ஏப்பத்தோடு வெளியே வந்தான்.

"இது என்னப்பா? அந்தப் பொண்ணு நாங்கள்ளாம் இருக்கறப்ப உன்னை மட்டும் கூட்டிட்டுப் போய் டிபன் குடுக்குது. என்னப்பா இதிலே ரகசியம்?"

"ரகசியம் ஒண்ணுமில்லே! பரம ரசிகன் யாருன்னு அதுக்குத் தெரியும். அதான் என்னை மட்டும் வந்து கூப் பிட்டுச்சு."

"ஓகோ! இது ரசனை விஷயமா?" என்று சிரித்தார் ஆடிட்டர்.

## 17

அன்று அஜீத் வந்து சேர்ந்தான். பார்கவிதான் அவனை விமான நிலையம் சென்று காரில் அழைத்து வந்தாள்.

தானும் கூட வருவதாகத் தண்டபாணி சொன்னபோது, ''அஜீத்! பார்கவியோட பார்ட்னர்ஷிப்புக்காகத்தானே வர் ருன்! அவள் போனாலே போதும் அண்ணே. அவதானே கூப் பிடப்போறது முறை,'' என்று குமரேசன் கண்களைச் சிமிட்டித் தண்டபாணியைத் தடுத்தான்.

பார்கவி பார்வையாலேயே குமரேசனுக்கு நன்றி கூறினாள். புது ஏற்பாட்டின்படி தண்டபாணி, குமரேசன், சிவவடிவேலு உட்பட எல்லாரும் நியூ பார்கவியில் டைரக் டர்ஸ், இப்பொழுது அனெக்ஸுக்கான போர்டு மீட்டிங்கில் அஜீத் ஒரு டைரக்டராகிருன். பார்கவி மானேஜிங் டைரக்டர்.

இதில் சிவவடிவேலு தகராறு செய்தால் அவர் திரும்பி வந்ததும் அவரைச் சேர்மென் ஆஃப் டைரக்டர்ஸ் போர்டு ஆகப் பண்ணி விடலாம் என்று முடிவு பண்ணி இருந்தார்கள். ஏனென்றால் 'நியூ பார்கவி—ஓட்டல்ஸ் பிரைவேட் லிமிடெட்' டில் அதிக அதிகாரங்கள் உள்ள பதவி மானேஜிங் டைரக்டர் பதவிதான். அது பார்கவியிடம் இருந்தது. சேர்மன் மீட்டிங் குக்குத் தலைமை தாங்கலாம். நீட்டற இடத்திலே கையெழுத் துப் போடலாம். அது சும்மா ஜனாதிபதி பதவி மாதிரி இருந் தது. பிரதம மந்திரி மாதிரி எம்.டி. போஸ்ட்தான் இருந்தது.

குப்தா. ஆடிட்டர், ஈசுத்தவன் தண்டபாணி எல்லாரு மாகச் சேர்ந்து இந்த 'செட்-அப்பை' ஏற்பாடு பண்ணியிருந் தார்கள். இதில் சிவவடிவேலுவின் எஸ்டேட்டுகளும் வேறு தாவர ஜங்கமச் சொத்துக்களும் சேர்க்கப்பட இருக்கிற மாதிரிச் சிவவடிவேலு புறப்படும் முன்பே சாதுரியமாக எழுதி வாங்கிப் பார்கவியின் பெயருக்குப் பவர் பெற்றிருந்தார். ஆடிட்டர். மரண பயம் என்று கிளப்பி விட்டிருந்ததால் கொஞ்சம் மிரண்டு போயிருந்த சிவவடிவேலு கேட்ட இடத்தில் கேட்ட பக்திரங் களில் எல்லாம் போகிறபோது கையெழுத்துப் போட்டுவிட்டுப் போயிருந்தார். ஆடிட்டர் அதில் எதையும் துஷ்பிரயோகம் பண்ணிப் பயன் பெறவில்லை. எல்லாவற்றையும் சிவவடி

வேணுவின் குடும்ப நலனுக்காகவே பயன்படுத்தியிருந்தார். குப்தாவும் யோசனைகள் கூறி இருந்தான்.

அன்று மாலை போர்டு ஆஃப் டைரக்டர்ஸ் மீட்டிங் நினைத்தபடி நடந்தது. அஜீத் டைரக்டர் ஆனான். 'நியூ பார்கவி அனெக்ஸ்' ப்ளூபிரிண்ட் அப்ருவ் ஆயிற்று.

இவற்றைக் கொண்டாடுவதற்காக ஒரு விருந்தும் இருந்தது. அந்த விருந்தில் பார்கவி டைரக்டர் குழுவைத் தவிர, குடும்பத்துக்கு வேண்டிய பிரமுகர்களும், சில தொழிலதிபர்களும், வேண்டிய வியாபாரிகளும்கூட அழைக்கப்பட்டிருந்தனர். பெண்கள்தான் பரிமாறினார்கள்.

''தேவசேனா! எல்லாரையுமே கவனிச்சுப் பரிமாறு! குமரேசனை மட்டுமே கவனிக்காதே,'' என்று அவளை வம்புக்கு இழுத்தார் ஆடிட்டர்."

எல்லார் முன்னிலையிலுமே அவர் அப்படிப் போட்டு உடைத்ததுமே அவள் திணறிப் போனாள். கையும் காலும் பதறின அவளுக்கு. அந்த அழகிய இளம் பெண்ணின் மிரட்சியிலும், பதற்றத்திலும் கூட ஓர் அழகு தெரிந்தது.

''என்னப்பாது! உங்கப்பா வந்து பார்த்தால் என்னைத் திட்டப் போறாரு. உன்னோட சாய்ஸ் கேரளா. பார்கவியோட சாய்ஸ் ஹிமாசலப் பிரதேசம். மொழி, இனம், பிரதேசம் எல்லாத்தையும் மறந்து எங்கெங்கியோ மனசைப் போக விட்டுட்டீங்க... பெரியவங்க 'மனம் போன போக்கில் போக வேண்டாம்'னு உங்களுக்குத்தான் சொன்னாங்க...'' என்று அவன் காதருகே ஆடிட்டர் முணுமுணுத்தார்.

குமரேசன் சிரித்தான். ''அதுலே பாருங்க ஆடிட்டர் சார்! மகாகவி பாரதியாருக்குத் துரோகம் பண்ணப்படாதுன்னு பார்க்கிறோம். அவர் சொன்னதெல்லாம் பலிச்சுப் போச்சு! 'ஆடுவோமே பள்ளுப் பாடுவோமே ஆனந்த சுதந்திரம் அடைந்து விட்டோம்'னு சுதந்திரம் வர்றதுக்கு முன்னாடியே

பாடினரு. சுதந்திரம் வந்திடிச்சு. இரும்பைக் காய்ச்சி உருக்கிடுவீரே, இயந்திரத் தொழில்கள் செய்திடுவீரே'ன்னு பாடினரு. இயந்திரத் தொழில்கள் பெருகிடிச்சு. ஒரே ஒரு விஷயத்திலே மட்டும் அவர் சொன்னது இன்னும் அதிகமாப் பலிக்காமே இருக்கு!''

''எதுலே குமரேசன்?''

''ஒருமைப்பாட்டிலேதான். 'சிந்து நதியின் மிசை நிலவினிலே சேர நன்னாட்டு இளம் பெண்களுடனே சுந்தரத் தெலுங்கினில் பாட்டிசைப்போம்'னரு.' இதிலே பாதியையாவது நான் பூர்த்தி செய்து அவருக்கு விசுவாசமா நடந்துக்கணும்னு பார்க்கிறேன் ஆடிட்டர் சார்.''

''எந்தப் பாதியை அப்பா?''

''அதாவது சேர நன்னாட்டு இளம் பெண்களுடன் விளையாடுவோம்கிற நடுப்பாதியை.''

''அப்ப சிந்து நதியின் மிசைங்கிற முதல் பாதிப் பகுதி?''

''அதைப் பார்கவி பார்த்துக்கிறா. கங்கை நதிப் புறத்துக் கோதுமை பண்டம், காவிரி வெற்றிலைக்கு மாறு கொள்வோம் கிற பின் பாதியையும் சேர்த்து அவளும் அஜீத்தும் பூர்த்தி செய்யறுங்க...''

''சபாஷ்டா பாண்டியா! போட்டியே ஒரு போடு! அப்ப பாரதியாருக்குக் கெட்ட பெயர் வரப்படாதுங்கிற நல்லெண்ணத்திலே தான் நீங்க அண்ணனும் தங்கையுமா இப்படி இனம், மொழி, பிரதேசம் கடந்து காதலிக்கிறீங்களாக்கும்.''

''அதுமட்டுமில்லே! இன, மத, மொழி, பிரதேச வெறிகளைத் தணிக்கவும் ஒருமைப்பாடு பரவவும் இந்தக் குருபுரம் ஃபேமிலியிலிருந்து ஒரு ஸ்மால் நேஷனல் காண்ட்ரிபியூஷன். எ ஹம்பிள் பிகினிங்...''

''பரவாயில்லேப்பா! பேச்சாளனாயிருக்கிறதாலே உனக்கு ஒரு வசதி! சின்ன விஷயங்களேக் கூட நேஷனல் லெவலுக்கு என்லார்ஜ் பண்ணிப் பேசக் கத்துக்கிட்டே?''

''சும்மா பேசறது மட்டுமில்லே சார்! ஆதாரத்தோட நிரூபிப்பேன் சார். இப்போ பார்கவி தீவிரமா இந்தி படிக்குது! அஜீத் 'முப்பது நாளில் தமிழ் கற்கும் முறைகள்'ங்கிற இங்கிலீஷ் புத்தகத்தை நேத்துத்தான் ஏர்போர்ட்லே வாங்கியிருக்கான். ஒரு தமிழ் வாத்தியார்—வித் இந்தி ஒர்க்கிங் நாலட்ஜ் அல்லது இங்கிலீஷ் ஒர்க்கிங் நாலஜ்ட் தேடிகிட்டே இருக்கான். சல்லடை போட்டுக் சலிச்சாலும் அந்த சேர் காம்பினேஷன்ல ஆள் அகப்படவே மாட்டேன்ருன். இங்கே தமிழ் மட்டுமே தெரிஞ்ச தமிழறிஞர்கள்தான் ஆப்படறாங்க. அதனுலே தமிழ் தெரியாதவனுக்கு தமிழ் கற்பிக்கிற மாதிரி ஆள் அகப்படறதே கஷ்டமாயிருக்கு. தமிழை வேற ஏரியாவிலே பரப்பணும்னுலும் அதுக்குத் தமிழோட இன்னெரு பாஷையாவது கூடத் தெரிய வேண்டியிருக்கு. இங்கே அப்படி இல்லே சார், நான் மலேயாளம் படிக்கிறேன். தேவசேனு தமிழ் கத்துக்குது. இப்படி எங்களாலே முடிஞ்ச மட்டும் பாரதியாருக்கு நல்ல பேர் தேடிக் குடுத்திட்டிருக்கோம்! அவர் மானத்தைக் காப்பாத்திக் கொண்டு வருகிரேம்.''

''எமகாதகன்டா நீ! ஏதோ பாரதியார் உன்னைத் தேடி வந்து, ''அப்பனே! தேவசேனையைக் காதலிச்சு என் வாக்கை மெய்ப்பிப்பாயாக'ன்னு வரம் கேட்ட மாதிரியில்லே அடிச்சு விடறே''

''அவரு வந்து கேட்பாரா என்ன? இதெல்லாம் நாமாப் புரிஞ்சுக்கிட்டுப் பண்ணவேண்டியது தான் ஆடிட்டர் சார்!''

இப்படி அவன் அதை வெகு சகஜமாகவும் சவடாலாகவும் சொல்லிய விதத்தை ஆடிட்டர் சுவாரஸ்யமாக ரசித்துக் கேட்டார், பயல் கெட்டிக்காரன்தான் என்று உள்ளூர வியந்தார். மனசுக்குள் பாராட்டினர், கொண்டாடினர்.

''தோணிகள் ஓட்டுவது, சுந்தரத் தெலுங்கில் பாடுவது எல்லாம் என்ன ஆறது குமரேசன்?''

''அதெல்லாம் அப்புறம் கொஞ்ச நாள் கழிச்சுச் செய்ய லாம்னு இருக்கோம்.''

''ஆக ஒருமைப்பாட்டு நோக்கம் விணாயிடப்படாதுங்கிற பரந்த எண்ணத்திலேதான் நீங்கள்ளாம் இந்த மாதிரிக் காதலிக்கிறீங்களாக்கும்?''

''ஆமாம் சார்! பாரதியார் வாக்கை நிறைவேத்தறது என்னை மாதிரி நல்ல தமிழனுக்கு உயிர் இலட்சியமா இருக் கணுமில்லையா?''

''அடே நல்ல தமிழா! 'காற்றிலேறி அவ்விண்ணையும் சாடுவோம் காதற் பெண்கள் கடைக் கண் பணியிலே'ன்னு கூடப் பாரதியார் பாடியிருக்காரே!''

''எனக்குத் தேவசேனாவோ அஜீத்துக்குப் பார்கவியோ அப்படிக் கட்டளையிட்டால் நாங்கள் செய்யத் தயாராயிருக் கிறோம். ஆனால் எங்கள் காதலிகளுக்கு எங்களைப் பற்றி நன்றாகப் புரியுமாதலால் அப்படி எல்லாம் ரிஸ்க் எடுத்துக் கொண்டு சிரமப்படமாட்டார்கள்.

''உன் மலையாளப் படிப்பு எந்த அளவு வந்திருக்கு? கிளாஸ்லே உன்னோட நிலைமை என்ன? ரேங்க் ஏதாவது வருமா?''

''வொர்க்கிங் நாலட்ஜ் வந்திருக்கு?''

''காதல்லே வொர்க்கிங் நாலட்ஜாவது ஒண்ணாவது? என்னப்பா நீ இப்படி எல்லாம் அசிங்கமாப் பேசிக்கிட்டி ருக்கே?''

''அப்படிச் சொன்னீங்கன்னாக் காதலுக்குப் பாஷையே வேணும். 'சொல்லித் தெரிவதில்லை மன்மதக் கலை'ங்கிறாரு பாரதியார்.''

''அடடே! நீ சொல்றதைப் பார்த்தாப் பாரதியார் உனக்கு வசதியாகவே எல்லாம் சொல்லிட்டுப் போயிருக்கிருர்னு தெரியுது.''

குமரேசன் ஆடிட்டரை நோக்கி 'ஆம்' என்பது போல் தலையை அசைத்தான்,

## 18

'ஏப்ரல் முதல் வாரம் திரும்புவார்'—என்று சிவவடிவேலு தம்பதிகள் பற்றி மறுபடி டெலக்ஸ் கிடைத்தது· குப்தாவும், ஆடிட்டரும் சித்திரை பிறந்து ஏப்ரல் பதிஞறில் ஒரு முகூர்த்தம் பார்த்து அஜீத்—பார்கவி, குமரேசன்—தேவசேஞ திருமணத்திற்கு ரகசியமாக ஏற்பாடு செய்து கொண்டிருந்தனர்.

ஏப்ரல் முதல் வாரமே சிவவடிவேலு தம்பதி திரும்பிஞல் கல்யாண ஏற்பாடுகளில் ஏதாவது குழப்பமாகலாம் என்று பயம் இருந்தது.

எங்கப்பா இங்கே ஏப்ரல் பிறந்ததுமே வந்துடாமே சிங்கப்பூரிலியோ, கோலாலம்பூரிலேயோ பத்துநாள் டூர் புரோக்ராமை நீட்டச் சொல்லுங்க. மாதவி டூர்காரன்தான் உங்க நெருங்கின தோஸ்த் ஆச்சே? இப்படி அப்பா, அம்மாவை மட்டும் லாஸ்ட் போர்டிங் பாயிண்டிலே அதிக நாள் நீட்டிக்கிறதுஞலே அடிஷனல் செலவு ஆஞக்கூடப் பரவாயில்லே. இங்கே வந்தார்ஞ ஏதாச்சும் நம்மை ஏப்ரல் ஃபூல் பண்ணிடுவாரு... ஜாக்கிரதை. எல்லா ஏற்பாடுமே எகிறிப் போயிரும்,'' என்று குமரேசன் ஆடிட்டரை எச்சரித்தான்.

சம்பந்தப்பட்ட மற்றவர்களுக்கும் அது சரியான யோசனையாகவே பட்டது. செலவுகூட ஆகுமென்று தெரிந்தால் சிவவடிவேலு உயிரையே விட்டுவிடுவார். பந்துநாள் நீட்டித்

தங்க வைக்க என்ன செய்வதென்று யோசனை செய்தார்கள். அதற்கும் குமரேசனே ஒரு வழி கூறினான்:

''என்ன யோசிக்கிறீங்க? கிரகங்களி, தசா புத்திகளி லாம் பின்னே எதுக்காக இருக்குங்கிறேன்! கடுக்கையூர்க் கண்ணபிரான் ஜோசியர் தலையிலே பழியைப் போடுங்க. அவரைக் கூப்பிட்டுத் தசா புத்தி சரியாகாததாலே ஏப்ரல் பதினைந்தாம் தேதி இரவு சிங்கப்பூர்லே ஃப்ளைட் பிடிச்சுப் பதினாறாந் தேதி காலையில் இங்கே வர்ற மாதிரிப் புறப்படச் சொல்லி அவர் கையெழுத்தோடவே ஒரு கேபிள் அல்லது டெலக்ஸ் குடுக்க ஏற்பாடு பண்ணுங்க.''

''கடுக்கையூர் என்ன சொல்லுவாரோ...''

''நூறு ரூபாய் தட்சிணை வையுங்க. தசா புத்தி கிரகம் சனி, குரு, ராகு, கேது எல்லாமே அப்பாலே நாம சொல்றபடியே கேக்க வச்சிடுவாரு.''

உடனே கடுக்கையூராரை வரவழைத்து அவர் சொல்வ தாக அதே பாணியில் கேபிள் கொடுத்தார்கள். அப்படியே அரேன்ஞ் செய்வதாக மறுநாள் பதிலும் கிடைத்து விட்டது. எல்லாரும் நிம்மதியாக மூச்சு விட்டார்கள். ஆடிட்டர் குமரேசனிடம் சொன்னார்:

''நீ உங்கப்பாவைப் பத்தி அதிகமா ஒர்ரி பண்ணிக்கிறே குமரேசா! நான் பந்தயம் வேணும்னுப் போடறேன். அவர் பழைய கஞ்சத்தனம், கன்ஸர்வேடிஸம், குறுகிய மனப் பான்மை எல்லாத்தையும் விட்டுவிட்டுப் புது மனுஷனா மனசு விசாலமடைஞ்சுதான் திரும்பி வரப்போறாரு.''

''எப்படி அத்தனை உறுதியாகச் சொல்றீங்க! ஏதாச்சும் அடையாளம் இருக்கா?''

''அடையாளம்லாம் ஒண்ணுமில்லே! பிரயாணமும் புது இடமும் புது மனிதர்களும் எப்படிப்பட்ட ஆளையும் மாத்திப்

பிடும்ங்கற உலக நியதியை வச்சு அனுமானம் பண்ணித்தான் சொல்றேன்.''

''எங்கப்பா விஷயத்திலே உங்க அனுமானம் சரியா ஒத்து வராது! 'நீருட்கிடப்பினும் கல்லிற்கு மெல்லென்றல் சால அரிதாகும்'னு ஒரு பழைய தமிழ்ப்பாட்டு இருக்கு சார். அதுக்கு அர்த்தம் 'கருங்கல் எத்தனை யுகமாகத் தண்ணீருக்குள் ஊறினாலும் அதனால் சிறிதும் கரைந்து போய் விடாது' என்பது. எங்கப்பா மனசும் அந்தக் கருங்கல் மாதிரிதான்.''

''அவர் உன்னைச் சோம்பேறி, தறுதலைன்னெல்லாம் திட்டிப்பிட்டாருங்கிறதுனாலே நீ அவர் மேலேயும் கரும்பாயிரத்தும் மேலேயும் ரொம்ப பிரெஜிடிஸ் ஆகியிருக்கே. அதுதான் உன்னோட கோபத்துக்குக் காரணம் குமரேசன்!''

''கோபமாவது ஒண்ணாவது? எனக்கு அவர் மேலே இருக்கிறதெல்லாம் வெறும் பரிதாபம்தான் சார். கோபப் படறது வேறே. தேருத கேஸ்னு பரிதாபப்படறது வேறே.''

''அதெல்லாம் உனக்கு இருக்கிற வீண் பிரமை குமரேசன்! ரொம்பப் பெருந்தன்மையா உங்களை எல்லாம் ஆசீர்வாதம் பண்ணிட்டுப் பிஸினஸை எல்லாம் உங்கிட்டவும், தண்டபாணி கிட்டவும் ஒப்படைச்சிட்டு ஹாயாக ரிட்டயர் ஆகிடப் போருரு அவரு.''

''ஒதுங்கறது வேற, ஒதுக்கப்படறது வேற. துறக்கிறது வேற, துறக்க வைக்கப்படறது வேற. கிளவரான ஏற்பாடு மூலம் நாமே அவரை ஒதுக்கியாச்சு. இனிமே ஒதுங்கறது முடியாத காரியம். இப்பப் பந்தயம் நமக்குள்ளே அது இல்லே! எங்கப்பா மனமாற்றத்தோடு வருகிறுரா இல்லையா என்பதுதான்! அதுக்கு என்ன பதில் சொல்றீங்க? கரெக்ட்டா ஒரு வாக்கியத்திலே சொல்லுங்க.''

''கண்டிப்பாக மனமாற்றத்தோடு வருகிறுர்னு சொல்கிறேன்.''

''நான் இல்லேங்கிறேன். பந்தயம் என்ன சொல்லுங்க?''

''ஆயிரம் ரூபாய் வெச்சுக்கலாம்.''

''சீ! பிச்சைக் காசு! குருபுரம் சார்ட்டர்ட் அகௌண்ட் அஸோஸியேஷன் தலைவர், ஓட்டல் நியூ பார்கவியின் ஃபைனான்ஷியல் அட்வைஸர் உயர்திரு அனந்தசாமி சொல்ற தொகையா இது? கேவலம் சார்! ஐயாயிரம்னாவது சொல்லுங்க... உங்க மானம் கப்பலேறுது.''

''சரி, தொலை...ஐயாயிரம்னே வச்சுப்போம்.''

''அப்போ பந்தயத் தொகை ஐயாயிரம்னு ஃபிக்ஸ் ஆயிடிச்சி! ஆனா ஒரு மனுஷன் மாறிட்டானா இல்லியான்னு கண்டு பிடிக்கறது கொஞ்சம் ஸ்லோ பிராசஸ். நீங்களே ஐயாயிரத்தை எங்கிட்டப் பறிக்கிறதுக்காக எங்கப்பாவைத் தன்னைக் கட்டி மாறின மாதிரி நடிக்கச் சொல்லி என்னை 'சீட்' பண்ணிட முடியும். அதனாலே அவர் பிளேன்லே இருந்து கீழே இறங்கினதும் இன்னவாக்கியம் தான் வாயிலே வரும். அந்த வாக்கியமே அவர் மாறலேங்கிறதுக்கு அத்தாட்சின்னு ஒரு வாக்கியத்தை இப்பவே எழுதி நான் உங்ககிட்டே காமிக்கிறேன். அதை நீங்க ஒத்துக்கிட்டா அந்த செண்டென்ஸை அப்படியே எழுதி உங்க முன்னாடியே கவர்லே போட்டு ஒட்டி சீல் வச்சு ரெண்டு பேருக்கும் பொதுவா அதைக் குப்தாகிட்ட டெபாஸிட் பண்ணிடுவோம். எங்கப்பாவை ஏர் போர்ட்லே ரெஸீவ் பண்றப்போ, நான் எழுதிக் குடுத்த செண்டென்ஸைத் தான் அவர் முதல்லே சொல்றாான்னு அவர் வந்து இறங்கினப்புறம் குப்தா சீல் வச்ச கவரைப் பிரிச்சுப் பார்த்து உறுதி செய்துகொள்ளலாம். அவர் பேசற முதல் வாக்கியமும் சீல்டு கவர்லே உங்களுக்குக் காண்பிச்சப்புறம் நான் ஒட்டிச் சீல் வைச்சுக் குடுக்கிற வாக்கியமும் ஒண்ணாயிருந்தால் அன்னிக்கி —அதாவது ஏப்ரல் 16'ந் தேதி மாலைக்குள் நீங்க எனக்கு ஐயாயிரம் ரூபாய் குடுத்திடணும். அந்த மாதிரி இல்லாமே

அவர் வேற வாக்கியத்தைப் பேசிட்டார்னு நான் உங்களுக்கு அதே நேரத்திற்குள் ஐயாயிரம் ரூபாய் குடுத்துடுவேன்.''

''எல்லாம் சரி! ரொம்பக் காம்ப்ளிகேடட் ஆகச் சொல்றி யேப்பா? அதென்ன கணக்கு? ஒரு வாக்கியம்கிற நிபந்தனே எதுக்கு? மாறியிருக்கிருரா இல்லேயான்னு உங்கப்பாவைக் கவனிச்சு முடிவு பண்ணிளுப் போருதா?''

''அது ரொம்பச் சிக்கல்! அந்த ஒரு வாக்கியத்தை நீங்க சம்மதிச்சா இப்பவே எழுதிக் காண்பிக்க நான் தயார்...''

''எங்கே எழுதிக் காட்டு! பார்க்கலாம்.''

குமரேசன் தன் சட்டைப் பையிலிருந்து ஒரு துண்டுத் தாளே எடுத்து அவசரமாக இரண்டே இரண்டு சொற்களே எழுதி ஒரு கேள்விக் குறியையும் முடிவில் போட்டு அவரிடம் காட்டினன். அதைப் படித்துவிட்டு, "இதுக்கு என்ன அர்த் தம்? இந்த ரெண்டு வார்த்தையைத்தான் அவர் முதல்லே கேட்பார்னு சொல்றியா?''

''ஆமாம்! இப்படிக் கேட்டார்னு நீங்க எனக்குப் பந்தயத் தொகை தரணும். இப்படிக் கேட்காவிட்டாலும்—வேறு எப்படிக் கேட்டாலும் நான் உங்களுக்குப் பந்தயத் தொகை யைத் தரணும். தந்து விடுவேன்.''

''அப்படியானு எனக்குத்தான் சான்ஸ் அதிகம். சம்மதிக் கிறேன், என்றார் ஆடிட்டர்.

திட்டமிட்டபடியே அந்தத் துண்டுத் தாளே ஒரு கவரில் போட்டு நாலு முனையிலும் நடுவிலும் அரக்கு சீல் வைத்து விவரம் சொல்லி இருவருமாகக் குப்தாவிடம் போய்க் கொடுத் தார்கள்.

குப்தா கேட்டான்: ''இதிலே நான் உங்க ரெண்டு பேருக்கும் ரெஃப்ரியா? விரக்தியிலே இரண்டு பேருமாச் சேர்ந்து ரெஃப்ரியை உதைக்க மாட்டீங்களே?''

"அதெல்லாம் உங்களுக்கு எந்த அபாயமும் வராது. பிளேன்ல இருந்து இறங்கினதும் எங்கப்பா பேசற வாக்கியமும் இந்த சீல்டு கவருக்குள்ள எழுதி வச்சிருக்குற வாக்கியமும் ஒண்ணு இருந்தா நான் ஜெயிக்கிறேன். இல்லாட்டி மிஸ்டர் அனந்த் ஜெயிக்கிறார்," என்றான் குமரேசன்.

"சரி! உங்க இரண்டு பேரிட்டவும் பணப் புழக்கம் அதிகமா இருக்குன்னு நினைக்கிறேன். அதான் பந்தயம் கிந்தயம்னு ஐயாயிரம் ரூபாயை வாரி விடறீங்க!"

"ஐயாயிரம் ரூபாய் மட்டும் முக்கியமில்லே! இதிலே தெரியற முடிவு யார் நிஜமான அறிவுஜீவிங்கிறதைத் தீர்மானம் பண்ணிடும்," என்று குமரேசன் சொன்னவுடன், "இந்தாப்பா குமரு, எனக்கு ரூபாய் கிடைச்சாலே போதும். இந்த அறிவு ஜீவி அது இது எல்லாம் நீயே வச்சுக்க..." என மறுத்தார் ஆடிட்டர்.

"கவலையே படாதீங்க! பணம், அறிவு ஜீவிப் பட்டம் ரெண்டுமே எனக்குத்தான்," என்று தீர்மானமாகப் பதில் வந்தது குமரேசனிடமிருந்து.

"அப்படி என்னதான் இதுக்குள்ளே எழுதி சீல் வச்சிருக்கீங்க? நான் பிரிச்சுப் பார்க்கலாமா?"

"இப்பப் பிரிக்கப்படாது மிஸ்டர் குப்தா! எங்கப்பா வந்து இறங்கி முதல் வாக்கியத்தைப் பேசினதும் பிரிக்கலாம்."

"படு மர்மமாக இருக்கிறதே?"

"மர்மம்தான்! கவரைப் பத்திரமாக வச்சிக்குங்க. சீல் உடைஞ்சிருந்தா ஒத்துக்க மாட்டோம்."

"பயமுறுத்தாதீங்க. பத்திரமா இருக்கும்," குப்தா இருவருக்கும் உறுதி கூறி அனுப்பினான். அவனிடம் கவரை அளித்துவிட்டுத் திரும்பும்போது மறுபடியும் ஆடிட்டர் குமரேசனைப் பிடித்துக் கொண்டார்.

''அது எப்படி அப்பா அத்தனை கரெக்டா இப்படித்தான் எங்கப்பா கேட்பார்னு என்னமோ கம்ப்யூட்டர்லே புரோக்ராம் பண்ணிவச்சு ஆன்ஸர் வரவழைச்ச மாதிரி உன்னாலே எழுதிக் குடுக்க முடியுது?''

''ஆடிட்டர் சார்! அதுதான் பட்டிமன்ற மூளை! எதிரி என்ன பேசுவார்னு தீர்மானிச்சு முன்கூட்டியே அதைச் சமாளிக்க நம்மைத் தயார் பண்ணிக்கிற சாமர்த்தியம் பட்டி மன்றங்கள் எனக்குக் கற்றுத் தந்த செல்வம்.''

"சும்மாப் புருடா விடாதே அப்பனே! இதிலே என்னமோ இருக்கு. இல்லாட்டி நீ இத்தினி துணிச்சலாப் பந்தயம் போடமாட்டே?''

''நீங்க மெல்ல இப்போ 'பேக்' அடிக்கிற மாதிரித் தெரியுதே ஆடிட்டர் சார்! விஷயம் முடிஞ்சுது. இனிமேல் பந்தயம் பந்தயம்தான். இப்போ வேறே விஷயம் எதிருச்சும் பேசுங்க. இது போதும்'' என்றான் குமரேசன். ஆடிட்டருக்குத் தைரியமாகவும் இருந்தது; பயமாகவும் இருந்தது.

## 19

கோட்டயம் இன்ஸ்டிட்யூட்டில் விசாரித்துத் தேவ சேனாவின் பெற்றோர் விலாசத்தை வாங்கி அவர்கள் ஊரான இரிஞ்சால குடாவுக்குப் போனபோதுதான் ஆடிட்டரும் தண்டபாணியும் வேறொரு புது உண்மையைத் தெரிந்து கொள்ள முடிந்தது. இ. ஆர். எம். தேவசேனா என்ற அவளு டைய முழுப் பெயர் இரிஞ்சால குடா ராபின்ஸன் மேரி தேவ சேனா, என்பது என அறிந்ததும் இதை ஏன் குமரேசன் தங்களிடம் முன்பே சொல்லவில்லை என வியந்தார்கள் அவர்கள்.

அவர்களுக்கு இந்தப் புது விஷயம் சிறிது அதிர்ச்சியைக் கொடுத்தது. தேவசேனாவின் பெற்றோர் பரமஏழைகள், தந்தை

ராபின்சன் ஒரு மரம் அறுக்கிற ஸா மில்லில் வேலை பார்த்தார். தாயும் அதிலேயே கூலி வேலை செய்தாள். மொத்தம் ஆறு பெண்கள் அவர்களுக்கு. தேவசேனாவின் சம்பளம் இவர்களுக்குப் பெரிய உதவியாயிருந்திருக்கும் எனத் தோன்றியது.

ஆனால் இந்தக் கல்யாணத்தில் அவர்களுக்கு ஒன்றும் ஆட்சேபணை இருக்கவில்லை. "அவள் எங்கேயாவது சுகமா ஜீவிச்சால் எனிக்கு அது மதி" என்றார் ராபின்சன்.

"நீங்க இண்டு கஸ்டம்ஸ்படி மேரேஜ் பண்ணிக்கிறதிலே கூட ஆட்சேபணை இல்லே, ஆனா அதுக்கப்புறமாவது மேரேஜை ரிஜிஸ்டர் பண்ணிடணும். அது எங்களுக்கும் ஸேஃப்ட்டி" என்றார். கல்யாணத்துக்கு மூன்று நான்கு பேர் வருவதாக ஒப்புக்கொண்டார்கள்.

"வந்து போகச் செலவுக்கு இருக்கட்டும்" என்று ஆடிட்டர் ஐந்நூறு ரூபாய் ரொக்கமாக எடுத்துக் கொடுத்த போது உபசாரத்துக்காகக் கூட யாரும் வேண்டாம் என்று மறுக்கவில்லை.

இவர்கள் ஊர் திரும்பியதும் குமரேசனைத் தனியாகக் கூப்பிட்டு விவரம் சொன்னதும் அதில் அவன் எந்த அதிர்ச்சியும் அடையவில்லை.

"ஆமாம்! அது கிறிஸ்டியன் கேர்ள்தான். இதுலே நான் எந்த வேற்றுமையையும் உணரலே. அதனாலே உங்ககிட்ட சொல்லவும் விருப்பலே," என்றான்.

"அவ ஃபாதர் அதாவது உன்னோட வுட் பீ ஃபாதர் இன்லா மிஸ்டர் ராபின்ஸன் ஒரு ஸா மில்லிலே மரம் அறுக்கிற தொழிலாளி."

"இப்படி ஒரு தொழிலாளியின் மகளை மணக்கிறதுக்காகப் பெருமைப் படறேன். என் தங்கை ஒரு பெரிய முதலாளி மகனை மணக்கிறாள். நான் ஒரு பரம ஏழைத் தொழிலாளியின் மகளை மணக்கிறேன். இரண்டு கல்யாணமும் ஒரே மேடையிலே நடக்குது."

"சும்மா எங்களுக்கு தெரிஞ்ச தகவல்களை உனக்கு மறைக்காமே எல்லாம் சொல்லணும்கிறதுக்காக இதைச் சொல்றோம். தப்பா நெனைச்சுக்காதே. வீ. ஆல் அக்ரி வித் யூ" என்றார் ஆடிட்டர்.

கல்யாணப் பத்திரிகைகள் அச்சாயின. மண விழா முழுவதையும் தன் பொறுப்பில் வீடியோ எடுக்க இவர்களுக்கு வேண்டிய ஒரு புரொட்யூசர் முன்வந்தார். இரட்டை நாதஸ்வரம், மாலையில் நாட்டியக் கச்சேரி எல்லாம் ஏற்பாடு ஆயிற்று. குமரேசன் விரும்பியபடி இரவில் ஒரு பட்டிமண்டபம் வேறு ஏற்பாடு ஆகியிருந்தது.

"அப்பாவை வரவேற்க ஏர்போர்ட் போக வேண்டிய நேரத்தில் நான் தேவசேனாவுக்கும் அஜீத் பார்கவிக்கும் தாலி கட்டிக்கிட்டிருப்போம். அதனாலே நாங்க அவரை வரவேற்க முடியாது. குப்தா சார் உங்ககூட ஆடிட்டர் வருவார். மறக்காமல் அந்த சீல்டு கவரை எடுத்திட்டுப் போங்க. எனக்கு ஒரு ஐயாயிரம் ரூபாய் வரும்படி இருக்கும்" என்றான் குமரேசன்.

"சும்மா ரீல் விடாதே! அது உனக்குத்தான்னு என்ன உறுதி? வரும்படி எனக்குக்கூட இருக்கலாம். உனக்கு நஷ்டமாகவும் இருக்கலாம். குருட்டாம் போக்கிலே கெஸ் பண்ணி இதைத்தான் பேசுவார்னு ரெண்டு வார்த்தையை நீயா எழுதிக் கொடுத்துட்டாப்லே ஆச்சா?" என்று ஆடிட்டர் குறுக்கிட்டுச் சீறினார்.

"பார்க்கலாமே?" என்று அழுத்தலாகப் பதில் சொன்னான் குமரேசன்.

"இந்தியாவில் அவர் லாண்ட் ஆகிற தினத்தன்று பேப்பர்களில் வருகிற மாதிரி விளம்பரம் கொடுக்கணுமே? குமரேசா! தமிழில் அழகா ஒரு டிராஃப்ட் எழுது."

"என்னன்னு எழுதறது, ஆடிட்டர் சார்? விவரம் சொல்லுங்க."

''15—4 அன்று இரவு 12 மணிக்கு அவர் மெட்ராஸ்லே இறங்கறார். கஸ்டம்ஸ் ஃபார்மாலிட்டிஸ் முடிஞ்சி அவர் வெளியேற இரவு 2 மணி ஆகும். காலையிலே அஞ்சு மணிக்கு மதுரை ஃப்ளைட்டிற்கு போர்டிங் பாஸ் கொடுப்பாங்க. 6 மணிக்கு டேக் ஆஃப். ஏழு முப்பதிதைஞ்சுக்கு மதுரை லேண்டிங். ஆறே காலுக்கு நம்ம முகூர்த்த நேரம்.''

''இதெல்லாமா விளம்பரத்திலே வரணும்?''

''இந்தக் கிண்டல்தானே வேண்டாம்கிறது? 16—4. அன்று காலைப் பேப்பரில் விளம்பரம் வரணும். அது மாதிரி எழுது.''

'வெளிநாடுகளில் வெற்றி வாகை சூடிப் பயணம் முடித்து வரும் உயர்திரு சிவவடிவேலு அவர்களையும் லேடி சிவவடிவேலு அவர்களையும் வரவேற்கிறோம்.

இப்படிக்கு,
மகள் பார்கவி
மகன் தண்டபாணி, குமரேசன்
மற்றும் ஊழியர்கள்'

—என்று எழுதி, ''சரியா இருக்கான்னு பாருங்க,'' என்று ஆடிட்டரிடம் நீட்டினான் குமரேசன்.

''அப்ரப்ட்டா பார்கவின்னு போடாதே! அருமை மகள் குமாரி பார்கவி அல்லது செல்வி பார்கவின்னு போடு.''

''தப்பு. விளம்பரம் மத்தவங்க கண்ணிலே படற சமயத்திலே சட்டப்படி அவள் திருமதி பார்கவி அல்லது பார்கவி அஜீத்குமார் ஆயிடறாள்.''

''அப்போ எல்லோர் பேரையும் போட்டுடுப்பா.''

''ஒகோ! உங்க பேரை இன்னும் நான் போடலியே? எத்தனை பெரிய மடையன் நான்! கொடுங்க! திருத்திக்

கொடுத்துடறேன்,'' என்று அந்தத் தாளை வாங்கி மறுபடி புதிதாய் எழுதலானான்.

இப்போது இப்படிக்கு என்பதன் கீழே பெயர்கள் கூடி யிருந்தன. 'திரு. சந்திரஜீத் குப்தா—திருமதி சுஷ்மா குப்தா, குருசரண் வர்மா, ஆடிட்டர் அனந்த், மகள் பார்கவி, ஆஜீத் குமார், குமரேசன்—தேவசேனா குமரேசன், தண்டபாணி, திருமதி தண்டபாணி, கடுக்கையூர் ஜோதிடர் கண்ணபிரான் மற்றும் விசுவாச ஊழியர்கள்'' என்று போட்டு அவரிடம் கொடுத்தான்.

குமரேசன் விளம்பரத்தை எழுதிப் பேப்பர்களுக்கு அனுப்ப ஏற்பாடு செய்தான்.

கல்யாணத்துக்கு ஒவ்வொருவராக வர ஆரம்பித்தனர். வீடும், ஓட்டலும் களை கட்டின. சில சூப்பர் ஸ்டார் நடிகர் களும், நடிகைகளும் குருபுரமே வந்துவிட்டதால் பார்கவியில் திருவிழாக் கூட்டம் கூடிவிட்டது. திருமணத்துக்கு முந்திய நாள் குருபுரமே தேர்த் திருவிழாவுக்குத் தயாரானது போல் தயாராயிருந்தது. எங்கே பார்த்தாலும் சீரியல் செட் ஒளி விளக்குகள். ஊர் முழுவதும் பார்கவி—குமரேசன் அவர்களு டைய திருமணம் பற்றிய பேச்சு. மறுநாள் காலை முகூர்த்த வேளையில் எல்லோருமே மதுரை விமான நிலையம் போக முடியாது என்பதால் சிவவடிவேலு தம்பதிகளை வரவேற்க ஆடிட்டரும் குப்தாவும் மட்டும் போக இருந்தனர்.

## 20

அதிகாலையில் முகூர்த்தம் முடிந்த சூட்டோடு ஆடிட்ட ரும் குப்தாவும் சிவவடிவேலு தம்பதிகளை வரவேற்கக் குருபுரத்திலிருந்து மதுரை விமான நிலையம் புறப்பட்டனர். மதராஸ் டு மதுரை ஃப்ளைட் டேக் ஆஃப் டயமே இரண்டு மணி தாமதம் என்று காலை நாலு மணிக்கே அவர்களுக்குச் சென்னை

யிலிருந்து டிராவல் ஏஜென்ஸீஸ்காரர்கள் டெலிபோன் மூலம் சொல்லிவிட்டிருந்தனர். அதனால் குருபுரத்திலிருந்தே முகூர்த்தம் முடிந்து கேசரி, இட்டிலி, வடை சாப்பிட்டுவிட்டுப் புறப்பட முடிந்தது.

இவர்கள் மதுரை போன பின்பும் நேரம் இருந்தது. ஆடிட்டரும் குப்தாவும் அம்மன் சந்நிதிப் பூக்கடைக்குச் சென்று, இரண்டு பெரிய ரோஜாப்பூ மாலைகள் வாங்கிக் கொண்டார்கள். தங்கள் போதாத காலம் ஒருவேளை சிவவடிவேலு பிளேனி லேயே பேப்பர் கீப்பர் பார்த்திருந்து, 'இதெல்லாம் யாரு? பார்கவி அஜீத்னு போட்டிருக்கீரே, அவளுக்கு எப்போ கல்யாணம் ஆச்சு? இந்த பயல் குமரேசன் பேரோட தேவ சேனான்னு ஒட்ட வச்சிருக்கீரே அது யாரு? குருசரண் யாரு''ன்னு கேட்டால் நிதானமாக எப்படி எப்படித் தொடங்கி இருவருமாக அவருக்குச் சொல்லிக் 'கன்வின்ஸ்' செய்வது என்று பலமுறை ரிஹர்ஸல் பார்த்துக் கொண்டார்கள், அவர் கள். நெஞ்சு படக் படக் என்று அடித்துக் கொண்டது. ஒரு வில்லனை எதிர்கொள்ளும் கதாநாயகராகத் தவித்தனர்.

மதுரை விமான நிலையத்தில் கூட்டமே இல்லை. ஃப்ளைட் லேட் என்பதால் அதற்காகக் காத்திருந்த பயணிகள் கூடக் கான்ஸல் செய்துவிட்டுப் போயிருந்தனர். பதினோரு மணிக்கு வந்து திரும்பவும் புறப்பட்டு மெல்ல மெட்ராஸ் போகிற விமானத்தைவிட அதிகாலை வைகையில் போய் இரண்டு மணிக்குள் சென்னையை அடைந்து விடலாம் எனப் பயணிகள் எண்ணியிருக்கக் கூடும். சென்னையிலிருந்து அதிகாலையில் மதுரை வந்து மறுபடி திரும்பச் சென்னை போகிற அந்த விமானம் அன்று சென்னையிலிருந்தே தாமதமாகப் புறப்பட்டி ருந்ததால் எல்லாமே தாறுமாறாகக் குளறுபடி ஆகி இருந்தது.

சென்னையிலிருந்து வருகிற விமானம் சில விநாடிகளில் தரை இறங்கும் என்பதை விமான நிலைய ஒலிபெருக்கியில் அறிவித்தார்கள். தாம் வந்து இறங்குகிற விமானத்தையே தாமதமாக்கக் கூடிய ஆற்றல் சிவவடிவேலுவுக்கு இருந்தாற்

போலத் தோன்றியது. ''இவரைக் கொண்டு போய் நிறுத்திப் புதுமணத் தம்பதிகளை வாழ்த்தச் சொல்லி அத்தனை விருந்தாளிகள் முன்னாடியும் ஏதாவது ஸீன் கிரியேட் பண்ணிட்டார்னு ரசாபாசமாப் போயிடுமே மிஸ்டர் அனந்த்!''

''ஆள் மாறியிருந்தார்னு அப்படி எல்லாம் செய்துவிட மாட்டாருங்கிற நம்பிக்கை இருக்கு.''

''மாறலேன்னு வச்சுப்போம். அப்போ என்ன பண்ணறது?''

''அதுக்கும் ஒரு எமெர்ஜென்ஸி வழி வச்சிருக்கேன். சிவவடிவேலுவுக்கு மூக்குக் கண்ணாடி இல்லாட்டி சட்னு ஆளை அடையாளம் தெரியாது. கல்யாண மேடையிலே அழைச்சுட்டுப் போய் நிறுத்தி அட்சதையைக் கையிலே கொடுக்கிறதுக்கு முந்தியே கண்ணாடியைக் காணாமல் ஒளிச்சு வச்சிடலாம்.''

''அதனாலே கொஞ்ச நேரம்தானே சமாளிக்க முடியும்? அப்புறம் என்ன பண்ணுவது?''

''சபை நடுவிலே மனுஷன் கத்தி இரையாமல் பண்ணிட்டா அப்புறம் வீட்டுக்குள்ளே நடக்கிற கூப்பாட்டைப் பத்திக் கவலை இல்லே. அட்சதை போட்டு முடிச்சதுமே அவருக்குப் பிரயாணக் களைப்பாலே உடல் நலம் இல்லேன்னு உதவிக்கு ஒரு மனுஷனைப் போட்டு வீட்டிலே தள்ளி அடைச்சு வச்சிடலாம்.''

''மிஸஸ் சிவவடிவேலுவை என்ன பண்ணுவீங்க? அவங்க ரிவோல்ட் பண்ண மாட்டாங்களா?''

''இதெல்லாம் பிடிக்காட்டியும் சபை நடுவிலே ரசாபாசம் பண்ண மாட்டாங்க. இங்கிதமாக நடந்துப்பாங்க. அந்தம்மாளைப் பத்திக் கவலை இல்லே.''

''கொஞ்சம் கஷ்டமான வேலைதான்.''

''ஒரு கஷ்டமும் இல்லை. அவருக்கு எதுவும் தெரியாது. பேப்பர் பார்க்க மாட்டார். உங்களுக்குச் சிரமமாயிருக்குமே. இருந்தாலும் போற வழியிலே ஆசீர்வாதம் பண்ணிட்டுப் போயிடலாம்னு கொண்டு போய் என்னன்னு சொல்லாமே அட்சதையைக் கொடுத்துக் காரியத்தை முடிச்சிடலாம்.''

விமானம் கீழிறங்கி ஓடுபாதையில் விரைந்து வரும் ஓசை கேட்டது. குப்தாவும், ஆடிட்டரும் மாலைகளோடு எழுந்தார்கள். ரகசியம் பரம ரகசியம் என்பதால் டிரைவர் கூடக் கிடையாது. அனந்தே காரை ஓட்டி வந்திருந்தார். 'ஆப்பரேஷன் நியு பார்கவி'யை விடக் கஷ்டமான ஒரு வேலையில் அவர்கள் இப்போது இறங்கியிருந்தார்கள். நிலைய அதிகாரியிடம் அனுமதி பெற்று விமானம் நின்ற இடத்திற்கே கூடப் போக முடிந்தது. சிவவடிவேலு தம்பதி இறங்குவதற்கு முன் வேறு யார் யாரோ இறங்கினார்கள்.

கடைசியாகச் சிவவடிவேலுவும் ஆச்சியும் மெதுவாக இறங்கினார்கள். சூட், கோட், கழுத்திலே டை கட்டிய தோற்றத்தில் விமானத்தின் லேடரில் அவர் ஒவ்வொரு ஸ்டெப்பாக வைத்து இறங்கியபோது நடைதான் அந்த சூட் கோட்,டைக்கு ஒவ்வாத நாட்டுப்புறத்து நடையாக இருந்தது. ஆச்சி நீல நிறக் காஞ்சீபுரம் பட்டுப் புடவை அணிந்து எப்போதும் போல் தோன்றினாள். சிவவடிவேலுவை நோக்கி ஆடிட்டரும், குப்தாவும் படு உற்சாகமாகக் கையை ஆட்டோ ஆட்டென்று ஆட்டினார்கள். அவர் பார்வை எங்கோ பார்க்கத் தோன்றியது. பராக்காக நோக்கியது. திருவிழாவில் காணாமல் போன குழந்தை பெற்றோரைத் தேடி விழிகளைச் சுழல விட்டுப் பதறுகிற மாதிரி யாரையோ அவர் கண்கள் தேடின. கடைசிப் படியில் இறங்கி ரன்வேயில் தரை மீது காலை வைத்த பின்பு தான் சிவவடிவேலு இவர்கள் இருவரும் மாலையோடு நிற்பதைப் பார்த்தார். ஆச்சி மேலேயே இவர்களையும் இவர்கள் கை அசைப்பதையும் பார்த்துப் பதிலுக்குக் கையசைத்து விட்டாள். சிவவடிவேலு கீழே இறங்கிய பின்பும் அவர் கண்

கள் வேறு யாரையோ தேடி வட்டமிட்டன. குப்தா, அனந்த் இருவரும் மாலைகளோடு தம்மை நெருங்குவதைப் பார்த்த பின்பும் அவர் கண்கள் வேறு யாரையோ தேடிக் கொண்டிருந்தன.

''மிஸ்டர் சிவவடிவேலு! மிஸஸ் சிவவடிவேலு! வெல்கம் டு குருபுரம்!'' குப்தாவும், அனந்துவும் அவர் கழுத்தில் மாலையைப் போட்டு அதை அப்படியே ஆச்சி கழுத்தில் மாற்றும்படி அவரையே வேண்டியபோதுகூட எதுவும் பதிலுக்கு விசாரிக்காமல் இயந்திரகதியில் தம் கழுத்தில் விழுந்த இரு மாலைகளையுமே ஆச்சி கழுத்துக்கு மாற்றிவிட்டுப் பார்வையை அவர்களுக்கு அப்பால் விரைய விட்டபடி, ''கரும்பாயிரம் வரலியா?'' என்றார் சிவவடிவேலு.

அவரோ குப்தாவோ இதற்குப் பதிலே சொல்லாமல், ''ஹௌ வாஸ் யுவர் டிரிப்? டிட்யூ ஹாவ் எ நைஸ் டிரிப்? உங்கள் பிரயாணம் எல்லாம் சௌக்கியமா?'' என்று தமிழிலும், ஆங்கிலத்திலுமாக விசாரணையைத் தொடங்கினார்கள்.

அவரோ மறுபடியும், ''கரும்பாயிரம் எங்கே? அவன் வரலியா? அவனைக் காணலியே?'' என்று கிளிப்பிள்ளை மாதிரி ஒரே வாக்கியத்தை அரற்றிக் கொண்டிருந்தார்.

குப்தாவின் சட்டைப் பையிலிருந்த சீல்டு கவரை வாங்கி உடைத்துப் பிரித்துப் படித்தார் ஆடிட்டர் அனந்த். கவருக்குள்ளே இருந்த துண்டுத் தாளில் 'கரும்பாயிரம் வரலியா?' என்று குமரேசனின் கையெழுத்தில் எழுதியிருந்தது.

''என்ன? பந்தயம் என்ன ஆச்சு?'' குப்தா ஆவலோடு விசாரித்தான்.

''குமரேசன் வாஸ் கரெக்ட். ஐ லாஸ்ட் இட்,'' என்று சோகமாக ஆடிட்டரிடமிருந்து பதில் வந்தது.

"சரி! ஒரு தோல்வி போதும்! இப்போ அடுத்த தோல்வி வராமல் உஷாராகுங்க, ஆசீர்வாத விஷயமா ஏற்பாடு பண்ணுங்க" என்று ஆங்கிலத்தில் சொன்னான் குப்தா.

"இதோ ஒரு நிமிஷத்திலே முடிக்கிறேன். நீங்க கொஞ்சம் ஒல்ட் மேனை எங்கேஜ் பண்ணிக்குங்க, என்று கூறியபடியே ஆச்சியை ஜாடை காண்பித்துத் தனியே அழைத்துச் சென்றார் ஆடிட்டர். ஆச்சியிடம் சுருக்கமாக விஷயத்தைச் சொல்லி "மகாலட்சுமி மாதிரி இருக்கீங்க. மங்களகரமான விஷயம். நீங்கதான் ஒத்துழைக்கணும்," என்றார் அனந்த். ஆச்சியை அவர் தாராளமாகப் புகழவே செய்தார்.

"ஒண்ணும் கவலைப்படாதீங்க. ஆடிட்டர், இந்த மனுஷன் கொஞ்சம் கூட மாறவில்லை. குருபுரத்திலேயிருந்து ரெண்டு மூணு மணி நேரத்துக்கு மதுரை போயிட்டுத் திரும்பினால் கூடத் திரும்பி வந்ததும் தான் இல்லாதபோது இங்கே என்ன நடந்ததுன்னு கரும்பாயிரத்தைக் கூப்பிட்டுக்கேட்கிற பழக்கம். அவனை உளவறிய ஆளாகப் பயன்படுத்திக்கிற பழக்கமெல்லாம் ஆதி நாளிலிருந்தே இந்த மனுஷன் கிட்டே உண்டு. கோள் சொல்லிக் கோள் சொல்லிப் பெத்த பிள்ளைகளுக்கும் அப்பனுக்கும் ஆகாமல் பண்ணினதே அந்தக் கரும்பாயிரம் தடியன் தான், இப்பவும் அதுக்குத்தான் அந்தக் கடன்காரன் வந்திருக்கானுன்னு அரிப்பெடுத்துப் போய்த் தேடறது கிழம்."

"கரும்பாயிரத்தை நாங்க வேலையை விட்டே போகச் சொல்லியாச்சு! அவன் குருபுரத்திலேயே இப்போ இல்லே ஆச்சி, மலை மேலே எங்கேயோ கேண்டீன் நடத்தறானும்."

"நல்ல காரியம் பண்ணினீர். இனிமே இந்தக் குடும்பம் க்ஷேமமாக இருக்கும். அப்பனுக்கும் மகனுக்கும் நடுவிலே வத்திவச்சுக் குச்சி முறிச்சுப் போட்டுக் கோள் சொல்லிப் பிழைக்கிற கிராதகன் அந்தக் கரும்பாயிரம்."

"சரி! இப்போ சபை நடுவிலே ஆசீர்வாதம் பண்ணணுமே ஆச்சி?"

"சமாளிச்சிடலாம். இவருக்கு வெள்ளெழுத்துப் படிக்க, ஆள் யாருன்னு பார்க்கத் தனித் தனியே இரண்டு மூக்குக் கண்ணாடி. மெட்ராஸ்லே சிங்கப்பூர் பிளேனிலேயிருந்து இறங்கினதும் படிக்கிற கண்ணாடியை உள்ளே வாங்கி வச்சுப் பூட்டிட்டதாலே மதுரை வர்றப்போ இந்த மனுஷன் பேப்பர் எதுவும் படிக்கலே. நான்தான் படிச்சேன். ஆனால் இவர் கிட்டே ஒண்ணும் சொல்லலே. இப்போ ஆள் பார்க்கிற கண்ணாடியையும் நைஸாகப் பறிமுதல் பண்ணிட்டாப் போச்சு! ரொம்ப வேண்டிய கல்யாணம்! ஏர்போர்ட்லே இருந்து போறப்பவே ரெண்டு அட்சதையைப் போட்டு வாழ்த்திட்டுப் போயிடலாம்'னு நீங்களே சொல்றமாதிரிச் சொல்லுங்க. மத்ததை நான் பார்த்துக்கறேன்" என்றாள் ஆச்சி.

ஆடிட்டர், ஆச்சி இருவரும் குப்தாவும் சிவவடிவேலுவும் நின்ற இடத்துக்குப் போனபோதும்கூட, 'கரும்பாயிரம் வரலியா?' என்கிற அதே கேள்வியைத்தான் குப்தாவிடம் பதினைந்தாவது தடவையாகக் கேட்டுக் கொண்டிருந்தார் கிழவர்.

அங்கே இவர்கள் போய்ச் சேர்ந்ததும் மறுபடி ஆடிட்டரிடம் கேட்டார். ஆடிட்டர் வேறு ஏதோ பேசி மழுப்பினார். "இந்தாங்க...முகத்திலே ஒரேயடியா எண்ணெய் வடியுது. என் கிட்டே கண்ணாடியைக் கழட்டிக் கொடுத்திட்டு வாஷ்பண்ணித் தொடைச்சிட்டு வந்திடுங்க. வீட்டுக்குப் போறதுக்கு முன்னாடி இங்கேயிருந்து போறப்பவே ரொம்ப வேண்டிய கல்யாணம் ஒண்ணுக்குப் போய் ஆசீர்வாதம் பண்ணிட்டுப் போகணும்கிறாங்க" என்று கூறி ஆச்சி அவரது கண்ணாடியைப் பறிமுதல் செய்தாள். அனந்த் கையைப் பிடித்துத் தடுக்கி விழாமல் அவரை விமான நிலைய வாஷ் பேஸினுக்கு அழைத்துச் சென்றார்.

இந்த மனுஷன் ஆறு மாசத்துக்கு அப்புறம் சொந்த ஊரிலே வந்து இறங்கினால் மகள் மகன்கள், சுற்றத்தார் வேண்டியவர்கள் எதிரே வந்து மாலையோடு நிற்பவர்களைப் பற்றிக்கூட க்ஷேமலாபம் விசாரிக்காமல் கரும்பாயிரம் வரலியா என்றே பிதற்றிக் கொண்டிருப்பதைப் பார்த்து ஆடிட்டருக்கே 'சே!' என்றாகி விட்டது.

கார் குருபுரம் போகிறபோது, "நௌ எ டேஸ் பார்கவி இஸ் யேர்னிங் மோர் ப்ராஃபிட். வீ ஹாவ் கிளியர்டு ஓல்டு லோன்ஸ்," என்று குப்தா சொல்லிக் கொண்டு வந்ததை எல்லாம் காரை ஓட்டியபடியே ஆடிட்டர் மொழிபெயர்த்துத் தமிழில் சொல்லியும் சிவவடிவேலு, "கரும்பாயிரம் வரலியா?" என்பதிலேயே இருந்தார்.

மிகவும் தேர்ந்த பிஸினஸ் டாக்டரான சந்திரஜித் குப்தா எம். பி. ஏ., சி. எ. எஃப்., ஆர். சி. எஸ். இப்போது தொழிலுக்குச் சிகிச்சை முடிந்து நாட்டப்பட்ட முதிய நோயாளியான தொழிலதிபருக்குச் சிகிச்சை தேவைப்படுகிறது என்ற நிலைமையை உணர்ந்தார். திட்டமிட்டபடி ஆசீர்வாத நாடகத்தை நிமிடத்தில் முடித்து, "பிரயாண அலுப்பு! சிவவடிவேலு இஸ் நாட் டூயிங் வெல். இன்னும் நாலைந்து நாள் கம்ப்ளீட் ரெஸ்ட்லே இருக்கணும்," என்று எல்லாரிடமும் சொல்லி அவரையும் ஆச்சியையும் வீட்டில் கொண்டு போய் விட்டுவிட்டு அவரைக் கவனிக்கிற பொறுப்பை ஆச்சியிடம் விட்டு விட்டுத் திரும்பினார், ஆடிட்டர். ஆப்பரேஷன் நியு பார்கவி! திட்டத்தின் கிளைமாக்ஸ் சீனை வெற்றிகரமாக முடித்துவிட்டு நிம்மதியாக ஆளுக்கு ஒரு ஸ்ட்ராங் காப்பியை அருந்தினர்கள் குப்தாவும் ஆடிட்டரும்.

அன்று மாலையில் கல்யாண ரிசப்ஷனின் போது, "என் சிகிச்சை முடிந்து விட்டது! போத் த பார்கவிஸ் ஆர் இன் வெரிகுட் கண்டிஷன். கீப்பிங் ஸவுண்ட் ஹெல்த் அண்ட் யேர்னிங் மோர் ப்ராஃபிட்! நாளை நானும் சுஷ்மாவும் ஊர் திரும்புகிறோம்," என்று சொல்லிக் கொண்டிருந்த குப்தாவை இடைமறித்து, "பார்கவி லாபம் தருகிறாள். ஆனால் பார்கவியோட ஆடிட்டர் ரூபாய் ஐயாயிரம் நஷ்டமடைகிறார்," என்று குமரேசனுக்குப் பந்தய வகையில் தரவேண்டிய ஐயாயிரத்துக்கு எடுத்திருந்த கிஃப்ட் செக்கைக் குப்தாவிடம் காட்டினார் அனந்த்.

"நோ நோ! இந்தக் கஞ்சத்தனத்தை நான் அனுமதிக்க மாட்டேன். நீங்க குமரேசனுக்குத் தரவேண்டிய பந்தயப்

பணம் தனி. மேரேஜ் கிஃப்ட் தனி. நோ டு இன் ஒன் பிஸினஸ்,'' என்று குப்தா ஆடிட்டரைக் கண்டித்தான். குப்தா கூறியதைக் கேட்டுத் தண்டபாணி சிரித்தான்.

''மிஸ்டர் குப்தா! இந்தக் கஞ்சத்தனம் ஒரு இன்ஃபெக்ஷன். சிவவடிவேலுவிடமிருந்து தொற்றிக் கொண்டு விட்டது. இருப்பத்தைஞ்சு முப்பது வருஷமா அவரிட்டம் பழகறேன் இல்லியா?'' என்று ஜோக் அடித்தார் ஆடிட்டர்.

''பை த பை, சிவவடிவேலு எப்படி இருக்கிறார்? எனி இம்ப்ரூவ்மெண்ட்?'' என்று ஆடிட்டரைக் கேட்டான் குப்தா.

உதட்டைப் பிதுக்கிவிட்டு ஆடிட்டர் சொன்னார்.

''இப்போ மணி ஏழு! ஆறே காலுக்குக்கூட ஆச்சியிட மிருந்து இங்கே ஃபோன் வந்தது! ஆறு பத்துக்கு நூத்தி எட்டாவது தடவையாகக்கூட, 'கரும்பாயிரம் வரலியா? நான் அவனைப் பார்த்தாகணுமே?'ன்னு தான் கேட்டாராம்.''

''தேறுது! ஹோப்லெஸ் கேஸ்! இனி இதுக்கு ஒரே ட்ரீட்மெண்ட்தான் இருக்கு. 'தசாபுக்தி சரியாகலே. அர்த்தாஷ்டமச்சனி அது இதுன்னுசொல்லி இன்னும் கொஞ்ச நாள் வீட்டை விட்டு வெளியே விடாமலும் வெளியிலேயிருந்து கரும்பாயிரம் மாதிரி யாரையும் உள்ளே விட்டுடாமேயும் அவரைக் கவனிச்சுக்க வேண்டியதுதான்.

''அந்தப் பொறுப்பை ஆச்சியே கவனிச்சிக்கிறேன்னு வாக்களிச்சிருக்காங்க.'' என்றார் ஆடிட்டர். அப்போது தற் செயலாக ரிசப்ஷன் டிரெஸ்ஸோடு தடபுடலாக மாப்பிள்ளைக் கோலத்தில் தேவசேனா சகிதம் அங்கே வந்த குமரேசன், ''என்ன? பந்தயத்திலே தோத்தீங்களா? நான் அப்பவே சொன்னேன், கேட்டீரா?'' என்று ஆடிட்டரை வம்புக்கு இழுத்தான்.

உடனே தணிந்த குரலில் ஆடிட்டர், ''தேவசேனா சமேத சுப்பிரமணிய சுவாமியை ஜெயிக்க முடியுமா அப்பா?'' என்ற படியே கிஃப்ட் செக்கை எடுத்து நீட்டினார்.

''கலலைப்படாதீரும்! உம்ம டாட்டர் மேரேஜின்போது இதை வட்டியோட திரும்பித் தந்துடறேன்,'' என்றான் பழைய பட்டிமன்ற வெற்றிவீரன் குமரேசன்.

(முற்றும்)

